# சங்க இலக்கியப் பின்னணியில் திராவிட மொழி இலக்கியங்கள்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக
முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக அளிக்கப்பெறும்
ஆய்வேடு


ஆய்வாளர்
பி.சேதுராமன், எம்.ஏ., எம்.ஃபில்.,
(பதிவு எண் : 23722/Ph.D.2)

நெறியாளர்
முனைவர் சி.சித்ரா,
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பி.ஜி.டி.ஜே.எம்.சி.,
முதுநிலை விரிவுரையாளர்,
தமிழாய்வுத்துறை






தமிழாய்வுத் துறை
## தேசியக் கல்லூரி
(தேசியக் கல்வித்தர மதிப்பீட்டுக் குழுவின் 'A' தரத் தகுதி பெற்றது)
திருச்சிராப்பள்ளி 620 001


நவம்பர் 2007

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் சி.சித்ரா,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பிஜிடிஜேஎம்சி.,
முதுநிலை விரிவுரையாளர்,
தமிழாய்வுத் துறை,
தேசியக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி–1.

**சங்க இலக்கியப் பின்னணியில் திராவிட மொழி இலக்கியங்கள்** என்னும் தலைப்பில் அமைந்த இவ்ஆய்வு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் தமிழ் முனைவர் பட்டத்திற்காக, திரு.பி.சேதுராமன் அவர்களால் என் மேற்பார்வையின்கீழ் எழுதப்பட்டதாகும். இவ்ஆய்வு இதற்குமுன் வேறெந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

சி. சித்ரா
21/11/2007
நெறியாளர் கையொப்பம்

முனைவர் சி. சித்ரா
எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,பி.ஜி.டி,ஜே.எம்.சி.
விரிவுரையாளர்,
தமிழாய்வுத்துறை, தேசியக்கல்லூரி,
திருச்சிராப்பள்ளி-1.

துறைத்தலைவர் கையொப்பம்
**முனைவர்: கு இராசரத்தினம்,**
எம.ஏ. எம்.ஃபில். பிஎச்.டி.,
துறைத்தலைவர் & இணைப்பேராசிரியர்
தமிழாய்வுத்துறை
தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி-620001

# ஆய்வாளர் உறுதிமொழி

பி.சேதுராமன், எம்.ஏ., எம்.ஃபில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழாய்வுத் துறை,
தேசியக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி–1.

சங்க இலக்கியப் பின்னணியில் திராவிட மொழி இலக்கியங்கள் என்னும் தலைப்பில் முனைவர் சி.சித்ரா, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பிஜிடிஜேஎம்சி., அவர்களின் மேற்பார்வையில் பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வு என்னுடைய சொந்த முயற்சியால் எழுதப்பட்டது. இவ்ஆய்வு இதற்குமுன் வேறெந்த ஆய்வுப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என உறுதி கூறுகிறேன்.

ப. சேதுராமன் 21/11/07
ஆய்வாளர் கையொப்பம்

சி. சித்ரா
21/11/2007
நெறியாளர் கையொப்பம்

முனைவர் சி. சித்ரா
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பி.ஜி.டி.ஜே.எம்.சி.,
விரிவுரையாளர்,
தமிழாய்வுத்துறை, தேசியக்கல்லூரி,
திருச்சிராப்பள்ளி-1.

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்ஆய்வுப் பணிக்கு நெறியாளராக இருந்து அன்போடும், பண்போடும், பாசத்தோடும் என்னை நல்வழிப்படுத்தியும், இவ்ஆய்வு நல்லமுறையில் அமைய எல்லா வகையிலும் உதவிகள் புரிந்த ஆய்வு நெறியாளர் **முனைவர் சி.சித்ரா, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பிஜிடிஜேஎம்சி,** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'சங்க இலக்கியப் பின்னணியில் திராவிட மொழி இலக்கியங்கள்' எனும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வை நிறைவு செய்ய வாய்ப்பளித்த திருச்சிராப்பள்ளி, தேசியக் கல்லூரி முதல்வர் **முனைவர் கு.அன்பரசு, எம்.எஸ்சி., எம்.ஃபில்., பிஎச்.டி.,** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் கு.இராசரத்தினம், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தலைப்பில் ஆய்வை மேற்கொள்வதற்கு மூலகாரணமாக இருந்து அதற்குத் தேவையான அரிய பல செய்திகளையும், கருத்துக்களையும் தந்து என்னை ஊக்கப்படுத்திய தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத் துறையின் முன்னைத் துறைத் தலைவர் **முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திராவிட மொழி இலக்கியங்களில் சில பாடல்களை மொழிபெயர்ப்பு செய்து கொடுத்த தமிழ்ப் பல்கலைக்கழக தெலுங்குத்துறை விரிவுரையாளர் **முனைவர் சாவித்திரி** அவர்களுக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக கன்னடத்துறை முனைவர் பட்ட ஆய்வாளர் **S.விருப்பக்ஸா** அவர்களுக்கும், மலையாளத் துறை முனைவர் பட்ட ஆய்வாளர் **R.கோசி** அவர்களுக்கும் என் நன்றி உரியது.

முனைவர் பட்ட ஆய்வுக்குழுக் கூட்டத்திற்கு வருகை தந்து பல கருத்துகளையும் அறிவுரைகளையும் வழங்கிய திருச்சிராப்பள்ளி பிஷப் ஈபர் கல்லூரி (தன்னாட்சி), தமிழாய்வுத் துறை இணைப்பேராசிரியர் **முனைவர் S.சோமசுந்தரம்** அவர்களுக்கும், உருமு தனலெட்சுமி கல்லூரி (தன்னாட்சி), தமிழாய்வுத்துறை முதுநிலை விரிவுரையாளர் **முனைவர் E.R.இரவிச்சந்திரன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான பல்வேறு நூல்களைத் தந்துதவிய தேசியக் கல்லூரி நூலகர் **P.இராகவன், எம்.ஏ., எம்.எல்.ஐ.சி., எம்.ஃபில்.,** அவர்களுக்கு என் நன்றி உரியது.

ஆய்வுப்பணி சிறப்பாக அமைய ஆராய்ச்சிப் படிப்பு சிறப்பு கல்வி உதவித்தொகை வழங்கிய தமிழ்நாடு அரசின் கல்லூரிக் கல்வி இயக்குநர் அவர்களுக்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய ஆய்வை விரிவாகவும் சிறப்பாகவும் செய்ய J.R.F. உதவித் தொகையை வழங்கிய மைசூர், மனிதவள மேம்பாட்டு அமைச்சகத்திற்கு என் இதயப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தரவுகளைத் திரட்டுவதற்குத் தேவையான பல்வேறு வகையான நூல்களைத் தந்துதவிய அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகத்தார், தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தார், பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகத்தார் மற்றும் சென்னை கன்னிமாரா, ராஜா முத்தையா, தேவநேயப்பாவாணர், உ.வே.சா., மறைமலையடிகள், ஆந்திரா, திராவிடப் பல்கலைக்கழக நூலகத்தார், தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலகத்தார் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**பி.சேதுராமன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| எச். | - | எச்சவியல் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| கி.பி. | - | கிறிஸ்து பிறந்த பின் |
| கி.மு. | - | கிறிஸ்து பிறப்பதற்கு முன் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| த.ஆ. | - | தலைமை ஆசிரியர் |
| தண்டி. | - | தண்டியலங்காரம் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல்.சிறப்பு. | - | தொல்காப்பியம் சிறப்புப்பாயிரம் |
| நற். | - | நற்றிணை |
| நன். | - | நன்னூல் |
| நூா. | - | நூற்பா |
| நெ.வா. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பா. | - | பாடல் |
| பி.இ. | - | பின்னிணைப்பு |
| புற.வெ.மா. | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மேலது. | - | மேலே சுட்டியது |
| மொ.பெ.ஆ. | - | மொழிபெயர்ப்பாசிரியர் |
| p. | - | page |
| pp. | - | pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகில் சிறப்போடு வழங்கப்பெறும் உயர்தனிச் செம்மொழிகளில் தமிழ்மொழியும் ஒன்றாகப் போற்றப்படுகின்றது. அத்தகைய பழைமையும், வளமையும் கொண்ட தமிழ் மொழியிலிருந்துதான் தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற திராவிட மொழிகளான திருந்திய மொழிகள் தோன்றின. இந்நான்கு மொழிகளுக்கு மட்டும்தான் இலக்கியங்கள் உள்ளன. பிற திராவிட மொழிகளான துளு, குடகு ஆகிய மொழிகளுக்கென்று தனிப்பட்ட இலக்கியங்கள் இல்லை.

ஒப்பியல் நோக்கில் பிறமொழிகளையும், பிறமொழி இலக்கியங்களையும் ஆராய்ந்து காணும்போக்கு இன்று மேலோங்கி இருக்கிறது. திராவிட மொழிகள் என அறிஞர்களால் வரையறைப்படுத்தப் பெற்றுள்ள தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளுக்குள் பல்வேறு ஒற்றுமைக் கூறுகள் இருப்பதை ஆராய்ந்து, அவற்றுள் தமிழ் இலக்கியத்தின் நிலை என்ன என்பதை அறிந்து கொள்ள இவ்வாய்வு முனைகிறது.

ஒரு மொழி இலக்கியத்தைக் கற்பதைவிடப் பலமொழி இலக்கியங்களைத் தெரிந்து கொள்வது பல நிலையிலும் சிறப்புடையது என்பது ஒரு பொதுக்கருத்து. ஒப்பியல் இலக்கியக் கல்வி வளர்ந்து கொண்டிருக்கின்ற இக்காலத்தில் பலமொழி இலக்கியங்களோடு தமிழ் ஆக்கங்களை ஒப்புமைப்படுத்திக் காணும் நிலை காணப்படுகின்றது. ஆனால், மிகவும் அண்மையான, நெருங்கிய உறவுடைய மொழிகளோடு இக்கல்வி இன்னும் வளர வேண்டியுள்ளது.

இந்திய நாட்டில் வழங்கும் மொழிகளில், இந்தோ-ஆரிய இன மொழிகளுக்கு அடுத்து மிகுதியான மக்களால் பேசப்படுவன திராவிட

மொழிகள் எனலாம். பல நூற்றாண்டுகளாக வாழ்ந்துவரும் திராவிட மக்களால் பேசப்பட்டு வருகின்ற இம்மொழிகளில் சில இலக்கியம் கண்டவை. பல இலக்கியம் காணாதவை. சில திருந்தியவை. பல திருந்தாதவை. சில சில கோடி மக்களால் பேசப்படுபவை. சில நாட்டிலும் நகரத்திலும் வாழும் மக்களின் மொழிகள், இவற்றைத் தெரிந்து கொள்ளும் உணர்வுடன் தமிழ்மொழியும், தமிழகத்தின் மேற்குத் திசையில் மலையாளமும், வடமேற்கில் கன்னடமும், வடக்கில் தெலுங்கும் என இந்நான்கு மொழி இலக்கியங்களையும் ஆராய வேண்டும் என்னும் விருப்பம் ஆய்வாளர்களிடையே இருந்து வருகின்றது.

ஆரியம் நுழைவதற்குமுன் ஒரே மொழியாக இருந்த தமிழ், ஆரியர் நுழைவுக்குப்பின் தெலுங்கு, மலையாளம், கன்னடம் எனப் பிரிந்து நின்றது. இம்மொழிகளின் அடிப்படையில் நாடுகளும் மக்களும் பிரிந்தனர். தமிழிலிருந்து பிரிந்த மூன்று மொழிகளையும் ஆரியம் விழுங்கியது. ஆனால் அவற்றின் தாய்மொழியாகிய தமிழ் மட்டும் ஆரியத்தின் பிடிப்பில் பலமுறை சிக்கியும், அப்போதைக்கு அப்போது உணர்ச்சி மிக்க தமிழர்களால் காப்பாற்றப்பட்டும் இன்றளவும் தனித்தியங்கும் ஆற்றலை இழந்துவிடாமல் வாழ்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள் வழங்கிய பகுதிகள் சேர்ந்த நாடு சங்ககாலத்தில் திராவிட நாடாக இருந்துள்ளது. மூலத்திராவிடத் தமிழ் மொழியிலிருந்துதான் மற்ற திராவிட மொழிகள் பிரிந்து சென்றன. இவ்வாறு பிரிந்து சென்றாலும் சங்க இலக்கியத்தின் கூறுகள் பல திராவிட மொழிகளில் சிதறிக் கிடக்கின்றன.

திராவிட இலக்கியங்களைப் பற்றி கால்டுவெல், கிரியர்ஸன், ஈராசு பாதிரியார், அகத்தியலிங்கம், வையாபுரிப்பிள்ளை போன்றோர் ஆராய்ந்துள்ளனர். இன்றும் ஆராய்ந்து வருகின்றனர். இலக்கியத் தாக்கம்

என்பதையே ஆய்வுப் பொருளாக எடுத்துக்கொண்டு அஃதுபற்றிய தரவுகளைத் திரட்டித் தொகுத்தளிக்கும் முயற்சி இவ்வாய்வின்வழி மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வுப் பொருள்

திராவிட மொழி இலக்கியங்களைப் பற்றிப் பல்வேறு கோணங்களில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இவ்வாய்வு சங்க இலக்கியங்களின் உத்திகள், உணர்ச்சிகள், கற்பனை, வடிவம், மொழிநடை, தொடர்புகள், உறவுகள், பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கம் போன்றவை திராவிட மொழி இலக்கியங்களில் எவ்வகையில் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன என்ற நிலையில் ஆய்வதையே அடிப்படைப் பொருண்மையாகக் கொண்டுள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

"சங்க இலக்கியப் பின்னணியில் திராவிட மொழி இலக்கியங்கள்" என்பது ஆய்வுத் தலைப்பாகும். தமிழில் வெளிவந்த மொழி பெயர்ப்பு இலக்கியங்களான திராவிட மொழி இலக்கியங்களை மட்டும் எடுத்துக் கொண்டு இவ்வாய்வு ஆராய முற்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்

திராவிட மொழி இலக்கியங்களைப் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் ஆராய்ந்தாலும், மேலும் ஆராய வேண்டிய இடங்கள் காணக்கிடக்கின்றன. சங்க இலக்கியத்தின் தாக்கம் மற்ற கிளை மொழிகளில் எதிரொலிக்கின்றது. ஒவ்வொரு மொழியின் தோற்றம், வளர்ச்சி நிலைகள், சங்க இலக்கியக் கூறுகள் மற்ற மொழிகளின் மரபுகளில் ஒத்துப் போகும் தன்மை, ஒவ்வொரு மொழியின் இலக்கியம் அம்மொழியினரின் பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கம், உறவு நிலை ஆகியவற்றை வெளிப்படுத்தும் சான்றுகளாகத் திகழ்தலைக் கண்டறிதல் போன்றவை ஆய்வு நோக்கமாகக் கொள்ளப்பெறுகிறது.

**ஆய்வு மூலங்கள்**

தமிழ் மொழியில் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு;

தெலுங்கு மொழியில் தொடக்கக்காலம் முதல் தற்காலம் வரையிலான இலக்கியங்கள்;

மலையாள மொழியில் ஆதிகாலம் முதல் நவீன காலம் வரையிலான இலக்கியங்கள்;

கன்னட மொழியில் தொடக்கக்காலம் முதல் நவீன காலம் வரையிலான இலக்கியங்கள்;

தமிழ், தெலுங்கு, மலையாள, கன்னட மொழி இலக்கியப் பொருண்மைகளை முறையாக ஆராய்வதற்குத் துணை செய்யும் வகையிலமைந்த தொல்காப்பியம், தெலுங்கு, மலையாள, கன்னட மொழியிலமைந்த இலக்கண நூல்கள் ஆகியன இவ்வாய்வின் மூலங்களாக எடுத்துக் கொள்ளப்பெற்றது.

**ஆய்வு முறை**

செய்திகளைத் திரட்டிப் பகுத்து ஒப்பிட்டு விளக்குவதால் இது பகுப்பாய்வு முறையிலும், ஒப்பீட்டு விளக்கமுறையிலும் விவரிக்கப் பெறுகிறது.

**கருதுகோள்**

சங்க இலக்கியக் கூறுகளான பொருண்மை, உணர்ச்சி, கற்பனை, வடிவம், மொழிநடை ஆகியவை கிளை மொழிகளில் ஒத்துப்போதல், திராவிட மொழி இலக்கியங்களுக்கிடையே உள்ள தொடர்புகள், உறவுகள், மொழி, பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கம், சமுதாயச்சூழல், பொருளாதாரப் போக்கு போன்றவற்றைக் கண்டறிதல்; இவற்றின் அடிப்படையில் தெலுங்கு, மலையாள, கன்னட மொழி இலக்கிய இலக்கணங்களை அணுகுவதன் மூலம் அண்டை மாநிலங்களின் மொழி,

இலக்கியக் கூறுகள், வாழ்வியல் போக்குகளைக் கண்டறிதல் ஆகியவை இவ்வாய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

**ஆய்வின் பரப்பு**

தமிழ் இலக்கியத்தில் 2, 3 ஆகிய இரு நூற்றாண்டுகளில் தோன்றிய சங்க இலக்கியங்கள்;

கி.பி.6 ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து 15 ஆம் நூற்றாண்டு வரையிலான 9 நூற்றாண்டுகளுக்குரிய தெலுங்கு மொழி இலக்கியங்கள்;

கி.பி.13 முதல் 18 ஆம் நூற்றாண்டு வரையுள்ள 5 நூற்றாண்டுகளுக்குரிய மலையாள மொழி இலக்கியங்கள்.

கி.பி.11 முதல் 18 ஆம் நூற்றாண்டு வரையுள்ள 7 நூற்றாண்டுகளுக்குரிய கன்னட மொழி இலக்கியங்கள் ஆகிய இலக்கியங்களாகும்.

திராவிட மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று. இதிலிருந்து கிளைத்தவைதான் மற்ற திராவிட மொழிகளான தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள். மூலத்திராவிட மொழி தமிழிலிருந்து கிளைமொழிகளான தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகியவற்றை அணுகிப் பார்க்க முனைவதே இவ்வாய்வின் பரப்பாகும். இலக்கியப் பொருண்மைகளை முறையாக ஆராய்வதற்குத் துணை செய்யும் தொல்காப்பியம், தெலுங்கு, மலையாள, கன்னட மொழியில் அமைந்த இலக்கண நூல்கள் ஆகியனவும் ஆய்வுப் பரப்பில் அடங்கும். சங்க இலக்கியம் திராவிட மொழிகளில் எந்தெந்த வகைகளில் தாக்கத்தை ஏற்படுத்துகின்றது என்பதை வரையறுத்துக்காட்ட இவ்வாய்வு முற்படுகிறது.

**ஆய்வுப்பயன்**

திராவிட மொழி இலக்கியங்களைப் பற்றி பல ஆய்வுகள் வெளிவந்திருப்பினும் திராவிட மொழி இலக்கியங்களைப் பற்றி ஆய்வுகள் மேற்கொள்வோருக்கு இவ்வாய்வேடு ஒரு துணையாக அமையும் என்ற பயன் கருதி இந்த ஆய்வு நிகழ்த்தப்பெறுகிறது. தவிர, சங்க இலக்கியக் கூறுகள் மற்றும்

வாழ்வியல் கூறுகள் போன்றவை அதன் கிளைமொழிகளோடு எவ்வகையில் ஒத்துப் போகின்றன என்பதைக் தெரிந்து கொள்ளவும் இவ்வாய்வேடு துணைபுரியும்.

## ஆய்வுக் கட்டமைப்பு

"சங்க இலக்கியப் பின்னணியில் திராவிட மொழி இலக்கியங்கள்" என்ற இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைகிறது.

1. திராவிட மொழி இலக்கியங்கள் - ஒரு பார்வை
2. தமிழ் - தெலுங்கு மொழி இலக்கியங்கள்
3. தமிழ் - மலையாள மொழி இலக்கியங்கள்
4. தமிழ் - கன்னட மொழி இலக்கியங்கள்
5. இலக்கியங்கள் காட்டும் வாழ்வியல் கூறுகள்

'முன்னுரை'யில் ஆய்வுப் பொருள், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு மூலங்கள், ஆய்வு முறை, கருதுகோள், ஆய்வின் பரப்பு, ஆய்வின் பயன், ஆய்வுக் கட்டமைப்பு முதலியன பற்றிக் கூறப்படுகிறது.

'திராவிட மொழி இலக்கியங்கள் - ஒரு பார்வை' என்னும் முதல் இயலில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற மொழிகளின் தோற்றம், வளர்ச்சி, அதன் சிறப்பியல்புகள், மூலத்திராவிட மொழி என்ற கருதுகோள் பற்றிய விவாதம், தமிழம் என்னும் பெயரே திராவிடம் எனத் திரிந்தது. தமிழ் பிற திராவிட மொழிகளாகத் திரிந்த முறை, திராவிட மொழி இலக்கணக் கூறுகளின் ஒத்தத் தன்மைகள் ஆகியவை பற்றி ஆராயப் பெறுகிறது.

'தமிழ் - தெலுங்கு மொழி இலக்கியங்கள்' என்னும் இரண்டாம் இயலில் தெலுங்கு மொழி பிரிந்த காலம், சங்க இலக்கியங்களில் தெலுங்கு, வடுகு, தெலுங்கர் நாடு பற்றிய குறிப்புகள், சங்க இலக்கியங்களுக்கும்

தெலுங்கின் பழைய இலக்கியங்களுக்குமான உறவும் தொடர்புகளும், பழந்தமிழின் இலக்கணத்திற்கும் பழைய தெலுங்கின் இலக்கணத்திற்கும் உள்ள ஒப்புமைகள், தெலுங்குச் சொற்கள் தமிழில் திரிந்துள்ள முறைகள், சங்க இலக்கியங்களில் உள்ள கருத்து, கற்பனை, வடிவம், உணர்ச்சி, மொழிநடை போன்ற கூறுகள் தெலுங்கு இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பான்மை ஆகியவை பற்றி ஆராயப்பெறுகிறது.

'தமிழ் - மலையாள மொழி இலக்கியங்கள்' என்னும் மூன்றாம் இயலில் மலையாளம் தமிழிலிருந்து பிரிந்த நிலை, மலையாளத்தின் தனித்தன்மைகள், மலையாள மொழி முதிர்ந்த நிலையில் தோன்றிய இலக்கியங்கள், மலையாளம்-தமிழின் கிளைமொழி, தமிழ், மலையாள இலக்கணச் சொற்களுக்கிடையேயான ஒற்றுமைகள், சங்க இலக்கியத்தின் கருத்து, கற்பனை, வடிவம், உணர்ச்சி, மொழிநடை போன்ற கூறுகள் மலையாள மொழி இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பான்மை பற்றி ஆராயப்பெறுகிறது.

'தமிழ் - கன்னட மொழி இலக்கியங்கள்' என்னும் நான்காம் இயலில், பழம் கன்னடத்தின் தனித்தன்மைகள், பழங்கன்னடத்திற்கும் தமிழுக்கும் உள்ள உறவு, சங்க இலக்கியத்தில் கன்னட நாட்டின் தொடர்புச் செய்திகள், சங்க இலக்கியக் கூறுகள் கன்னட மொழியில் இடம்பெற்றுள்ள பான்மை, கன்னடம் தமிழிலிருந்து திரிந்த முறைகள், தமிழ், கன்னட இலக்கணச் சொற்களுக்கு இடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகள், சங்க இலக்கியங்களும் கன்னட ஆதி இலக்கியங்களும் பற்றி ஆராயப்பெறுகிறது.

'இலக்கியங்கள் காட்டும் வாழ்வியல் கூறுகள்' என்னும் ஐந்தாம் இயலில் திராவிடர்களின் பிறப்பிடம், உணவு, உடை, தொழில், உறவுமுறை, இறைவழிபாடு, சமயச்சிந்தனை, நம்பிக்கைகள், விருந்தோம்பல், திருமணங்கள், அணிகலன்கள், மனிதநேயம், பழக்கவழக்கங்கள், வீரர் வழிபாட்டு மரபு, நாடோடிப் பாடகர் மரபு, வேலன் மரபு, பாணர் மரபு

ஆகியன பற்றி ஆராயப்பெறுகிறது. இதன்வழி சங்க இலக்கியங்கள் சுட்டும் வாழ்வியல் கூறுகள் தெலுங்கு, மலையாள, கன்னட இலக்கியங்களில் ஒன்றுபட்டும் வேறுபட்டும் காணப்படுகின்ற செய்திகள் விளக்கப் பெறுகின்றது.

முடிவுரையில், ஐந்து இயல்களிலும் கண்டறியப்பெற்ற கருத்துக்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது.

முடிவுரையைத் தொடர்ந்து ஆய்வுக் கருத்துக்களுக்கு வன்மை சேர்க்கும் பின்னிணைப்பும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. அதனைத் தொடர்ந்து ஆய்வுக்குத்துணை நின்ற நூல்கள் அகர நிரலில் தொகுக்கப்பட்டு துணைநூற் பட்டியலாகத் தரப்பெற்றுள்ளது.

## இயல் 1
# திராவிட மொழி இலக்கியங்கள் ஒரு பார்வை

**திராவிட மொழி**

*திராவிட மொழியியல் இன்று நல்லதொரு வளர்ச்சியினைக் கண்டுள்ளது. பல்வேறு அறிஞர்கள் திராவிட மொழிகளின் பல்வேறு கூறுகள் பற்றி ஆய்ந்து வருகின்றனர். இத்தகைய வளர்ச்சிக்கு அடித்தளமாக இருந்தவர்களில் கால்டுவெல், ஈராசு பாதிரியார் குறிப்பிடத்தக்கவர்கள் எனலாம். கிறிஸ்து பிறப்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே மொழி பற்றிய ஆராய்ச்சி நம் நாட்டில் தொடங்கிவிட்டது என்றாலும் "திராவிட மொழிகள்" என்னும் ஒன்றிய எண்ணமும் ஆராய்ச்சியும் மிக அண்மைக்காலத்திலேயே தொடங்கியது.*

*திராவிட மொழிகள் என்ற பெயரின்றியே,*
தென்னிந்தியாவின் வட்டார மொழிகள் என்ற பெயரில் உயர்ந்த–
தாழ்ந்த தமிழ், இலக்கண – பேச்சுத் தெலுங்கு, பழைய புதுக்கன்னடம்,
மலையாளம், துளு, குடகு[1]

*என்பனவற்றைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.*

*இதனடிப்படையில் திராவிட மொழிக் குடும்பத்தைக் கண்டு, ஆய்ந்து காட்டியவர் கால்டுவெல். எல்லிஸ் என்பவர் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, குடகு என்பனவற்றையே கூற, பிராகுயி ஒழியப் பன்னிரு திராவிட மொழிகளைக் கால்டுவெல் தெளிந்து கூறுகின்றார். அவற்றுள் பண்பட்ட மொழிகள் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, குடகு என ஆறு எனவும் பண்படாதன தோடா, கோட்டா, கோண்டு, கூ, ஓரன், ராஜ்மகல் என ஆறு என்றும் குறித்துள்ளார். கிரியர்ஸன் பிராகுயி மொழியையும் இணைக்கின்றார்.*

மொழிகள் பல எனினும், தம்முள் வேறுபட்டவை. எனினும் அவற்றில் மேல்-கீழ், உயர்வு-தாழ்வு என்பதன்றி அனைத்தும் ஒத்த நிலையின. ஒவ்வொருவருக்கும் அவரவர் மொழி சிறப்புடையதாக பொருத்தமுடையதாக அமைகின்றது. மொழியின் இலக்கண அமைப்பு, வழக்கு, இலக்கிய மிகுதி, நூற் பெருக்கம் போன்றவை காரணமாக பண்பட்டது, பண்படாதது, வளமுடையது - வளம் குன்றியது போன்றவை அமைந்தாலும் அவை மொழித் தகுதி - மொழி நிலை என்பனவற்றையே காட்டுகின்றன.

> திராவிட மொழிகளின் ஒப்பீட்டகராதி அமைத்த அறிஞர் இன்னும் சில மொழிகளைக் கண்டு இணைத்தனர். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, குடகு, கோத்தா, தோடா, கோலாமி, நாயக்கி, பர்ஜி, கதபா, கோண்டி, கொண்டா, கூயி, கூவி, குரூக், மால்தோ, பிராகூய்[2]

ஆகிய பத்தொன்பது மொழிகளாக திராவிடக் குடும்பம் குறிக்கப்படுகின்றது.

இம்மொழிகளில் சில, மிகப் பழங்காலம் முதல் வழக்கில் இருப்பன. இன்னும் சில மிக அண்மைக் காலத்தில் மட்டுமே தனித்தன்மையுடன் உருவாயின. சில மொழிகள் எழுத்து வடிவம் பெற்றன. இன்னும் சில பெறாதன. பல மொழிகள் எழுத்து இலக்கியமாகவும், பேச்சு வடிவிலும் பரிணமித்தன. மற்றும் சில பேச்சில் மட்டும் வழங்குவன. சில இலக்கண வளமும் வரையறைகளும் உடையன. வேறு சில மொழியியலாரால் தற்போது அவ்விதிகள் வகுக்கப் பெறுவன. சில மொழிகள் மிகப்பல மக்களால் பேசப்படுவன. சில அருகிச் சில மக்களிடையே மட்டும் வழங்கி வருவன. சில மொழிகள் பேசும் மக்கள் ஒரு நிலப் பகுதியிலன்றிப் பல இடங்களிலும் பரந்து வாழ்வதால் மொழி பயிலும் தேசம் பலவாக அமைகின்றன.

ஆய்வு நோக்கில் இத்தகு பல்வேறு பண்புடன் பல திராவிட மொழிகள் அமைந்திருந்தது புலப்படுகின்றது. எனினும், மொழி வாரியான மாநிலப் பாகுபாட்டில் இவற்றில் சில திராவிட மொழிகளுக்கே முதன்மை

அளிக்கப்பட்டுள்ளன. இந்த அடிப்படையில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**திராவிட மொழி இலக்கியங்கள் ஒரு பார்வை**

இலக்கியம் வாய்மொழி வடிவில் முன்பும், மொழி வளம் மிகுந்த காலத்தில் எழுத்து வரிவடிவிலும் அமைகின்றது. இலக்கியம் என்பது நுவலும் பொருளின் காரணம். அதனைக் கையாளும் முறை, பொதுமனித விருப்பம், வடிவக்கூறு அவ்வடிவம் தரும் இன்பச் சுவை போன்றவற்றைக் கொண்டதாகக் கருதப்படுகின்றது. திறனாய்வாளர்தம் விருப்பு, நோக்கிற்கேற்பச் சில நூல்களை இலக்கியம் என்றும் இன்னும் பிறவற்றை இலக்கியம் இல்லை என்றும் கருதுகின்றனர்.

> இலக்கியம் பற்றிய எண்ணங்கள் பலவாக அமைகின்றன. கால, இட, மொழி எல்லைகளால் தடைப்படாது என்றும் எங்கும் போற்றப்படுவதாகப் பரவலாகக் கற்கப்படுவதாக அமைவது சிறந்த இலக்கியம் எனக் கூறலாம். பலமுறை படிக்கத் தூண்டுவதாய் கற்குந்தோறும் புதுப்புது இன்பம் தருவதாய் பொருளாழம் உடையதாய் இருப்பது இதன் சிறப்பு. நவில்தொறும் நூல்நயம் எனவும், 'அறிதொறும் அறியாமை' எனவும் வேறு சூழலில் வள்ளுவர் கூறியது இங்கு எண்ணத்தக்கது.[3]
>
> எப்போதும், வாழ்வை எதிர்நோக்குவதாகவே இலக்கியம் அமைகிறது. அது வாழ்வை நகல் செய்வதில்லை. ஆயின் அதனை அதன் நோக்கத்திற்கேற்ப உருவாக்குகிறது[4]

என்பர் ஆஸ்கர் வைல்ட்.

> வழக்குடைய இயல்புகளின் பிரதிபலிப்பே ஒரு காலத்தின் இலக்கியம்[5]

என்பது நேஷன் என்பார் கருத்தாகும்.

உலகளாவிய பொதுமையுடையதாக இலக்கியம் அமைதல் சிறப்பு. பண்டைய இலக்கியங்களை இன்றும் சுவைக்க முடிகின்றமைக்கு அவற்றின்

சிறப்பே காரணம். இலக்கியங்களை இருவகையாகக் குறிப்பிடுதல் மரபு. முதலாவது அறிவு பற்றிய இலக்கியம்; இரண்டாவது ஆற்றல் தொடர்பான இலக்கியம். முதல் வகையின் பங்கு அறிவுறுத்துவது. இரண்டாவதன் செயற்பாடு இயக்குவது.

இந்திய நாட்டில் வழங்கும் மொழிகளில் இந்தோ-ஆரிய இன மொழிகளுக்கு அடுத்தபடி மிகுதியான மக்களால் பேசப்படுவன திராவிட மொழிகள்.

இம்மொழிகள் இந்திய நாட்டில் மட்டுமன்றி பிற நாடுகளிலும்கூட வழங்கக் காணலாம். கன்னியாகுமரி முதல் விந்திய மலைப்பகுதி வரையிலும் வாழ்கின்ற மக்களின் மொழியாக மட்டுமின்றி வங்கத்தின் ஓரத்திலும் நேபாள எல்லையிலும் பாகிஸ்தான் பகுதியாகிய பலுச்சிஸ்தானத்திலும் இம்மொழிகள் வழங்கி வருகின்றன. சிறந்த ஒரு நாகரிகத்தைக் கொண்டு வாழ்ந்த இம்மக்கள் பன்னெடுங்காலத்திற்கு முன்னே இந்தியா முழுவதும் பரந்துபட்டு வாழ்ந்திருந்தார்கள் என்றும் காலப்போக்கில் தென்னகத்தைத் தங்கள் தாயகமாகக் கொண்டுவிட்டார்கள் என்றும் நம்புவதற்கு இடம் உண்டு.

இன்று 23க்கும் அதிகமான திராவிட மொழிகள் உள்ளன என்று மொழியியல் அறிஞர்கள் கருதுகின்றனர். கால்டுவெல் திராவிட மொழிகளை இரு பிரிவுகளாகப் பிரித்துள்ளார். 1. திருந்திய திராவிட மொழிகள் 2. திருந்தா திராவிட மொழிகள். இவற்றில் திருந்திய திராவிட மொழிகளை மட்டுமே இவ்வாய்வு ஆராய முற்படுகிறது. அதிலும், இலக்கியம் உள்ள மொழிகளான தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள் குறித்தே இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டது.

**தமிழ்**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைமையுடைய இலக்கியங்களைக் கொண்ட தமிழில் கிடைக்கும் நூல்களில் முதலாவதாக விளங்குவது தொல்காப்பியமாகும்.

தொல்காப்பியப் பாயிரத்தில் பனம்பாரனார் தமிழ் மொழியின் சிறப்பைப் பற்றி,

வட வேங்கடக் தென்குமரி
ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து[6]

என்று கூறியுள்ளார்.

இந்திய நிலப்பரப்பில் தென்னகம் முழுவதும் பண்டைக்காலத்தில் தமிழ் மொழி பரந்திருந்தமையை தொல்காப்பியப் பாயிரத்தின் 'வடவேங்கடம் தென்குமரி' என்னும் ஈரெல்லை சுட்டுவதாலும், சங்க இலக்கியத்தின் புறம். (6.1-4, 17.1-2), மதுரை. (70-71) போன்ற பாடல்களாலும் தெரிந்து கொள்ளலாம்.

தொல்காப்பியமே 'செந்தமிழ் நிலம்'[7] எனவும் 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்'[8] எனவும் கூறுவதால் ஒரு மொழி, வட்டார வழக்கால் கிளைகளாகப் பெருகிய சூழல் தெளிவதாகக் கருதலாம். திசைச்சொல் வழக்குப் பின்னதில் குறிக்கப்படுவதால் இவ்எண்ணம் எழுகின்றது. செந்தமிழ் நிலம் என்பதற்கு வேறாகக் கொடுந்தமிழ் நிலம் என்ற எண்ணமாக விரிவதை நன்னூலின் உரை காட்டுவதும் எண்ணத்தக்கது.

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம் என்ற தொல்காப்பியத் தொடரை விளக்கும் போது நச்சினார்க்கினியர் தந்த பட்டியலையே ஓரளவு பின்பற்றிக்

கொடுந்தமிழ் நிலம் பன்னிரெண்டென நன்னூல் கூறுகின்றது என்பதும் எண்ணத்தக்கது.

தென்பாண்டி குட்டம் குடம் கற்கா வேண்பூழி
பன்றி அருவா அதன் வடக்கு - நன்றாய
சீத மலாடு புனல்நாடு செந்தமிழ் சேர்
ஏ தமில் பன்னிரு நாட்டெண்[9]

புனல்நாடு, வேண் என்பன இல்லாது பொங்கர் நாடு, ஒளி நாடு ஆகியவற்றை நச்சினார்க்கினியர் கூறுகின்றார். அத்துடன் இவற்றைச் சூழ்ந்த மற்றொரு தொகையான பன்னிரு நாட்டையும் தருகின்றார்.

இனி பன்னிரெண்டையுஞ் சூழ்ந்த பன்னிரெண்டாவன சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும் துளுவும், குடகும், கருநடமும், கூடமும், வடுகும், தெலுங்கும், கலிங்கமுமாம் (தொல்.சொல்.400, நச்.உரை)

நன்னூல் 'தமிழ்மொழி நிலம் ஒன்பதிற்றிரண்டு' (273) எனத் தருவது இங்கு எண்ணத்தக்கது. வடநாடொழியப் பதினேழு நாடுகளை மயிலைநாதர் உரை குறிக்கின்றது.

சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக் குடகம்
கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம் வங்கம்
கங்கம் மகதம் கவுடம் கடாரம் கடுங்குசலம்
தங்கும் புகழ்த் தமிழ் சூழ் பதினேழ் புவிதா மிவையே[10]

தமிழ்மொழி - தமிழின் திசை மொழி - பிறமொழி ஆகியவற்றின் நிலைகளை இவற்றின் மூலம் அறிய முடிகின்றது. தற்காலத்தில் பரப்புடைய திராவிட மொழிகளில் மலையாளம் என்பது இங்குக் குறிக்கப்படாது. தெலுங்கு கருநடம் (கன்னடம்) என்பன குறிக்கப்படுவது சிந்திக்கத்தக்கது. அத்துடன் துளு, குடகு என்னும் திராவிட மொழி வகைகளும் உட்படுவது எண்ணுதற்குரியது.

**சங்க இலக்கியம்**

அகமும், புறமும் சங்க இலக்கியங்களில் உட்பிரிவான கருத்துக்களாகும். எட்டுத்தொகை நூல்களில் ஐந்து நூல்கள் அகத்திணை பற்றியவை. இரண்டு புறத்திணை பற்றியவை. அகமும், புறமும் கலந்து வருவது மற்றொன்றாகும். பத்துப்பாட்டிலும் செம்பாகமான பகுதி ஆற்றுப்படைகளாகும். முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய மூன்றும் அகத்திணைக் கருத்துக்கள் தாங்கி மிளிர்வன. மதுரைக் காஞ்சியும், மலைபடுகடாமும் புறத்திணை பற்றியவையாக விளங்குகின்றன.

இயற்கையின் இனிய பின்னணியில் எழுந்தவை சங்ககாலக் கவிதைகள். இயற்கையின் பின்னணியில் மக்கள் வாழ்வு செம்மையுறச் சித்திரிக்கப்படுகிறது. சங்க இலக்கியத்தில் இயற்கை பெரும்பங்கு கொண்டிருந்தாலும் மனித வாழ்வுக்கே முதலிடம் தரப்படுகின்றது. எனவே முதற்பொருள் கருப்பொருளைக் காட்டிலும் உரிப்பொருள்களுக்கே பெருமதிப்பு உள்ளது எனலாம். தொல்காப்பியனாரும்

உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே[11]

என்றார்.

சங்க காலத்துப் புலவர் ஓரினத்தவர் அல்லர். ஓரிடத்தவரல்லர். ஒரு காலத்தவரும் அல்லர். எனவே சங்க இலக்கியத்தினை 'தேசிய இலக்கியம்' எனலாம். சங்ககாலத்தில் பெண்பாற்புலவர் பலர் சிறந்த கவிதைகள் இயற்றியுள்ளனர்.

அகத்திணையினைப் பாடிய புலவர்கள் உளவியல் தத்துவத்தை நன்கு உணர்ந்தவர்களாகக் காணப்படுகின்றார்கள். ஆண்பாற் புலவர்கள் பெண்களின் மன உணர்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றார்கள். பெண்பாற் புலவர்களும் ஆண்களின் மனவுணர்ச்சியினைப் படம் பிடித்துக்

காட்டுகின்றார்கள். மேலும், புலவர்கள் வறுமையிலும் செம்மையாக வாழ்ந்து உள்ளனர்.

'இன்புற விடுத்தியாயின் குன்றியும் கொள்வல் கூர்வேற் குமண!' என்கிறார் பெருஞ்சித்திரனார். மன்னர்கள் அறநெறி பிறழ்ந்தபோது அஞ்சாது அவர்களை இடித்துரைத்த கோவூர்க்கிழார் போன்ற பெரும் புலவர்களைக் காண முடிகின்றது.

அவல ஓவியங்கள் வடித்து நெஞ்சை உருக்கச் செய்வதில் சங்கக் கவிஞர்கள் கைதேர்ந்தவர்கள்.

வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே[12]

என்னும் புறநானூற்று அடிகளில் அவலச் சுவையின் ஆழத்தினைக் காணலாம்.

சங்கக் கவிதைகள் கற்பனைவளம் செறிந்தவை. பொருள்வயிற் பிரிந்தான் தலைவன் தலைவியிடம் அவன் திரும்பி வருவதாகச் சொன்ன கார்காலமோ வந்துவிட்டது. முல்லை அரும்புகள் தலைவியைப் பார்த்து நகைப்பது கார்காலமே நகைப்பது போல் உள்ளதாக,

இளமை பாரார் வளநசை இச் சென்றோர்
இவணும் வாரார் எவன ரோவெனப்
பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை யிலங் கெயிறாக
நகுமே தோழி நறுந்தண் காரே![13]

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

சங்கப் பாடல்களில் ஓசையினிமையினைக் காணலாம். சான்றாகத் திருமுருகாற்றுப்படையின் இறுதி அடிகள்,

இழுமென இழிதரு மருவிப்
பழமுதிர்ச் சோலை மலை கிழ வோனே![14]

என முடிந்துள்ளன. தமிழ் மொழிக்கே உரிய சிறப்பான 'ழகரம்' ஈரடிகளில் நான்கிடங்களில் வந்து நல்ல ஓசையினைத் தருகின்றது.

தமிழ் மக்களின் வாழ்வு புகழ் நிறைந்த பெருவாழ்வு என்பதனைப்

புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்![15]
மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே[16]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் வெளிப்படுத்துவன.

தமிழ்மொழி தென்னிந்தியா முழுவதும் பரவியுள்ளது. அதனை 'அரவ' மென்று அழைப்பர். மேற்கே மைசூர், மேற்குத் தொடர்ச்சி மலைகள் வரை அம்மொழி பயின்று வருகின்றது. வடக்கே சென்னைப்பட்டினம் முடியவும் அதற்குச் சற்று அப்பாலும் அது பயின்று வருகின்றது. ஈழமென்னும் இலங்கையின் வடபகுதியிலும் தமிழ்மொழியே நாட்டு மொழியாக இருந்து வருகின்றது.

திராவிட மொழிகளுள் தமிழ் மொழியே மிக மிகத் தொன்மை வாய்ந்தது. அதிலும் சங்க இலக்கியமான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவை சொல்வளம் மிகுந்தது. சிறந்த பண்பாட்டைக் கொண்டது. உலகில் வேறு மொழிகளுக்கு இல்லாத சிறப்புகளைக் கொண்டது சங்க இலக்கியம்.

## தெலுங்கு மொழி இலக்கியங்கள்

கி.பி.6 ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து தெலுங்கு மொழியில் உள்ள புராண, இதிகாசங்கள், காப்பியங்கள், பிரபந்தங்கள், பக்தி இலக்கியங்கள், தென்னகத் தெலுங்கு இலக்கியங்கள், சதக இலக்கியங்கள் போன்ற இலக்கியங்களை மட்டுமே எடுத்துக்கொண்டு இவ்வாய்வு ஆராய முற்படுகிறது.

தெலுங்கு மொழி இன்று சென்னை மாகாணத்தில் ராயலசீமா, வடசர்க்கார் ஆகியவற்றிலும் ஐதராபாத்திலுள்ள தெலுங்காணத்திலும் பேசப்படுகின்றது. இதன் பரப்பு நூறாயிரம் சதுர மைல்களும், மக்கள் தொகை இரண்டரைக் கோடியும் ஆகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இப்பகுதியில் 'ஆந்திரர்' என்ற மரபினர் பேரரசாட்சி செலுத்தினர். மூன்றாம் நூற்றாண்டிலிருந்து பல்லவர் பேரரசரும், ஆறாம் நூற்றாண்டிலிருந்து சாளுக்கியரும், பதினொன்றாம் நூற்றாண்டிலிருந்து சோழ காகாத்தியரும் ஆந்திர சோடரும், 16 ஆம் நூற்றாண்டிலிருந்து விசய நகரப் பேரரசரும் இப்பரப்பில் ஆட்சி செலுத்தினர். இவர்களுள் தெலுங்கு இலக்கியத்துக்குப் பேருதவி செய்தவர்கள் விசயநகரப் பேரரசரும், சாளுக்கியரும், காகாத்தியரும், ஆந்திர சோடரும், குறுநில மன்னர்களும் ஆவர்.

தெலுங்கு இலக்கியம் வளமுடைய பண்பட்ட திராவிட மொழிகளுள் ஒன்று. ஆந்திர இலக்கியக் காலத்தில் தெலுங்கு எந்நிலையில் இருந்தது என்று அறியக்கூடவில்லை. ஆந்திர மரபினர் புத்த சமயத்தினராதலின் அவர்களைப் பற்றித் தெலுங்கிலக்கிய வாழ்வில் இடம் இல்லாமல் போயிற்று. பல்லவர், கங்கர் ஆகியவர்களுடன் அவர்கள் தொடர்பு கொண்டவராதலால் தென்னாட்டவரே என்று சொல்லலாம். அவர்கள் அரசியலிலும் சமய வாழ்விலும் மேற்கொண்ட மொழி வடமொழியின் சிதைவு எனக் கொள்ளப்படுவதாகும். அவர்கள் காலத்தில் நாட்டு மொழியில் பாலிச் சொற்கள் பேரளவில் வந்து கலந்தது. இவற்றின் பயனாய் இன்றைய தெலுங்கில் 100க்கு 80 விழுக்காடு சொற்கள் வடமொழி கலந்தவையாகும். பொது மக்கள் பேச்சு மொழியில் மட்டுமே இன்று தெலுங்குச் சொற்களை மிகுதியாகக் காண முடிகின்றது.

சொற்கள் மிகுதியும் வடமொழியாக இருப்பதாலும் இலக்கியம் வடமொழிச் சார்பாயிருப்பதாலும் இருமொழிப் புலவர்கள் தெலுங்குப் பண்டிதர்கள் தெலுங்கைத் திராவிட மொழி என ஏற்கத் தயங்கி, அது

வடமொழியின் சிதைவு (விக்குருதி) என்கின்றனர். ஆயினும் மொழியின் இன்றியமையா அடிப்படைச் சொற்கள், இலக்கண அமைதி ஆகியவற்றை ஆராய்ந்த மொழி நூலார் அதனை ஆரியங்கலந்த திராவிட மொழியே எனக் காட்டுகின்றனர். வடமொழிப் பற்றாளர் தெலுங்கு மொழியின் பெயரைக் கூட ஆரியச் சார்பாக்க எண்ணி ஆந்திரம் என வழங்குவர்.

தெலுங்கு என்ற சொல், தேன் போலும் இனிமை உடையது எனப் பொருள்படும். 'தெனுகு' என்ற சொல்லின் திரிபு எனக் கூறலாம். தமிழ் (இனிமை), கன்னடம் (கன்னல் ; கரும்பு) ஆகியவற்றின் பெயர் பொருளுடன் இது இயைந்திருப்பது கவனிக்கத்தக்கது. இப்பெயரும் மூன்று இலிங்கங்களை எல்லையாகவுடைய நாடு எனப் பொருள்படும். த்ரிலிங்கம் என்பதன் மரூஉ என்று கூறுவதுமுண்டு.

> மலையாள மொழிக்கு எழுத்தும், இலக்கணமும், இலக்கியமும் எழுத்தச்சனே ஆக்கினான் என்று சிலர் கூறி வந்தது போல, தெலுங்கு மொழிக்கும், இலக்கணமும், இலக்கியமும் நன்னயனே 11 ஆம் நூற்றாண்டில் படைத்தளித்தான் என்பர் தெலுங்குப் பண்டிதர். ஆனால் ஆராய்ச்சியாளர் இதனை ஒப்புக்கொள்ளத் தயங்குவர். தமிழிலும், கன்னடத்திலும், புத்த, சமண, சைவ இலக்கியங்கள் தழைத்திருந்தது போலவே தெலுங்கிலும் தழைத்திருக்க வேண்டும் என்றும், பிற்கால வைணவ சமயம், பிராமணீய (இந்து) சமயம் ஆகியவற்றின் தாக்குதல்களால் அவை அழிந்து பட்டிருக்க வேண்டும் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.[17]

இதற்கேற்பத் தெலுங்கு இலக்கியத்தின் தொடக்கக் காலத்தில் உள்ள சைவ, வீரசைவ நூல்கள் பல இன்று கண்டு எடுக்கப்பட்டுள்ளன. நன்னயனுக்கு முன் ஜைமினி பாரதம் என்ற சிறந்த சமண பாரதம் இருந்ததாகவும், அதர்வணன் என்ற சமணரால் இயற்றப்பட்டதொரு தெலுங்கிலக்கண நூல் இருந்ததாகவும் தெலுங்கு இலக்கிய வரலாறு கூறுகின்றது. இலக்கிய

*காலத்திலேயே உயர் வகுப்பினர், புலவர் ஆகியோரிடையே வழங்கிய 'மார்க்கி' இலக்கியத்துடன் கூடவே தேசீ என்ற வடமொழிச் சார்பற்ற மக்கள் (திராவிட) இலக்கியமும் நிலவிற்று. இவை ஊர்ப்புற நாடகங்கள் (யக்ஷகானம்), நாட்டுப்புறப்பாடல்கள் (பாடலு) வடிவில் அமைந்தன. தாலாட்டுப் பாட்டுக்கள் (லாலிபாட்டலு), காதற் பாட்டுக்கள் (ஜாவளினு), தொழிலாளர் பாட்டுக்கள் (கூலி பாட்டலு), களியாட்டப் பாடல்கள் (ஆட்ட பாட்டலு), பழமொழிகள் (சமிதெலு), கதைப்பாட்டுக்கள் (கதலு) எனப் பலவகையான நாட்டுப்புறப் பாடல்கள் தெலுங்கில் உள்ளன.*

> யாப்பு முறையிலும் வடமொழிச் சார்பற்ற யாப்பு முறைகள் தேசீ இலக்கியத்தில் வழங்கின. ஆசிரியப்பா (துவிபதி), நாலடிப்பா (சதுஷ்பதி) ஆகிய திராவிடப் பா முறைகளை 'வேமனார்' என்ற மக்கள் பெருங்கவிஞர் கையாண்டு அவற்றுக்கு இலக்கிய வாழ்வும், இலக்கியப் பெருமையும் கொடுத்துள்ளார். நன்னயரே கூட பல தேசீப் பா முறைகளை (தருவாஜம், அக்கரம், சீசம்) திறம்படக் கையாண்டுள்ளார். இத் தேசீப் பா முறைகள் வடமொழி விருத்தங்களை ஒவ்வாது தமிழ்ப்பா முறைபோல் மோனை (யதி) எதுமை (ப்ராசம்) உடையவை.[18]

*தொடக்ககால இலக்கியம் கிடைக்கவில்லையாயினும் 9, 10 ஆம் நூற்றாண்டுகளுக்குரிய கல்வெட்டுக்கள் காணக்கிடைக்கின்றன. இவற்றில் காணப்படும் செய்யுள்களின் நடையால் அவற்றுக்கு முன்பும் இலக்கியம் இருந்தது என்றும், மொழி வடமொழி கலந்ததாயினும் தமிழ், கன்னடத் தொடர்பும், திராவிடப் பண்பும் கெடாதிருந்தது. பேரளவான தமிழ் கன்னடத் தொடர்புடைய தேசீ (தூய தெலுங்குச்) சொற்களும், வழக்குகளும் இவற்றில் இருக்கின்றன. தற்காலத் தெலுங்கை ஆந்திரம் என வழங்குகின்றனர். இன்றைய தெலுங்கிலிருந்து மாறுபட்ட பழங்காலத் தெலுங்கை 'தெலுங்காந்திரம்' எனக் குறிப்பிடுகின்றனர். பிற்காலத் தெலுங்கில் ட் என எழுதப்பட்ட தமிழ்ச் சிறப்பெழுத்தான 'ழகரம்' (தெங்குய்) இங்கே*

பெருக்கமாக வழங்கப்படுகிறது. மற்றொரு தமிழ்ச் சிறப்பெழுத்தான வல்லின நகரம் (தெலுங்குழு) என்று இன்று வரை புலவர் நடையிலும், இலக்கியத்திலும் உள்ளதாயினும், பள்ளிக்கல்வியிலும் புதிய எழுத்தாளர் நடையிலும் கைவிடப்பட்டிருக்கின்றது.

தொடக்கக் காலத்தை விட்டு, தெலுங்கு இலக்கிய காலத்தின் வரலாற்றை நான்கு கூறுகளாகப் பகுக்கலாம். அவை

1. புராண காலம் அல்லது மொழி பெயர்ப்புக் காலம் (12–16) ஆம் நூற்றாண்டு வரை
2. செயற்கைக் காப்பியக் காலம் அல்லது பிரபந்த காலம் 16 ஆம் நூற்றாண்டுத் தொடக்கக்காலம்
3. நலிவுக் காலம் (16 முதல் 19 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதிவரை)
4. தற்காலம் அல்லது மறுமலர்ச்சிக்காலம் 1850 முதல் என்பனவாகும்.[19]

**மலையாள மொழி இலக்கியங்கள்**

கி.பி.13 ஆம் நூற்றாண்டில் தோற்றம் பெற்ற மலையாள மொழியில் உள்ள ஆதிகால இலக்கியங்கள், பழைய மணிப்பிரவாளம், பழைய பாட்டிலக்கியம், பிற்கால மணிப்பிரவாளம், கதகளி இலக்கியங்கள் போன்றவற்றை எடுத்துக்கொண்டு இவ்வாய்வு ஆராய முற்படுகிறது.

மலையாளம் திராவிட மொழிகளுள் ஒன்று. மலைக்கும், கடலுக்கும் இடைப்பட்ட இடத்தில் இருந்த நிலப்பகுதியைக் குறித்ததால் (மலை ஆழம் ஆளம் மலையாளம்) மலையாளம் என்ற சொல் வழங்கியது என்று கால்டுவெல், ஆற்றூர் கிருட்டிணப் பிசாரடி, கே.சோதவர்மா, எஸ்.பரமேசுவர ஐயர் போன்ற அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

மலையாள மொழியின் தோற்றம் குறித்து அறிஞர்களிடையே பல்வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. எல்லிசு, மலையாள மொழியின் தோற்றம் குறித்து முதன் முதலில் ஒரு கட்டுரை வரைந்தார். செந்தமிழின் ஒரு

பிரிவாகக் கொடுந்தமிழ் இருப்பதைப் போல, மலையாளமும் செந்தமிழின் ஒரு பிரிவு என்று அவர் அக்கட்டுரையில் குறிப்பிடுகின்றார். மலையாள மொழியின் தோற்றம் பற்றி ஆராய்ச்சி அடிப்படையில் முதன் முதலில் கருத்துக்களை வெளிப்படுத்தியது கால்டுவெல் ஆவார். அவருக்குப் பின் வந்த அறிஞர்கள் பலர் அவரது கருத்துக்களைப் பின்பற்றியும் மறுத்தும் ஆராய்ந்துள்ளனர். அவை அனைத்தையும் ஒருசேரத் தொகுத்துக் காணுங்கால்,

1. சமஸ்கிருதத்திலிருந்து மலையாளம் தனி மொழியாக வளர்ச்சியடைந்தது.
2. மூல திராவிட மொழியிலிருந்து ஏனைய தெலுங்கு, கன்னடம், தமிழ் ஆகியவை தோன்றியதைப் போல மலையாளமும் தனித்துத் தோன்றியது.
3. மலையாளம் தமிழின் கிளை மொழிகளுள் ஒன்றாக இருந்து அரசியல், பண்பாடு, புவியியல் காரணங்களால் பிரிவுற்று பின்னர் தனிமொழியாக உருவானது.
4. செந்தமிழின் வட்டார வழக்குகளில் ஒன்றான மலை நாட்டுத் தமிழும் சமஸ்கிருதமும் கலந்து மலையாளம் தனிமொழியாக உருவானது.
5. "பண்டைய மலையாள நாட்டில் மன்னர்களும் புலவர்களும் செந்தமிழையும், சமஸ்கிருதத்தையும் போற்றி வந்தனர். இதனால் மலையாளக் கவிஞர்கள் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் இலக்கியங்கள் படைத்தனர். மலையாள மொழியில் இலக்கியங்கள் படைக்கப்படவில்லை. அது சாதாரண மக்களின் பேச்சு மொழியாக மட்டுமே இருந்திருக்கக் கூடும். இதனால் மலையாள மொழியின் இலக்கியங்கள் இன்னதென்று வரையறுத்துக் கூற முடியவில்லை. ஏனைய மொழிகளில் இருப்பதைப் போன்று வீரப்பாடல்கள், உழவர் பாடல்கள், துதிப் பாடல்கள் போன்றவை மலையாளத்திலும் இருந்திருக்கக் கூடும்"[20]

என்றும் கருத்துக்கள் பெறப்படுகின்றன.

மலையாள இலக்கிய வரலாற்றின் காலகட்டங்களைப் பலர் பலவிதமாக வகுத்து வருகிறார்கள். பண்டிதர்கள் பலர், இலக்கிய வரலாற்றை, மொழியின் இயல்பைக் கொண்டு தொன்மைக்காலம், இடைக்காலம், நவீனகாலம் என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்க முயன்றிருக்கின்றனர்.

ஆனால், அவ்விதம் அமைத்துக் கொண்ட காலகட்டம் ஒவ்வொன்றிலும் அதற்குரிய மொழியியல்புக்கு ஒவ்வாத நூல்களும் ஏராளமாக அவ்வப்போது எழுந்துள்ளதால் மலையாள இலக்கிய வரலாற்றைத் தொன்மைக்காலம், நவீனகாலம், மிக நெருங்கிய காலம் என்று மூன்று காலகட்டங்களாகப் பிரிக்கலாம்.

மலையாளம் மூலத்திராவிட மொழியினின்று பிரிந்து தனக்கே உரித்தான உருவம் பெற்றுவிட்ட பிறகு, முதலில் செந்தமிழின் ஆதிக்கத்துக்கும், பிறகு சமஸ்கிருதத்தின் ஆதிக்கத்துக்கும் உட்பட்டு வளர்ந்து இலக்கிய நடையில் பாட்டாகவும், மணிப்பிரவாளமாகவும் நூல்கள் ஏராளமாக இயற்றப்பட்டன. 10 ஆம் நூற்றாண்டு முதல் 15 ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலத்தை மலையாள இலக்கியத்தின் முதல் கட்டமாகக் கொள்ளலாம்.

பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த செறுசேரின் நடையில் நவீன இயல்புகள் தெளிவாகப் புலப்படுகின்றன. எனினும் 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்தச்சனின் நூல்களில்தான் பிற்காலக் கவிதையின் பிறப்பு துல்லியமாய்த் தெரிகிறது.

நாட்டுப்புறப் பாடல்களில் நாற்றுப்பாடல், வள்ளுவர் பாட்டு, புலையர் பாட்டு, பாணர் பாட்டு, குறவர் பாட்டு, தோற்றப் பாட்டு, சாதசுப் பாட்டு, கல்டாணப் பாட்டு, தும்பிப் பாட்டு முதலானப் பல பாடல்கள் கேரள நாட்டுப்புறப் பாடல்களில் அடங்குவன. பண்டைய மக்களின் உணவு, உடை, பொழுதுபோக்கு, பழக்கவழக்கம், நம்பிக்கை, வாழ்க்கைநெறி முதலியவற்றைத் தெளிவாக காட்டும் கண்ணாடிகளாக இப்பாடல்கள் திகழ்கின்றன.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு இருந்த இத்தகைய நாட்டுப்புறப் பாடல்கள் வழக்கில் இருந்தனவெனினும் அவை அனைத்தும் இன்று கிடைக்கவில்லை. கி.பி.12 ஆம் நூற்றாண்டுக்குப் பிந்திய காலத்தைச் சேர்ந்த பாடல்களே இன்று கிடைக்கின்றன.

**பாட்டிலக்கியம்**

பாட்டு என்பது திராவிட எழுத்துக்கள் மட்டும் உள்ளதும் எதுகை, மோனை உடையதாய் திராவிட விருத்தங்களில் சிறப்புற்ற விருத்தங்களில் அமைவதும் ஆகும் என 'லீலா திலகம்' பாட்டிலக்கணம் பற்றிக் கூறுகிறது. இந்த இலக்கணத்திற்கேற்ற இலக்கியமாக 'இராமசரிதம்' 164 பாடல்களைக் கொண்டு திகழ்கின்றது. மலையாளத்தில் இன்று கிடைக்கும் நூல்களுள் தொன்மை மிக்கதாக இது அமைகின்றது. இதனை எழுதியவர் யார்? இது எந்த நூற்றாண்டைச் சேர்ந்தது? போன்ற வினாக்களுக்குத் தெளிவான விடை கிடைக்கவில்லை.

கண்ணசர் படைப்புகள், செறுசேரி நம்பூதிரியார் எழுதிய கிருட்ணகாத மணிப்பிரவாள இலக்கியம், சம்பு இலக்கியம், சந்தேச காவியங்கள், கிளிப்பாட்டு, கதகளி இலக்கியம், துள்ளல்பாட்டு, வஞ்சிப்பாட்டு, வெண்மணி கவிதைகள், கவிதை மறுமலர்ச்சி, புனைவியல் கவிதை, உரைநடை இலக்கியங்கள் ஆகியனவும் மலையாள மொழியில் உள்ளன.

இக்காலத்தில் மலையாள மொழியில் பெருவாரியான வடசொற்கள் கலந்துவிட்டன. பால் விகுதிகளைப் பயன்படுத்தி வரும் முறையை மலையாள மொழி ஏறக்குறையப் புறக்கணித்து விட்டதென்றே சொல்லலாம். தென்னிந்தியாவிற் பண்டு வடமொழியை எழுதக் கற்பித்துக் கொண்ட கிரந்த எழுத்துக்களையே மலையாள மொழியில் பின்பற்றப்பட்டு வருகிறது எனக் கூறலாம்.

**கன்னட மொழி இலக்கியங்கள்**

கி.பி.11 ஆம் நூற்றாண்டில் தோற்றம் பெற்ற கன்னட மொழி இலக்கியங்களில் கன்னட மொழியில் உள்ள தொடக்கக்கால இலக்கியங்கள், கவிராஜ மார்கம், வட்டாராதனை, பம்பன், பொன்னன், ரன்னன், முதல் வசனக்காரர்கள், பரமேஸ்வரன், அக்கமாதேவி, ஹரிஹரன், ராகவாங்கன், நேமி, ருத்திரன், ஜன்னன், குமாரவியாசன், சாமரசன், நிஜகுணி, சர்வக்ஞன், புரந்தரதாசன், கனகதாசன், ரத்னாகரவர்ணி போன்றோரின் படைப்புக்களை மட்டும் எடுத்துக்கொண்டு இவ்வாய்வு ஆராய முற்படுகிறது.

திராவிட மொழிகளின் முதன்மையான மொழிகளுள் கன்னடமும் ஒன்று. கருநாடக மாநிலத்திலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் இம்மொழி பேசப்படுகின்றது. இம்மொழி மிகுந்த சமூக, வட்டார கிளை மொழிகளை உடையது. சில கன்னடக் கிளை மொழிகள் கருநாடக மாநிலத்திற்கு வெளியேயும் பேசப்பட்டு வருகின்றன. திராவிட மொழிகளுள் இது இரண்டாம் பழைமையான மொழியாக விளங்குகிறது. இம்மொழியின் முதல் எழுத்து வடிவச்சான்று கி.பி.450 ஐச் சார்ந்தது. கருநாடக மாநிலத்தில் துளு, குடகு என்னும் வேறு இரண்டு திராவிட மொழிகளும் பேசப்பட்டு வருகின்றன. இம்மாநிலத்திலுள்ள தட்சிண கன்னட மாவட்டத்தில் இந்தோ ஆரியன் மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த கொங்கணி மொழியும் மக்கள் சிலரால் பேசப்பட்டு வருகின்றது.

'கன்னடம்', 'கருநாடகம்' என்ற இருசொற்களுமே மொழியையும் நாட்டையும் குறிக்க ஒன்றிற்கு ஒன்றாக மாறியும் சில நேரங்களில் பயன்படுத்தப்படுகின்றன. 'கருநாடகம்' என்ற மூல வடிவம் கர் - நாடு அதாவது கருமையான நாடு என்ற பொருளுடையது என்று குண்டெர்டு குறிப்பிடுகின்றார். ஆனால் பிற அறிஞர்கள் கரு-நாடு எனக் கொண்டு அது 'உயர்ந்த நாடு' என்று பொருள் தருவதாகக் கூறுவர். இச்சொல் சமஸ்கிருத மயமாக்கப்பட்டு கன்னடம் என மாறியதாகச் சிலர் கருதுவர். இந்திய

இலக்கணவியலார் கன்னடம் என்பது கருநாடகம் என்பதன் தற்பவம் அல்லது தூய்மையற்ற வடிவம் என்று கூறுவர்.

> கன்னடம் மிகப் பழங்கால மொழி ஆகும். கன்னடமொழி பற்றிய முதல் பேச்சை மகாபாரதத்தில் காணலாம். இந்த மொழி தொடங்கிய காலம் இது என்பதை நிச்சயமாகக் கூற முடியாது என்றாலும் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக இது சுதந்திரமாக வளர்ந்து முன்னேறியுள்ளது என்பதில் ஐயமே இல்லை. புகழ்பெற்ற கிரேக்க யாத்திரிகரான டாலமி குறிப்பிட்டுள்ள மால்பெ, பாதாமி, பட்டடகல் என்ற ஊர்ப் பெயர்கள் கன்னட நாட்டுப் பெயர்கள் என்பதை ஆராய்ச்சியாளர் ஸ்ரீ.எம்.கோவிந்தபை இனம் கண்டு எழுதியிருக்கிறார். 'காதா சப்த சதி' (ஹாலராஜா கி.பி.200)யில் பொட்டெ, துப்ப, தீர்பிட்டு போன்ற கன்னடச் சொற்கள் இருப்பதை மொழி ஆராய்ச்சியாளர்கள் கண்டிருக்கிறார்கள். [21]

கன்னட நாட்டில் ஏறத்தாழ கி.மு.ஐந்தாம் நூற்றாண்டு வரையில் தமிழையே கையாண்டிருக்க வேண்டும். அதற்குப்பின் 'பூர்வத ஹள கன்னடம்' என்ற பழைய கன்னடம் உருவானது. கி.பி.இரண்டாயிரம் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு கிரேக்க நாடகத்தில் பழைய கன்னட மொழியிலமைந்துள்ள சில வாக்கியங்கள் தென்படுகின்றன என ஸ்ரீ.எம்.கோவிந்தபை கூறுகின்றார். சமணர்களது செல்வாக்கினால் சமஸ்கிருதம் கன்னட மொழியோடு கலந்தது. கி.பி.ஐந்தாம் நூற்றாண்டு முதல் பழைய கன்னடத்தில் அமைந்துள்ள கல்வெட்டுக்களைக் காணலாம். நாள் செல்லச் செல்ல சமஸ்கிருதக் கலப்பு மிகுதியாகக் காணப்பட்டுள்ளதாயினும், கன்னட மொழியின் அடிப்படை அமைப்பு, திராவிட மொழிகளை ஒட்டியதாகவே உள்ளது எனலாம். கன்னட எழுத்து வடிவம் கிரந்த எழுத்தைப் போல் அமைந்துள்ளது. மேலும், கன்னடத்தின் இலக்கண அமைப்பும் தமிழின் இலக்கண அமைப்பை ஒத்திருக்கின்றது என்று கூறலாம்.

ஆய்வாளர்கள் பொதுவாகக் கன்னட மொழியின் வரலாற்றை நான்கு நிலைகளாக வகைப்படுத்துவர். அவை 1. முன் பழங்கன்னடம் 2. பழங்கன்னடம் 3. இடைக்கன்னடம் 4. புதுக் கன்னடம் என்பன. கிட்டெல் என்பார், கன்னட ஆங்கில அகராதியின் "முன்னுரை"யில் இம்மொழியின் வரலாற்றை உயர்தனிக்காலம், இடைக்காலம், இக்காலம் என்று மூவகைப்படுத்தியுள்ளார்.

கிட்டெல்லின் கூற்றுப்படி பழங்கன்னடம் மிக ஒழுங்கமைவுடனும், நேர்த்தியுடனும், திருந்திய வடிவோடும் இருந்தது. புதுக்கன்னடம் என்பது இக்காலக் கன்னட உரைநடையையும், மக்களின் பேச்சு வழக்கையும் குறிப்பதாகும். எனவே, பழங்கன்னடத்தையும், புதுக்கன்னடத்தையும் இணைக்கும் ஓர் 'இடைக்காலம்' என்ற வரையறை மிகவும் தேவையான ஒன்றாகும். இவர் கருத்துப்படி கி.பி.16ஆம் நூற்றாண்டு முதல் இடைக்கன்னடம் இன்றைய கன்னட மொழியின் பண்பைப் பெறத் தொடங்கியது. இந்த மாறுபாட்டினை மிகச் சிறப்பாக வைணவக் கவிதைகளில் காணலாம். இக்கால கன்னடத்தில் உரை நடைக்கும், பேச்சு வழக்கிற்கும் மிகக் குறைந்த வேறுபாடே காணப்படுகின்றது. குறிப்பாக, சமயம், அறிவியல் தொடர்பான கலைச்சொற்கள் வடமொழியிலிருந்து பிரிக்க முடியாத வகையில் ஒன்றாகியுள்ளன. பழைய சொல் வடிவங்கள் இக்காலத்தில் பல மாற்றங்களைக் கண்டுள்ளன. பெரும்பாலான வினைப் பின்னொட்டுகள் சில வகைகளில் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. சிற்சில பெயர்ச் சொல்லின் பின்னொட்டுகளும் இக்காலத்தில் பயன்படுத்தப்படுவதில்லை. பல வினைச் சொற்களும், பெரும்பாலும் வழக்கிலுள்ள வேர்ச் சொற்களின் அடிப்படையில் அமைந்துள்ளன.

> கன்னட நாட்டில் கி.பி.4, 5 ஆம் நூற்றாண்டுகளிலிருந்தே இலக்கிய வாழ்வு தொடங்கியிருக்க வேண்டும். ஆயினும் 9 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இலக்கியம் எதுவும் கிட்டவில்லை. பிற்கால இலக்கிய

> உரையாசிரியர்களின் மேற்கோள்களாலும், குறிப்புக்களாலும் பல புலவர் பெயர்களும், நூற்பெயர்களும் அறியப்படுகின்றன. கன்னட நாட்டில் பேர் போன வடமொழிச் சமண ஆசிரியர்களான சமந்த பத்திரர், கவிபரமேஷ்டி, பூஜ்யபாகர் ஆகியவர்களும் கன்னட மொழியில் எழுதி வந்ததாக அறிகிறோம். ஆயினும், இன்று இலக்கிய உலகுக்கு எட்டியுள்ள முதல் கன்னட நூல் 'கவிராஜமார்க்கம்' என்ற யாப்பிலக்கண நூலேயாகும். இது நிருபதுங்கன் (814–877) என்ற இரட்டகூட அரசனின் அவ்வப்புலவர் ஒருவர் இயற்றியது. குணவர்மன் (முந்தியவர்) எழுதிய நேமிநாத புராணமும் 'சூத்திரகன்' என்ற நூலும் இந்நூற்றாண்டுக்குரியவை[22]

*என்ற கருத்து குறிப்பிடத்தக்கது.*

*பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த மும்மணிகள் என்று கூறப்படும் குணவர்மன் (பிந்தியவர்) (அ) பம்பன், பன்னன், கிரன்னன் என்பவர்கள் பல நூல்களைப் படைத்தனர்.*

*சோழர் படையெடுப்பால் 11 ஆம் நூற்றாண்டின் பெரும் பகுதியிலும் கன்னடநாட்டில், இலக்கிய வாழ்வு முற்றிலும் சீர் குலைந்தது. சந்திரராசன் என்பவர் பல சந்தங்களுக்கு இடம் தருவதும், பொருளும் ஒலிப்பும் ஒத்தியைந்ததும் ஆன 'மதன திலகம்' என்ற அணி நூல் ஒன்றை இயற்றினார். அதிலிருந்து கன்னட இலக்கியம் வளர்ச்சியடைய ஆரம்பித்தது.*

**திராவிட மொழிகளின் சிறப்பியல்புகள்**

*உலகம் முழுவதும் ஏறத்தாழ நாலாயிரத்திற்கு மேற்பட்ட மொழிகள் பேசப்பட்டு வருகின்றன. இம்மொழிகளைப் பல்வேறு குடும்பங்களாகப் பிரித்து ஆராய்கின்ற ஒப்பியலறிஞர்கள் இம்மொழிக் குடும்பங்களில் எட்டுக் குடும்பங்களே தலைசிறந்தன என்பர். இவ்வெட்டுக் குடும்பங்களுள் ஒன்றான திராவிட மொழிக்குடும்பம், ஏனைய மொழிக் குடும்பங்களோடு பல*

பொதுத்தன்மைகளைப் பகிர்ந்து கொண்டாலும் தனக்கெனச் சில தனித் தன்மைகளைப் பெற்றுத் திகழ்கின்றது.

1. பல்வேறு மொழிகள் தனிநிலை மொழிகளாகவும், பகுப்புநிலை மொழிகளாகவும் அமைய திராவிட மொழிகள் ஒட்டுநிலை மொழிகளாக அமைகின்றன. ஏனைய மொழிகளில் காலங்காட்டும் உறுப்புக்கள் போன்றவை தனித்து நிற்கத் திராவிட மொழிகளில் கால இடைநிலைகள், பால்காட்டும் பகுதிகள் ஆகியன வினையடிகளோடு ஒட்டியே அமைந்து நிற்கின்றன.

   *(எ-டு) வந்தான் → வா + ந் + த் + ஆன்*

2. வழக்கில் மிகுதியாகப் பயின்று வரும் பொருட்களைக் குறிக்கும் அடிப்படைச் சொற்கள் மொழிக்கு மொழி மாறுபட்ட போதிலும், திராவிட மொழிகள் அனைத்திலும் அவை பொதுவாக மாறாமல் ஒன்று போலவே அமைகின்றன.

   *(எ-டு)*

| | | |
|---|---|---|
| தமிழ் | - | கண் |
| மலையாளம் | - | கண்ணு (Kannt) |
| தோடா | - | கொண் (Kon) |
| கொடகு | - | கன்னு (Kannu) |
| தெலுங்கு | - | கன்னு (Kannau) |
| பர்ஜி | - | கெண் (Ken) |
| குருக் | - | ஃகன் (Khan) |

3. எண்ணுப் பெயர்களும் ஏறத்தாழ அனைத்துத் திராவிட மொழிகளிலும் அதிக மாறுதல்களின்றி ஒன்று போலவே அமைந்துள்ளன.

   *(எ-டு) மூன்று, மூனு, மூன்னு, மூறு என்பன.*

4. ஆங்கிலம் போன்ற மொழிகளில் பெரும்பாலான சொற்கள் மெய்யெழுத்துக்களைக் கொண்டே முடிய திராவிட மொழிகளில்

அதிகமான சொற்கள் உயிரெழுத்துக்களைக் கொண்டே முடிகின்றன. மெய்யைக் கொண்டு முடியும் சொற்கள்கூட ஒலித் துணையாக உயிரைப் பெற்று நிற்கின்றன.

(எ-டு) நாள் → நாளு

இங்கு ஒலித்துணையாக உகர உயிர் வந்து இணையக் காண்கிறோம். மூக்கொலிகளைக் கொண்டு முடியும் சொற்களில், இறுதி மூக்கின் மெய் கெட்டு அதன் முன்னர் வரும் உயிரொலி மூக்கொலிச் சாயல் பெற்று நிற்கும் இயல்பினைத் திராவிட மொழிகளில் காணலாம்.

(எ-டு)

பந்தல் → பந்த

கந்தல் → கந்த

5. திராவிட மொழிகளின் உயிர் எழுத்துக்களில் குறிலும், நெடிலும் அடிப்படை ஒலியன்களாக உள்ளன. இவை பொருளை வேறுபடுத்தத் துணை செய்கின்றன.

(எ-டு) மது

மாது

மேலும் இவை தனித்தனி வரிவடிவத்தையும் பெற்றுள்ளன. ஆனால், ஆங்கிலம் போன்ற மொழிகளில் இவ்வேறுபாடு கிடையாது.

6. திராவிட மொழிகளில் ஒரு சொல் இ, எ என்னும் முன்னுயிர்களைக் கொண்டு தொடங்கினால் பெரும்பாலும் 'ய'கரத்தை மொழி முதலில் உடம்படுமெய்யாகப் பெறுவதுண்டு.

(எ-டு) இலை → இலை

இதனைப் போன்றே பின்னுயிர்களை உ, ஒ என்பன வகர உடம்படு மெய்யினை பெறும்.

(எ-டு) உறி → உறி

**மூலத்திராவிட மொழி என்ற கருதுகோள் பற்றிய விவாதம்**

இன்று தமிழரைக் குறிக்கத் திராவிடர் என்னும் பெயரும் வழங்குகின்றது. திராவிடம் என்னும் சொல்லைப் பற்றிப் பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளனர். திராவிடமென்பது தமிழ் என்னும் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு என்பதே ஆராய்ச்சி அறிஞர் இறுதியாகக் கொண்ட முடிவு. இன்று திராவிடம் என்னும் சொல் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய மொழிக் கூட்டத்தைக் குறிக்க வழங்குகின்றது. திராவிடர் என்னும் பெயர் இம்மொழிக் கூட்டத்துக்குரிய மக்களைக் குறிக்கின்றது.

உலகில் தற்பொழுது திராவிடமிருப்பது இந்தியாவே. இந்தியாவிலும் திராவிடத்திற்குச் சிறந்தது தென்னாடே. தென்னாட்டிலும் சிறந்தது தமிழ் நாடே. தமிழ்நாட்டிலும் மொழித் திருத்தம் தெற்கு நோக்கியதே என்று கூறலாம்.

முத்தமிழ் நாடுகளில் பாண்டிய நாட்டையே தமிழ் நாடென்றும், முத்தமிழரசருள் பாண்டியனையே தமிழ் நாடன் என்றும், பண்டைக் காலத்திலேயே சிறப்பித்துக் கூறினர். இன்றும் பாண்டி நாட்டு எல்லையில்தான் தமிழின் வளமும் தூய்மையும் நிலவுகின்றது எனலாம்.

பாண்டிய நாட்டின் பெரும்பகுதி ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சிறிது சிறிதாகத் தென் பெருங்கடலில் மூழ்கிவிட்டது. முச்சங்கங்களும் அக்காலத்தில்தான் தோன்றின.

இறையனாரகப் பொருளுரையில் முக்கழக வரலாற்றில் கடைச்சங்கம் வைத்துத் தமிழாராய்ந்தது ஆயிரத்து தொண்ணூறு ஆண்டுகள் என்பர். அவர்களைச் சங்க மரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருக்க

முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத்தி ஒன்பது பேர் தமிழாராய்ந்தது உத்தர மதுரை என்பர்.

இடைச்சங்கம் வைத்துத் தமிழாராய்ந்தது மூவாயிரத்து எழுநூறு ஆண்டுகள் என்பர். அவர்களை 'சங்கமரீ இயினார்' வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பது பேர். தமிழாராய்ந்தது கபாடபுரம் என்பர். அக்காலத்தைப் போலவே பாண்டிய நாட்டையும் கடல் கொண்டது.

தலைச்சங்கம் வைத்து தமிழாராய்ந்தது நாலாயிரத்து நானூற்றி நாற்பது ஆண்டுகள் என்பர். அவர்களை 'சங்க மரீ இயினார்' காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக என்பத்தொன்பது பேர். தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை என்று கூறப்பட்டுள்ளது.

> தமிழ் நூல்களைக் கல்லாமலே பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே குமரிமுனைக்குத் தெற்கே, இந்தியா தென்கண்டம் (ஆஸ்திரேலியா) ஆப்பிரிக்கா என்ற மூன்று கண்டங்களையும் இணைத்துக் கொண்டு ஒரு பெருநிலப்பரப்பு இருந்ததென்றும், அங்கேதான் மனிதன் தோன்றினான் என்றும் ஊரும் உயிர்களும் கூட அங்கேதான் தோன்றியது என்றும் அது பல்லாயிரம் ஆண்டுகள் நிலை பெற்றபின் பல கடல் கோள்களால் தென் பெருங்கடலில் மூழ்கிவிட்டது என்றும், ஹெக்கேல், ஸ்காட், எலியட் முதலிய மேலை ஆராய்ச்சியாளர் கூறி அதற்கு லெமுரியா, காண்டுவானா என்ற பெயர்களையும் இட்டு இருக்கின்றனர்.[23]

முத்தமிழரசக் குடிகளுள் பாண்டியர் குடியே முதலாவது தோன்றியது என்றும் பின்பு சேர, சோழ, குடிகள் தோன்றின என்றும் ஒரு வழிமுறைச் செய்தி வழங்கி வருகின்றது. வடமொழியின் முதல் காவியமான வான்மீகி ராமாயணத்தில் சேர, சோழ, பாண்டியர் மூவரும் கூறப்பட்டுள்ளனர்.

கி.மு.2000 ஆம் ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட தொல்காப்பியத்தில்,

போந்தே வேம்பே ஆரென வரூஉம்

மாபெருந் தானையர் மலைந்த பூவும்[24]

என்றும்,

வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்[25]

என்றும் மூவேந்தர் குடிகளும், முதுகுடி எனத் தமிழ் மறவர் குலமும் பழமையாகக் கூறப்பட்டுள்ளன. மறவர் குடியை,

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு

முன்தோன்றி மூத்தகுடி[26]

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டத் தலைக்கழகம் முத்தமிழ்க் கழகமாக இருந்ததினால் அதற்கு முன் இயற்றமிழ் தோன்றியிருக்கும். அதற்கு முன் இலக்கணமும், இலக்கியமும், எழுத்தும், மொழியும் தோன்றியிருக்கும். பொருளதிகாரத்தில் கூறப்படும் ஐந்திணை நிலையும் 'தலை கொண்டு சேறல்' 'இயற்கைப் புணர்ச்சி' முதலிய பகுதிகளும் தமிழர் துவக்கந் தொட்டுத் தென்னாட்டிற்கே உரியர் என்பதை உணர்த்தும். தமிழ் இயல்பாய்த் தோன்றிய மொழியாதலானும், தெற்கிருந்து வடக்கு நோக்கியே திரிந்து செல்லுதலானும், மிகத் தொன்மை வாய்ந்ததானும், அது தோன்றியது குமரி நாடே என்று துணியலாம்.

### தமிழம் என்னும் பெயரே திராவிடம் எனத் திரிந்தது

பண்டைக் காலத்தில் நாட்டுப் பெயர்களும் மொழிப்பெயர்களும் பெரும்பாலும் 'ஆம்' ஈறு பெற்றே வழங்கின. (எ-டு) சிங்களம், கடாரம், ஆரியம், தமிழும் தமிழம் என வழங்கிக் குலத்தையும் நாட்டையும் மொழியையுங் குறித்தது. தமிழக் கூத்து தமிழவண்ணான் என்னும் புணர்மொழிகளில் தமிழ் என்னுஞ்சொல் அகரச் சாரியை பெற்றுப் புணர்ந்ததென்று கொள்வதைவிட, தமிழம் என்னுஞ் சொல்லே நிலைமொழியாக நின்று ஈறுகெட்டுப் புணர்ந்ததென்று கொள்வது சாலச் சிறந்தது. தமிழம் என்பது குலமும் நாடும் மொழியும் ஆகிய மூன்றையும்

குறிக்குஞ் சொல்லாதலின், தெளிவின் காரணமாக நாட்டைக் குறிக்கும்போது தமிழகம் என வழங்கினர்.

வையக வரைப்பில் தமிழகங் கேட்ப

தமிழகம் என்னும் பெயரையே பண்டைக் கிரேக்க உரோம சரித்திராசிரியர் 'டிமிரிக்க' (Damirica) 'டமரிக்கெ' எனத் திரித்து வழங்கினர்.[26]

வடநாட்டு ஆரிய நூல்களில் திரவிடம் என்னும் சொல் த்ரமிளம் என்றே வழங்கி வந்தது. ழகரம் வட மொழியில் இல்லை. சில உயிர் மெய்ம்முதல்களை ரகரஞ் சேர்த்து த்ர ப்ர எனப் புணரெழுத்துக்களாகத் திரிப்பது வடநூலார் வழக்கம் (எ-டு) படி - ப்ரதி, பவளம் - ப்ரவாளம். இதனால் தமிழம் என்னுஞ் சொல் த்ரமிளம் எனத் திரிந்தது இயல்பே. நாளடைவில் த்ரமிடம், த்ரவிடம் எனத் திரிந்துது. ள-ட, ம-வ, போலி. த்ரவிடம் என்பது மெய்ம் முதலாதலின், தமிழில் திராவிடம் என்றாகிப் பின்னர்த் திரவிடம் என நீண்டு வழங்குகின்றது.

கால்டுவெல் கண்காணியார் குமரி நாட்டுச் சரித்திரத்தையும் தொல்காப்பியத்தையும் மேற்கணக்கு நூல்களையும் அறியாதவர். ஆகையால், தமிழரை வடக்கிருந்து வந்தவராகவும் ஆரியரால் நாகரிகமடைந்தவராகவும் கொண்டு, த்ரமிளம் என்னும் வடசொல்லினின்று தமிழ் என்னுஞ் சொல் பிறந்ததென்று கூறினார். ஆனால் பண்டிதர் கிரியர்ஸன் இதை மறுத்துத் தமிழம் என்பதே த்ரவிடம் என்பதன் மூலம் எனத் தமது இந்திய மொழியாராய்ச்சி என்னும் நூலில் காட்டியுள்ளார். தமிழுக்குத் திராவிடம் என்னும் பெயர் தமிழ்நாட்டில் வழங்காமையானும் திராவிட மொழிகளெல்லாம் ஒரு காலத்தில் தமிழாகவே இருந்தமையானும் தமிழம் என்னும் பெயரே திராவிடம் எனத் திரிந்தது என்று தெளியப்படும்.

மூலத் திராவிடத்துக்கும் இன்றைய தமிழுக்கும் மரபு வேறுபாடு எதுவும் கிடையாது. ஆனால் கால, இடவேறுபாடு உண்டு. இரண்டிலும் அது

> தேய்வும் குறுக்கமும் கண்டுள்ள மூலதிராவிடத்தின் மூத்த தமிழ் இலக்கண இலக்கியப் பரப்பில் தொல்காப்பியம் மூலமாக நமக்கு இயல் தமிழின் தடயமே கிடைத்துள்ளது. இட எல்லையிலும் அதுபோல இலங்கையை உட்கொண்ட கடல்கொண்ட தமிழகப் பகுதி மட்டுமின்றி மற்றத் தென் மொழிப்பரப்பும் அளாவியது மூலதிராவிடம். வடக்கே இமயம் வரைக்கூடப் பழந்தமிழ் பரவியிருந்தது என்று தமிழ் மரபு கருதுகிறது. சில மொழி நூலாரும் இதன் மெய்ம்மையைச் சுட்டிக்காட்டுகின்றனர். ஆனால் இப்பெரும்பரப்பு இன்று ஒரு குறுகிய திரை வழக்களவில் நிற்கிறது.[28]

*இனத்துக்கும் மூலதிராவிட மொழிக்கும் 'திராவிடம்' என்ற பெயரை அறிஞர் பொது வழக்காக முதன் முதலில் பயன்படுத்தியவர் கால்டுவெல் ஆவார்.*

> வரலாற்று மரபு, மொழி நூல் ஒப்பீட்டு முறையான மொழி மரபு ஆகிய இந்த இரண்டு மரபையும் இணைத்துப் பார்த்தால், வட திராவிடம் தென் திராவிடமாகப் பிரிந்த காலத்தில் தென் திராவிடம் ஒரே தமிழ் மொழியாய் இருந்ததென்றும் வட திராவிடமும் ஒரே மொழியாய் இருந்ததென்றும் வட திராவிடம் தென் திராவிடமாகிய தமிழினின்றும் இன்றைய தெலுங்களவு பிரிந்துவிடவில்லை என்றும், தமிழுடன் நெருங்கிய தொடர்புடைய கன்னடத்திலிருந்தே தெலுங்கு பிரிந்ததென்றும் விளங்கும். தமிழுக்கடுத்தப்படி கன்னடமே இலக்கியப் பழமையுடையதாயிருப்பது இங்கே கருதத்தக்கது[29]

*என்பது கா.அப்பாதுரையாரின் கருத்தாகும்.*

*முன்பே பிரிந்து சென்ற கன்னடம் பின் பிரிந்த மலையாளத்தைவிடத் தமிழுக்கு அருகில் இருப்பதும், கி.பி.9 ஆம் நூற்றாண்டுக்கு முன் மலையாள நாடும் தமிழ் நிலமாகவே நிலவியதும், கிரேக்கர் இரண்டையும் தமிழகம் என்றே குறித்ததும் தென் திராவிடத்தில் தமிழின் பழமையை வலியுறுத்தும்.*

**திராவிட மொழிகளின் தாய் - தமிழ்**

*தமிழின் உதிரத்திலிருந்தே திராவிட மொழிகள் பிறந்துள்ளன என்பது மனோன்மணியம் ஆசிரியர் சுந்தரனாரின் கருத்து. இக்கருத்தையே மொழியிலறிஞர் கால்டுவெல்லும் கேரள வரலாற்றாசிரியர் குஞ்சன் பிள்ளையும் கூறுகின்றனர்.*

*கேரள மக்களில் பெரும்பாலோர் மலையாளம் தமிழிலிருந்து பிறக்கவில்லை என்ற கருத்தை முனைப்புடன் பரப்பி வருகின்றனர். மொழி அறிஞர்களில் மிகச் சிலரே தமிழிலிருந்துதான் மலையாளம் பிறந்தது என்ற உண்மையை அறிந்து வைத்திருக்கின்றனர். ஆனால் வெளியே பரப்பிட முன்வருவதில்லை.*

> கருநாடகத்து மக்களோ இனவாதத்தை – மொழிவெறியைத் தூண்டும் ஒருசில போலி அரசியல்வாதிகளின் பசப்பு மொழிகளிலும் வீரவசனத்திலும் கட்டுண்டு கிடக்கின்றனர் தமிழரை எதிரியாகவும் தமிழை ஓர் அன்னிய மொழியாகவும் நினைத்து பயிற்றுவிக்கப்படுகின்றனர்[30]

*என்ற கா.அப்பாதுரையின் கருத்து சிந்தனைக்குரியது.*

*தமிழ் மொழிக்குத் தமிழ் என்ற பெயர் ஏற்பட்டதற்குப் பற்பல சான்றோர் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு காரணங்களைக் கற்பித்தனர். உலகெங்கும் ஒரே மொழி, தமிழ் மொழியாக இருந்த நிலையில் அதற்குப் பெயரே வெகுகாலத்திற்கு ஏற்பட்டிருக்காது. தமிழ் பல்வேறு இடங்களில் திரியத் தொடங்கிய நிலை ஏற்பட்டது. மொழிப்பெயர் தேயங்கள் (பகுதிகள்) ஏற்பட்ட பின்னரே, தம் மொழிக்கு ஒரு பெயர் தேவைப்பட்டிருப்பதை உணர்ந்திருப்பர். அப்போது தம்மோடு தூய திரியாத தமிழ் பேசுவோரைத் 'தம் இல்' என்றனர். இதன் பொருள் தம் வீட்டைச் சார்ந்தவர், தம்மைச் சார்ந்தவர்*

என்பதே. இதன் திரிபாகத் 'திமில்' ஒலியோசை பெற்று தமிழ் ஆயிற்று என்ற அறிஞர்தம் கருத்து ஏற்புடையதாய் உள்ளது.

**தமிழ் பிற திராவிட மொழிகளாகத் திரிந்த முறை**

திராவிட மொழிகளான தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய திருந்திய மொழிகள் யாவும் மூலத்திராவிடமான தமிழ் மொழியிலிருந்தே திரிந்தது என்பதற்குத் தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும் பல சான்றுகள் உள்ளன. ஒரு காலக்கட்டத்தில் திராவிட மொழிகள் யாவும் ஒன்றாகவே இருந்தது. மொழி வளர்ச்சியின் காரணமாகவும், மொழிவாரி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டதன் காரணமாகவும் அவைகள் திரிய ஆரம்பித்து விட்டது. அது எவ்வாறு திரிந்தது, அதற்கான காரணங்கள் யாவை? என்பது போன்ற கேள்விகளுக்கு விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளது.

**திராவிட மொழி இலக்கணக்கூறுகளின் ஒத்தத் தன்மைகள்**

மூலத்திராவிடமான தமிழ் இலக்கணக் கூறுகளான திணை, பால், பெயர்ச்சொல், வினைச்சொல், ஒருமை, பன்மைகள் போன்ற கூறுகளில் சில, மற்ற திராவிட மொழிகளிலும் ஒரே மாதிரியாக இருக்கின்றன என்பதையும் தமிழினின்று பிற திராவிட மொழிகள் வேறுபடக் காரணங்கள் போன்ற விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

**திராவிட மொழி இலக்கியங்களின் ஒற்றுமை**

ஒவ்வொரு மொழியிலும் உள்ள தொடக்கக் கால இலக்கியங்கள் தனியாகச் சிந்தித்தற்குரியவை. அவை மொழியின் தன்மை, வளர்ச்சி, பண்பாடு, சமுதாயத்தின் நோக்கு, போக்கு, எண்ண வளர்ச்சி, அறிவாற்றல், கலை வன்மை, திறன், உணர்வுகள், கருத்துகள் போன்றவற்றை வெளிப்படுத்துகின்றன. இலக்கியக்கலை மனிதனின் உன்னத வளர்ச்சியின் வெளிப்பாடு என்ற நிலையில் மானுடத்தின் உயர்வையும், சிறப்பையும் மேன்மையையும் வெளிப்படுத்துகின்றது.

முதல் நூல்களாகத் தமிழில் தொல்காப்பியமும் (கி.மு.3 ஆம் நூற்றாண்டு) கன்னடத்தில் கவிராஜ மார்க்கமும் (கி.பி.850), தெலுங்கில் நன்னயப்பட்டரின் பாரதமும் (கி.பி. 11 ஆம் நூற்றாண்டு), மலையாளத்தில் ராமசரிதமும் (கி.பி.12 ஆம் நூற்றாண்டு) அமைந்து சில எண்ணங்களைத் தருகின்றன. முன்னிரண்டும் இலக்கணம், பின்னிரண்டும் இலக்கியம், இதிகாசம். முதலாவதாக அமையும் தொல்காப்பியம் மட்டும் தனித்தமிழ் மூலம் காட்டுகின்றது. பிற மூன்றும் வடமொழி வழிப்பட்ட நூல்களாகிப் பிற சார்பு கொள்கின்றன. தண்டி வட மொழியில் இயற்றிய காவியாதர்சம் கன்னடத்தின் கவிராஜ மார்க்கத்திற்கு அடிப்படையாகின்றது. வியாசர் வட மொழியில் வகுத்த பாரதம் நன்னய்யாவின் தெலுங்கு பாரதத்திற்கு மூலமாகின்றது. வான்மீகி வடமொழியில் ஆக்கிய இராமாயணப் பகுதி மலையாள ராமசரிதத்திற்கு இடனளிக்கிறது.[31]

*திராவிட இலக்கியங்கள், தோன்றிய காலத்தில் மக்களின் வாழ்க்கை முறையைத் தெளிவாகப் படம்பிடித்துக்காட்டுகின்றன. ஒவ்வொரு மொழிக்கும் இலக்கிய, இலக்கணங்கள் உள்ளன.*

*தமிழில் உள்ளதைப் போன்று காப்பியம், இதிகாசம், பிரபந்தம், சதகம், குறவஞ்சி, பள்ளு, கும்மி, கிளிப்பாட்டு, வில்லுப்பாட்டு, பரணி, ஆற்றுப்படை, அந்தாதி, உலா, துள்ளல், தூது, கீர்த்தனை, அம்மானை, உழவர்பாட்டு, துதிப்பாடல்கள், வீரப்பாடல்கள், பாணர்பாட்டு, புலையர் பாட்டு, நாற்றுப்பாடல் எனப் பல்வேறு வடிவங்கள் திராவிட மொழிகளிலும் இருந்திருக்கின்றன. ஆனால் அவற்றில் ஒருசில வடிவங்கள் மட்டும் கிடைக்கின்றன.*

மலையாள மொழி இலக்கிய ஆசிரியரான உண்ணிக்கிருஷ்ணனின் முதல் நூலான உண்ணு நீலி சந்தேசம், வடமொழி மரபுப்படி, பூர்வசந்தேசம், உத்தர சந்தேசம் ஆகிய இரு பகுதிகளையுடையது.

கற்புக் காலப்பிரிவு, ஒரு இயக்கி தலைவனை, தலைவியிடமிருந்து பிரித்துத் தூக்கிச் சென்று பிறிதோரிடத்தில் விடுதல் என்பதால் அமைதல் செய்திகொண்டு போகுபவர் செல்லும் வழிவருணனை, வழியிலுள்ள ஊர், கோவில், கடைத்தெருவிளக்கம் என இவை தமிழின் ஆற்றுப்படைச் சாயல் காணப்படுகிறது.[32]

திராவிட மொழி இலக்கியப் படைப்பாளர்கள் தமக்கு உதவி செய்தவர்களை இலக்கியத்தில் ஏற்றிப் பெருமைப்படுத்தியுள்ளனர். இது ஆற்றுப்படையில் வரும் புலவர்கள் தமக்கு உதவி செய்தவரைப் புகழ்ந்து பாடுவது போல அமைகின்றது.

சங்க இலக்கியங்களில் உள்ளதைப் போல அகம், புறம் என்ற அமைப்பு முறை இல்லாவிட்டாலும், ஒவ்வொரு மொழி இலக்கியமும் அம்மொழிக்கு ஏற்ற உத்திகள், வடிவங்கள், மொழிநடை மூலம் அக்கால மக்களின் வாழ்க்கை முறையினைச் சிறப்பாக எடுத்துக்காட்டியுள்ளது.

திராவிட மொழிகள் மிகப் பழைமையான மொழிகள் என்பதும் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இந்திய நாட்டில் வழக்கில் இருந்து வந்துள்ளன என்பதும் இன்றைய மொழியிலாளர்களின் கருத்து. இந்தோ-ஆரிய மொழிகளாகிய சமஸ்கிருதம் இந்நாட்டில் நுழைவதற்கு முன்னரே திராவிட மொழிகள் வழக்கில் இருந்துள்ளன.

ஒரு காலக்கட்டத்தில் ஆந்திரா, கேரளா, கர்நாடகா ஆகிய அண்டை மாநிலங்கள் தமிழ் நாட்டோடு ஒன்றாக இருந்துள்ளது. அப்போது அவர்களுக்கு என்று எந்தஒரு இலக்கியமும் தோன்றவில்லை. ஒவ்வொரு மாநிலமும் பிரிந்த பின்புதான் தங்களுக்கு என்று இலக்கியங்கள் உருவாக்கிக் கொண்டன.

தமிழிலிருந்து பிரிந்த காரணத்தால், சங்க இலக்கியத்தினுடைய தாக்கம் தெலுங்கு, மலையாள, கன்னட மொழிகளிலும் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களைக் கேரள அறிஞர்கள் அப்படியே மலையாள மொழியில் மொழி பெயர்த்துள்ளனர். திராவிட மொழிகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு கால கட்டங்களில் தோன்றினாலும் அவற்றுக்கிடையே காணக்கிடக்கும் பல ஒற்றுமைகள் அறிய முடிகின்றது.

## குறிப்புகள்

1. ச.வே.சுப்பிரமணியன், திராவிடமொழி இலக்கியங்கள் அறிமுகம், ப.5.
2. மேலது., ப.6.
3. மேலது., ப.19.
4. Rudolf Flesch, Quotation, p.155.
5. Tyron Edward, **New Dictionary of Thoughts**, p.364.
6. தொல்காப்பியர், தொல்காப்பியம் சிறப்பு பாயிரம், நூ.3.
7. தொல்காப்பியர், தொல்காப்பியம் சொல்லதிகாரம், நூ.397.
8. மேலது., நூ.400.
9. உ.வே.சாமிநாதையர் (ப.ஆ.), நன்னூல், ப.161.
10. மேலது., ப.161.
11. தொல்காப்பியர், தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.13.
12. புறம்., பா.241.
13. குறுந்., பா.125.
14. திருமுருகு., பா.316-317.
15. புறம்., பா.182.
16. மேலது., பா.165.
17. கா.அப்பாத்துரை, உலக இலக்கியங்கள், ப.87.
18. மேலது., ப.87.
19. டி.எஸ்.கிரிபிரகாஷ், பா.ஆனந்தகுமார், தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.
20. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.12.
21. எ.எஸ்.கெதிலாய, கன்னட மொழியும் இலக்கியமும், ப.83.
22. கா.அப்பாத்துரையார், உலக இலக்கியங்கள், ப.78.
23. ஞா.தேவநேயப்பாவாணர், திரவிடத் தாய், ப.6.
24. தொல்காப்பியர், தொல்காப்பியம் பொருளதிகாரம் , நூ.60.
25. மேலது., நூ.391.

26. புற.வெ.மா., நூ.35.

27. ஞா.தேவநேயப்பாவாணர், திரவிடத் தாய், ப.8.

28. கா.அப்பாத்துரை, தென்னகப் பண்பு, ப.197.

29. மேலது., ப.196.

30. மேலது., ப.199.

31. ச.வே.சுப்பிரமணியன், திராவிடமொழி இலக்கியங்கள் அறிமுகம், ப.31.

32. மேலது., ப.707.

# இயல் 2
# தமிழ் – தெலுங்கு மொழி இலக்கியங்கள்

**தெலுங்கு மொழி பிரிந்த காலமும் இலக்கியத் தோற்றமும்**

தெலுங்கு மொழி கி.பி.ஆறாம் நூற்றாண்டிற்குப் பின்பே தனிப் பேச்சு மொழியாக வழங்கியமைக்குப் பல சான்றுகள் கிடைக்கின்றன. பரதர் தனது நாட்டிய சாஸ்திரத்தில் எந்தெந்தப் பாத்திரங்கள் எந்தெந்த மொழியில் உரையாட வேண்டும் என்று கூறிவரும் போது, தலைமைப் பாத்திரங்கள் பர்பர, கிராத, ஆந்திர, திராவிடாதி முதலிய இனங்களில் வழங்குகின்ற மொழியைப் பயன்படுத்தக்கூடாது. தூய சௌரசேனி மொழியில்தான் பேச வேண்டும் எனக் கூறுவதால் பரதர் காலத்திலேயே ஆந்திர மொழி வழக்கில் இருந்திருக்க வேண்டுமென அறிய முடிகின்றது. பரதருடைய காலத்தைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருப்பினும் கிறிஸ்து பிறப்பிற்கு முந்தியவர் என்பதில் ஐயமில்லை.

கி.பி.ஆறாம் நூற்றாண்டு ஹாலன் சமஸ்கிருதத்தில் ‘காதாசப்த சதி’யைப் படைத்தான். இந்நூலுள் அத்தா, பாடி, பெட்டா, பில்லா, கரணி, போண்டி, மோடி போன்ற ஏராளமான தெலுங்குச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தமிழகத்தின் வடபகுதியில் வேங்கடத்திற்குப் பின் தமிழினின்று வேறுபட்ட மொழி வடுகர்களிடத்து வழங்கியது என்பதை உய்த்துணரும் வகையில் பல குறிப்புகள் காணப்படுகின்றன.

குல்லைக் கண்ணி வடுகர் முனைந்து
பல்வேற் கட்டி நன்னாட்டு உம்பர்
மொழி பெயர் தேஎத்த ராயினும்[1]

பனிபடு சோலை வேங்கடத்தும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும் நல்குவர்[2]

*என்பவற்றில் வடுகர், வடுகு என்னும் சொற்கள் தெலுங்கரையும், தெலுங்கு மொழியையும், தெலுங்கு நாட்டையும் குறிக்கும்வண்ணம் தமிழிலக்கியங்களில் கையாளப்பட்டு உள்ளன. இது கி.பி.2, 3 ஆம் நூற்றாண்டுக் காலம். இக்காலங்களில் எல்லாம் தெலுங்கு மொழி இலக்கியம் தோன்றவில்லை. எனினும்,*

> தெலுங்கில் பல தமிழ்ச் சொற்களும், கன்னடச் சொற்களும் கலந்திருக்கின்றன. நாளடைவில் இந்துஸ்தானிச் சொற்களும், ஆங்கிலம் போன்ற ஐரோப்பிய மொழிச் சொற்களும் கலந்துவிட்டன. தூய தெலுங்கில் சில காப்பியங்கள் எழுதப்பட்டாலும் அந்த இயக்கம் வெற்றி பெறவில்லை. வடமொழிக் கலப்பில்லாத தெலுங்கு அச்ச தெலுகு எனப்படும்.[3]

### தெலுங்கு இலக்கிய வளர்ச்சி

*ஏறத்தாழ 1500 ஆண்டுகளுக்கு முன்பே உருக்கொண்ட தெலுங்கு மொழி சாளுக்கிய மன்னர்களால் போற்றி வளர்க்கப்பட்டது. இவர்கள் காலத்தில்தான் தெலுங்கு மொழி கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் இலக்கிய வடிவம் பெறத் தொடங்கியது.*

> தெலுங்கு மொழியின் இலக்கிய வளர்ச்சி கி.பி.ஆறாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்துதான் மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. இக்காலத்தில் ஆட்சி புரிந்தவரும் சோழர்களும், கீழைச் சாளுக்கியர்களும்தான் முதன் முதலில் தெலுங்கு மொழியைக் கல்வெட்டுக்களில் எழுதப் பயன்படுத்தியவர் ஆவர். தொடக்கக்கால தெலுங்கு மொழியின் வரிவடிவ அமைப்பிற்கு இவர்களது கல்வெட்டுக்களையே முதல் சான்றாகக் குறிப்பிடுவர். கி.பி.ஆறாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் பொறிக்கப்பட்ட தனஞ்சய 'கலமள்ள சாசனம்' தான் முதல் தெலுங்கு வரிவடிவக் கல்வெட்டாகும்.[4]

சாளுக்கியர்களின் தொடக்கக்காலத் தெலுங்குக் கல்வெட்டுக்கள் கோவிலுக்கு அளிக்கப்பட்ட தானம், தானம் அளித்தவரின் வம்ச வருணணை, வீரர்கள் புரிந்த வீரச்செயல்கள் முதலியவற்றைத் தெரிவிக்கின்றன. இக்கல்வெட்டுக்கள் கோவில் கம்பத்திலோ, மேற்பகுதியிலோ பொறிக்கப்பட்டுள்ளன. குணஹவிஜயாதியன் காலத்தைச் சேர்ந்த பண்டரங்கனுடைய அந்தங்கி கல்வெட்டில் (கி.பி.848-849) முதன் முதலாக *'தருவோஜ'* என்ற தெலுங்கு வரிவடிவம் காணப்படுகிறது.

3 3 3
பட்டம்பு கட்டின ப்ரதமும்பு னேண்டு
3 3 3 3 3
பலகர்வம் பொப்பங்க பைலேசினேனி
3 3 4 3
பட்டம்பு கடிஞ்சி ப்ரபு பண்டரங்கு
3 3 3
பஞ்சின் ஸமத்த படுவதோ போய
3 3 3
கொட்டம்புல் வண்டெண்டு கொணி வேங்கி நாண்டம்
3
கொளல்சி யாத்ரபு வனாங்குஸபண நில்பி
3 3 3 3
கட்டே புதுக்கர்வம்பு கடுபயன் ஸேணி
3 3
கண்டுகூர், பெஜவாட காவிஞ்சி மெச்சி
3 3 3 3
பண்டரங்கு பரமேஸ்வருண்டு ஆதித்யப டாரனிகி
4
இச்சின பூமி
3 3
யேனுயொடு புட்ல ஆட்லபட்டு தேல தம்மபுரம்புன
3
தம்முட வீனி ரக்ஷிஞ்சின
3 3 3
வாரிகி அஸ்வதேதம்புன பலம்பு ஆகு[5]

மன்னன் தனது முடிசூட்டு விழாவிற்குப் பின்வந்த முதல் ஆண்டில், படைபலம் கண்டு கர்வம் பொங்க பண்டங்கனைச் சிற்றரசனாக நியமித்துப் படையுடன் அனுப்ப, அவன் பன்னிரண்டு கோட்டங்களைக் கைப்பற்றி வேங்கி நாட்டின் மலையுச்சியில் திரிபுவன அங்குசத்தை நிலைநாட்டினான். பின் கட்டே கோட்டையில் மனநிறைவுடன் காட்சி தந்து, கண்டுகூர்,

பெஜவாடா முதலிய இடங்களைக் கண்டு வியந்து பண்டரங்க பரமேஸ்வர பக்தன் ஆதித்ய படார சுவாமிக்கு வழங்கிய பூமி இது. இதில் எட்டுப் பொதியளவு நெற்களை விதைக்க முடியும். தம்ம வரத்திலுள்ள இச்சொத்தைக் காத்து வருபவர்கள் அசுவமேதயாகம் செய்ததன் பலனையடைவர் என்பது இப்பாடலின் பொருளாகும்.

> கி.பி. ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் எழுதப்பட்ட கல்வெட்டில் பிராகிருத மொழி விரிவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. 9, 10 ஆம் நூற்றாண்டுகளில் சமஸ்கிருதப் பாவடிவங்கள் இல்லாமல் முழுக்க முழுக்கத் தெலுங்குப் பாவடிவங்களில் அமைந்த கல்வெட்டுக்களைக் காண முடிகிறது. விரியாலகாமசானி கூடுரு கல்வெட்டில் (கி.பி.1000) ‘சம்பலமால்’ பா வடிவில் அமைந்த மூன்று செய்யுட்களும் ‘உத் பலமால்’ பாவடிவில் அமைந்த இரண்டு செய்யுட்களும் காணப்படுகின்றன. ஆனால், இக்காலத்தில் சமஸ்கிருதமும் தெலுங்கும் கலந்து எழுதப்பட்ட, உரைநடையும் பாடலும் கலந்த ஒரு இலக்கிய வடிவமே நிலவி இருக்கிறது.[6]

இதனை அடிப்படையாகக் கொண்டுதான் தெலுங்குக் கவிஞரான நன்னயா தனது பாரதத்தை இயற்றியுள்ளார்.

நன்னயா காலத்திற்கு முன்பே சமணப் பழைய புராணங்கள் தெலுங்கு மொழியில் வழங்கி வந்தமைக்கு எர்ரனாவின் பாரதத்தில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. எனவே கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டிற்கு முன்பிருந்த காலத்தைத் தெலுங்கு இலக்கிய வரலாற்றில் கல்வெட்டு இலக்கிய காலமாகவும், புத்தம் மறைந்து சமணம் தழைத்த காலமாகவும் கூறுவர்.

தெலுங்கு இலக்கியத்தின் தொன்மை வடிவங்களைக் கல்வெட்டுக்களில் காணலாம். கல்வெட்டுக்களில் கி.மு.200லிருந்து கி.பி.200 ஆண்டுகள் வரை பிராகிருதம் பயன்படுத்தப்பட்டது. அதே நேரத்தில் சமஸ்கிருதமும் தனக்குரிய

இடத்தைப் பெற்று கி.பி.500 வரை தொடர்ந்து ஆதிக்கம் செலுத்தியது. கல்வெட்டுக்களில் தெலுங்கு பெயர்ச் சொற்கள் சமஸ்கிருதத்திலும் பிராகிருதத்திலும் காணப்பட்டாலும், கி.பி.500லிருந்து சமஸ்கிருதத்துடன் தெலுங்கும் இடம் பெற்றது. படிப்படியாக கி.பி.700லிருந்து கல்வெட்டுகளில் முழுக்கத் தெலுங்கே இடம் பெற்றது. கி.பி.848இல் அதங்கி என்ற இடத்தில் கீழைச் சாளுக்கியர்களின் தளபதியான பாண்டுரங்காவின் பெயரில் அமைந்த கல்வெட்டில் முதல் தடவையாகத் தெலுங்குக் கவிதை பொறிக்கப்பட்டது.

கல்வெட்டு இலக்கிய காலத்திற்குப் பின்னர் இராஜராஜநரேந்திரன் வேண்டுகோளினால் நன்னயா வியாசபாரதத்தைத் தெலுங்கில் மொழி பெயர்த்துத் தெலுங்கு மொழிக்கு முதன் முதலில் ஏட்டிலக்கிய வடிவம் தந்தார். ஆனால் நன்னயா பாரதத்தில் சமஸ்கிருத மொழி, இலக்கிய ஆதிக்கம் மிகுதியான அளவில் காணப்பட்டது. இவருக்குப்பின் வந்த வீரசைவக் கவிஞர் (கி.பி.12, 13) முதன் முதலாகத் தெலுங்குத் தேசி யாப்பு வடிவங்களையும், மக்கள் மொழியினையும் இலக்கியத்தில் கையாண்டு புதுமை செய்தார். ஆனால் இவர்களுக்குப் பின் கி.பி.13, 14 ஆம் நூற்றாண்டுகளில் நன்னயாவால் விடப்பட்ட வியாச பாரதத்தைத் தெலுங்கில் மொழிபெயர்த்து திக்கனா, எர்ரனா ஆந்திர மகாபாரதத்தைப் பூர்த்தி செய்துள்ளனர்.

கி.பி.பதினாறாம் நூற்றாண்டில் கிருஷ்ணதேவராயர் ஆட்சியில் தெலுங்கு மொழி உன்னத நிலையை அடைந்தது. தெலுங்கு மொழியின் இலக்கிய நயங்களைக் காட்டும் பிரபந்தங்கள் மிகுதியாக இயற்றப்பட்டன. தேவராயரைத் தெலுங்கு இலக்கிய வளர்ச்சிக்கு அடிகோலியவர் எனக் குறிப்பிடலாம்.

தமிழகத்திலும், மைசூர் பகுதியிலும் நாயக்கர் ஆட்சியின் விளைவால் பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டுகளில் உரைநடை, கீர்த்தனைகள், யக்ஷகானங்கள் போன்ற இலக்கிய வகைகள் செல்வாக்குப் பெற்றன. 19 ஆம்

*நூற்றாண்டிலிருந்து மேலைநாட்டு இலக்கியத்தின் செல்வாக்கால் தற்காலத் தெலுங்கு இலக்கியம் செழித்து வளரத் தொடங்கி இன்று தற்கால இந்திய இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது.*

**சங்க இலக்கியங்களில் தெலுங்கு, வடுகு, தெலுங்கர் நாடு பற்றிய குறிப்புகள்**

*திராவிட மொழிகள் நான்கில் மிகுதியான மக்களால் பேசப்படும் தெலுங்கு இந்திய மொழிகளுள் இரண்டாவது இடத்தைப் பெறுகிறது. தெலுங்கில் காலத்தால் முந்திய புலவர்களான பதினொரு பன்னிரண்டாம் நூற்றாண்டில் நன்னயா, நன்னிசோடா முறையே தெலுகு, தெனுகு எனும் பெயரால் இம்மொழியைக் குறிப்பிட்டனர்.*

*முதன் முதலில் தெலுங்கு நாட்டைப்பற்றிக் குறிப்பாகத் தெரிவிப்பது தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் (1-3) இரண்டாவதாக தெரிவிப்பது தொல்-சொல் (882 எச்ச-4) என்று கூறலாம். தொல்காப்பியர் காலத்தில் வேங்கடத்திற்கு வடக்கில் கொடுந்தமிழ் வழங்கிற்று என்றும் அது பின்னர் திரிந்து வடுகு (தெலுங்கு) என்னும் கிளைமொழியாக ஆயிற்று என்றும் அறியலாம்.*

> கலிங்கத்திற்கு வடக்கில் ஆந்திரம் என ஒரு தெலுங்கு நாடு இருந்தது என்றும், ஓர் ஆந்திர அரச மரபினர் வடஇந்தியாவையும் ஆண்டு வந்தனர் என்றும், வடமொழி ரிக்குவேத ஐத்திரேய பிராமணத்தாலும் இதிகாச புராணங்களாலும் அறியக் கிடைக்கின்றது. ஆந்திரரை ஐத்திரேய பிராமணம் அநாகரிகராகக் குறிப்பிடினும் பிளினி, ஒரு வலிமை மிக்க நாட்டாராகக் கூறியுள்ளார். 'பியூட்டிங்கர் பட்டிகை'களிலும் ஆந்திரர் குறிக்கப்படுகின்றனர். சேரன் செங்குட்டுவனுக்கு வடநாட்டுச் செலவில் துணைவரான நூற்றுவர் கன்னர் ஆகியோர் ஆந்திர மன்னராக இருந்திருக்கலாம்.[7]

தெலுங்கை தெலுகு, தெனுகு என்று வழங்கினும் தெலுங்கு மொழி எனத் தமிழுக்கு வேறாக அமைந்த மொழி ஒன்று பற்றிய எண்ணம் இப்பெயர்ச் சுட்டின்றியும் அமைந்ததனைத் தமிழ் இலக்கியம் காட்டுகின்றது எனக் கூறலாம். தமிழ் மொழி என்ற ஒன்றும், அது அல்லாத ஒன்றோ பலவோ ஆன பிற மொழிகளும் உண்டு என்ற உணர்வு பழந்தமிழ்க் குறிப்பில் பரவலாக அமைகின்றது.

மாமூலனாரின் பல குறிப்புகள் (அகம் 31, 127, 211, 281, 295) தெலுங்கு மொழியைக் குறித்திருக்கலாமோ எனும் எண்ணம் மொழிபெயர் தேயம் என்பதனுடன் வரும் 'வேங்கடம்', 'வடுகர்' என்பனவற்றால் தோன்றுகின்றது. வேங்கடத்திற்குத் தெற்குப் பகுதியில் தமிழ் வழங்கியது பற்றிப் பழங்குறிப்பு உள்ளமையால் அதன் வடக்கு வேறு மொழி பேசப்பட்டது புலப்படும். அது இம்மேற்குறிப்பின்படி தெலுங்காக இருக்கலாம்.

வடுகர், வடுகு எனும் சொற்கள் தெலுங்கரையும், அவர் மொழியினையும், நாட்டையும் குறித்ததைத் தமிழ் லெக்சிகன் காட்டுகின்றது. தொல்காப்பிய உரை, சங்க இலக்கியம் என்பன இம்முடிவுக்கு வர வாய்ப்பளிக்கின்றன. வடக்கில் வழங்கிய மொழியானமையின் வடுகு ஆயிற்று எனலாம்.

வடதிசை மருங்கின் வடுகு வரம்பாக எனப் பேராசிரியர் உரையெழுதுகின்றார்.

தென் பரதவர் மிடல்சாய
வட வடுகர் வாளோட்டிய[5]

எனப் புறநானூறு அமைகின்றது. இனப்பெயர் போன்று இச்சொல்லாட்சி பன்முறை சங்கப் பாடலில் இடம் பெறுகிறது. நற். (212.5-6), அகம் (107.11), (213.8), (253.18), (281.7-8), (375.14), (381.7) போன்ற பாடல்களில் 'மொழி பெயர்தேஎம்' பற்றிப் பேசிய மாமூலனார் வடுகரையும் இணைத்துக் கூறியது

*(அகம்.295) இங்கும் இணைத்து நினைக்கத்தக்கது. நற்றிணையில் இவ் இனக்குறிப்பு வருமிடத்து உரையாசிரியர்,*

> இவ்வடுகர் கோடைமலை, நீலகிரி முதலிய மலைத் தடவுகளில் வாழ்வர். தடவரென்ற பொதுப் பெயர் ஒரு சிலர்க்குச் சிறப்புப் பெயரானமையின் இவர்களை இப்போது பாடகர் என்று கூறுகின்றனர். வேங்கடத்தின் வடபுலத்து வாழ்ந்த வடுகர் இவரின் வேறு என்பாரும் இருவரும் ஒரு திறத்தார் என்பாரும் உண்டு[9]

*எனக் கூறுவதும் எண்ணத்தக்கது.*

*எனவே தெலுங்கின் பழம்பெயராக 'வடுகு' என்பது தமிழரால் வழங்கப்பட்டது எனலாம். கம்பராமாயணப் பாயிரமும் வடுகு எனக் குறிக்கின்றது. இன்னும் பிற்காலத்தில் தொல்காப்பிய நச்சினார்க்கினியர் உரை வடுகும்-தெலுங்கும் எனக் குறிப்பிட்டதால் இரு மொழியாகி இவை பிரிந்துவிட்டதை உணர்ந்த தெளிவு கிடைப்பதாகக் கருதலாம். அத்துடன் நன்னூலின் உரையில் தெலிங்கம்-தெலுங்கம் எனும் குறிப்பு இடம் பெறுகிறது.*

> ஆந்திரர் நெடுங்காலமாக ஒரு தனி மன்பதையராக இருந்து வந்திருக்கின்றனர். எனினும் அவரது மொழி கடைக்கழகக் காலம் வரையில் கொடுந்தமிழாயும் கிளை மொழியாயுமிருந்து அதன் பின்னரே வடமொழிக் கலப்பால் இனமொழியாய்ப் பிரிந்துவிட்டது. கடைக்கழகக் காலத்தில் வேங்கட எல்லையில் தெலுங்கு இருந்ததில்லை. அன்று வேங்கட மலை புல்லி என்னும் வள்ளலுக்குரியதாக இருந்தது.[10]

*இதனைப் புறநானூறு,*

> கடுமான் புல்லிய காடிறந் தோரே[11]

*என்று கூறுகின்றது.*

*தெலுங்கு மொழியை முதன்முதலாகக் குறிப்பிட்ட அயலார் 7 ஆம் நூற்றாண்டினரான ஹீவென்த்சாங் என்னும் சீனத் திருப்போக்கர் ஆவார்.*

> சுரஞ்செல் கோடியர் கதுமென விசைக்கு
> நரம் சொடு கொள்ளு மத்தத் தாங்கட்

கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்

நெடும் பெருங் குன்ற நீந்தி[12]

என்று குடவாயிற் கீர்த்தனாரும்.

குல்லைக் கண்ணி வடுகர் முனையது

பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்

மொழி பெயர் தேஎத்த ராயினும்

வழிபடல் சூழ்ந்திசின வருடை நாட்டே[13]

என்று மாமூலனாரும் பாடியிருப்பதால், கடைக்கழகக் காலத்தில் வேங்கடத்திற்குத் தெற்கில் தெலுங்கு வழங்கவில்லை என்பது தெரிகிறது.

'வடுகரசராயிரவர் மக்களை உடையவர்' 'வடுகரசர்க்குச் சிறந்தார் சோழியவரசர்' என்னுந் தொடர்களைச் சேனாவரையர் (எ.டு) கூறியிருப்பதால், இடைக்காலத்தில் வடுக அரசர்க்கும் சோழர்க்கும் ஏற்பட்டிருந்த தொடர்பு புலனாகின்றது.

> 15 ஆம் நூற்றாண்டில் வீரசேகர பாண்டியனுக்கும் சந்திரசேகர சோழனுக்கும் பகைமை நேர்ந்தபோது, முந்தியவன் வேண்டுகோட்கிணங்கி விசயநகரத்தரசராகிய கிருட்டின தேவராயர் தம் படைத் தலைவராகிய நாகம நாயக்கரை அனுப்ப, அவர் சென்று சோழனை வென்றார். அதிலிருந்து சோழ பாண்டிய நாடுகள் நாயக்க மன்னர் கைப்பட்டன. தெலுங்கர் பலர் தமிழ்நாட்டில் குடியேறினர். அவருள் நாயக்கர் (நாயுடு), இரெட்டியார் என்பவர் தலைமையானவர். கம்பளத்தாரும் சக்கிலியருமாகிய தெலுங்கர் 9 ஆம் நூற்றாண்டிற்கு முன்பே தமிழ்நாட்டில் குடியேறிவிட்டனர். அவரே முதன் முதலில் வடுகர் எனப்பட்டனர்.[14]

15 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் பாண்டியர் வலிமை குன்றியதாலும் தெலுங்கர் பலர் தமிழ் நாட்டில் குடியேறி விட்டதாலும் பாண்டிய நாட்டில்

தெலுங்க வேளிரும் குறுநில மன்னரும் தோன்றினர். அங்ஙனந் தோன்றிய வேளகங்களுள் எட்டயபுரமும், பாஞ்சாலங்குறிச்சியும் தலைமையானவை.

தெலுங்கர் தமிழ்நாட்டில் குடியேறவே தனித்தமிழ் நிலையங்களாக இருந்த திருவேங்கடம் திருக்காளத்தி, திருத்தணிகை முதலிய வடபாற் சிவநகரங்கள் இருமொழி நிலையங்களாக மாறிவிட்டன. தெலுங்கு நாட்டை அடுத்த தமிழரும் தெலுங்கைக் கற்றுத் தெலுங்கராக மாறி வருகின்றனர்.

**சங்க இலக்கியங்களுக்கும் தெலுங்கின் பழைய இலக்கியங்களுக்குமான உறவும், தொடர்புகளும்**

சங்க இலக்கியங்களுக்கும், தெலுங்கின் பழைய இலக்கியங்களுக்கும் பல்வேறு தொடர்புகள் இருந்துள்ளதைச் சங்கப் பாடல்கள் பல உணர்த்துகின்றன.

'வடவேங்கடம் தென்குமரி யாயிடைத் தமிழ்க் கூறு நல்லுலகத்து' என்னும் பனம்பாரனாரின் பாடலடிகள் தமிழ்நாட்டு வட எல்லையாக அமைந்திருந்தது திருவேங்கடம் என்பதை அறிவிக்கும். இவ்வேங்கட மலைக்கு அப்பால் இருந்தது வடுகர் நாடு.

'வடதிசை மருங்கின் வடுகு வரம்பாக' என்றார் காக்கைப் பாடினியார். 'வட வடுகர் வாளோட்டிய' என்கிறது புறநானூறு,

ஓங்கு வெள்ளருவி வேங்கடத் தும்பர்
வானிணைப்புகவின் வடுகர் தேஎத்து[15]

என்னும் அகநானூற்றுப் பாடலடிகளும்,

புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன் சிலைத்
தொடையமை பகழித் துவன்று நிலைவடுகர்
பிழியார் மகிழார் கலிசிறந்தார்க்கும்
மொழிபெயர் தேஎய மிறந்தன ராயினும்[16]

என்று வரும் அகநானூற்றுப் பாடலடிகளும், தமிழ்நாட்டு எல்லையாகிய திருவேங்கடத்திற்கு அப்பால் வேற்றுமொழி வழங்கியது என்பதையும் அம்மொழியாளர் 'வடுகர்' எனத் தமிழரால் குறிக்கப்பட்டனர் என்பதையும் எடுத்துக்காட்டுவனவாம். 'வடுகர்' என்பது தெலுங்கரையே குறிக்கும் என்பர் மு.இராகவையங்கார். வடுவர் என்னுஞ்சொல் தமிழ்நாட்டிற்கு வடக்கே வாழ்ந்தவர்களைக் குறிப்பதாகும். அக்காலத்தில் தெலுங்கும், கன்னடமும் வெவ்வேறாகப் பிரித்துணரப்படவில்லை. எனவே, வடுகர் என்பது தமிழினும் வேறாக அமைந்த மொழியைப் பேசிக் கொண்டுத் தமிழகத்தின் வடக்கு எல்லையில் வாழ்ந்தவர்களைக் குறிக்கத் தமிழர்களால் வழங்கப்பட்டது என்பதை அறியமுடிகின்றது.

தமிழைத் 'திராவிடம்' என்றும் 'அரவம்' என்றும் தெலுங்குப் புலவர்கள் தம் நூல்களில் குறிப்பிடுகின்றனர். கிருஷ்ணதேவராயர் தம்முடைய ஆமுக்த மாலியதாவில் தமிழ்ப் பெண்களைத் 'திராவிட அங்கநல்' என்று குறிப்பிடுகின்றார். கிருஷ்ணதேவராயருக்கு முன்னரே தமிழோடு தொடர்பு கொண்டிருந்த வீரசைவப் புலவரான பால்குரிகி சோமநாதர் தம்முடைய விருஷாதிப சதகத்துள் தமிழ் மொழியைத் 'திராவிட பாஷா' என்றே குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறெல்லாம் தமிழ்மொழியில் தெலுங்கு, தெலுங்கர் என்பவையும் தெலுங்கு மொழியில் தமிழ், தமிழர் என்பவையும் குறிப்பனவற்றை அறியலாம்.

இக்காலத்தில் 'அரவம்' என்பது தமிழைக் குறிக்க வழங்கும் சொல்லாக ஆந்திரம், இராயலசீமைப் பகுதிகளில் காணப்படுகிறது. தெலுங்கு மக்கள் தமிழைத் 'தமிழகம்' என்று குறிப்பிட்டு வழங்குகின்றனர்.

தமிழரும் தெலுங்கரும் தமிழ்நாட்டு எல்லைகளில் ஒருவரோடு ஒருவர் உறவு கொண்டு வாழ்ந்திருந்தனர். பல்லவர் காலத்திலோ அவருக்கு முன்னரோ சோழநாட்டுச் சோழ பரம்பரையினருள் ஒரு கிளையினர் தெலுங்கு நாட்டின் தெற்குப் பகுதியினை ஆண்டிருந்தனர். அப்பகுதி சேர நாடு எனப்படுவது, கடப்பை மாவட்டத்தினைச் சார்ந்தது. இவர்கள் சோழர்கள் என்று அழைக்கப்படலாயினர். பிற்காலத்தில் தெலுங்குச் சோழர் என்று அழைக்கப்பட்டோர் இவரே ஆவர். பிற்காலச் சோழர் கீழைச் சாளுக்கியருடன் கொண்ட உறவு தெலுங்கு மொழியுடன் தமிழ்மொழி உறவு கொள்ளுவதற்குரிய சூழ்நிலையை ஏற்படுத்தியது.[17]

*தெலுங்கர் கி.பி.11 ஆம் நூற்றாண்டிலிருந்தே தமிழ்நாட்டோடு தொடர்பு கொண்டு வந்துள்ளனர். கீழைச் சாளுக்கிய மன்னன் இராஜராஜ நரேந்திரன் (கி.பி.1019-1061) இராஜேந்திரச் சோழனின் மகள் அம்மங்கதேவியை மணமுடித்ததிலிருந்து தமிழ் நாட்டோடு தெலுங்கர்களுக்கு அரசுமுறைத் தொடர்பு ஏற்பட்டது. இக்காலத்தில் காவேரிப் பகுதியில் வாழ்ந்த தமிழர்கள் பலர் நரேந்திரனால் கோதாவரி நதிக்கரையில் குடியமர்த்தப்பட்டனர். இவர்கள் அக்காலத்தில் தெலுங்கு நாட்டில் 'ஆராம திராவிடுலு' (கரையோரத் தமிழர்கள்) என அழைக்கப்பட்டனர்.*

*கி.பி.பதினோராம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் விஜயநகரப் பேரரசு அழிந்தபின் தென்னகத்தில் நாயக்க மன்னர்கள் உட்பூசல்கள், உள்நாட்டுப் போர்கள் ஏதுமின்றி அமைதியான முறையில் ஆட்சி நடத்தினர். எனவே மக்களிடமிருந்து பெற்ற பணத்தைக் கலை, இலக்கியம் முதலியவற்றிற்கு அதிகமாகச் செலவழித்தனர். இந்நிலை தஞ்சை, மதுரை, புதுக்கோட்டை, மைசூர் அரசவைகளில் தெலுங்கு இலக்கிய வளர்ச்சி ஏற்படுவதற்குக் காரணமாயிற்று. இக்காலக்கட்டத்தில் நாயக்க மன்னர்கள் வாழ்க்கையை இன்பமாகக் காமக் களியாட்டத்தில் கழித்தனர். ஆகவே இவர்களது இரசனைக்கேற்ற வகையில் காமச்சுவை மிகுந்த தெலுங்கு இலக்கியங்களே பெரும்பாலும் படைக்கப்பட்டன. மன்னர்கள் காதலும் மன்னனை நினைத்து*

ஏங்கும் விரகவுணர்வும் இலக்கியங்களின் பாடுபொருள்களாக அமைந்துள்ளன.

> எட்டுத்திக் கஜங்களுள் ஒருவரான தூர்ஜடிகவி தம்முடைய காளஹஸ்தி மகாத்மியத்துள் நக்கீரர் வரலாற்றினையும் கண்ணப்பர் வரலாற்றினையும் விவரிக்கின்றனர். நக்கீரர் வரலாற்றுடன் மதுரைத் தமிழ்ச்சங்கம் பற்றிய செய்திகளையும் சங்கப் பலகையைப் பற்றிய குறிப்பையும் (தூரிதியாஷ்வாசமு 141–147) காண முடிகிறது.[18]

தியாகராசரின் தெலுங்கிசைப் பாடல்களில் தமிழிசை உலகில் பெருஞ் செல்வாக்குடன் திகழ்கின்றன. தஞ்சைத் திருவாரூரில் தோன்றிய தியாகராசர் பாடிய தெலுங்கு மொழி இசைப்பாடல்கள் தமிழிசை அரங்குகளில் இன்றும் ஒலித்து வருகின்றன. திருவாரூரில் பிறந்து திருவையாற்றில் வாழ்ந்த தியாகராசர் தமிழ் மொழியால் ஈர்க்கப்படாதது வியப்புக்குரியதாகவே உள்ளது.

தெலுங்கிலக்கிய முதலாசிரியராகிய நன்னயர் இயற்றியது முதற் கொண்டு தெலுங்கில் தோன்றிய இலக்கியங்களுள் பெரும்பான்மையும் சம்பு (உரையிடையிட்ட செய்யுள்) யாப்பில் அமைந்தவையே. 'துவிபதம்' என்னும் இரண்டடி யாப்பு வகையிலான இலக்கியங்கள் முழுவதும் செய்யுட்களானவை. இத்துவிபத யாப்பில் அமைந்த தெலுங்கு நூல்களுள் முதன்மையானது பால்குரிகி சோமநாதர் இயற்றிய பசவபுராணம் ஆகும். அரங்கநாதர் (ரங்கநாதா) இயற்றிய ரங்கநாதா ராமாயணம் 'துவிபத' யாப்பில் அமைந்தது. ஸ்ரீ நாதர் இயற்றிய 'பல்நாடி வீரசரித்திர'மும் துவிபதத்தில் அமைந்ததேயாகும். திருவேங்களராஜீ இயற்றிய 'சொக்கநாத திருவிளையாடல் சரித்திரம்' துவிபதத்தில் அமைந்துள்ளது. இவ்விலக்கியங்களில் உள்ள பாடல்கள் அனைத்தும் சங்க இலக்கியங்களைப் போலவே செய்யுள் வடிவிலேயே அமைந்துள்ளது.

## பழந்தமிழின் இலக்கணத்திற்கும் பழைய தெலுங்கின் இலக்கணத்திற்கும் உள்ள ஒப்புமைகள்

*தமிழ்-தெலுங்கு மொழிகளின் இலக்கணக் கூறுகளில் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன.*

### 1. பெயர்ச் சொற்கள்

நான், நாம், நீ என்று இடத்தைக் குறிக்கும் மூவிடப்பெயர்கள்.. எவன், எவர், ஏது என்பவற்றைக் குறிக்கும் வினாப் பெயர்கள். தாத்தா, தந்தை, அண்ணன் என உறவு முறையைக் குறிக்கும் முறைப்பெயர்கள். இடம், இல் என இடத்தைக் குறிக்கும் இடப்பெயர்கள். காலம், பகல், இரவு எனக் காலத்தைக் குறிக்கும் காலப்பெயர்கள். தலை, கண், செவி என உறுப்புக்களைக் குறிக்கும் சினைப் பெயர்கள். ஒன்று, இரண்டு, மூன்று என எண்களைக் குறிக்கும் எண்ணுப் பெயர்கள். இனிப்பு, புளிப்பு, உப்பு எனச் சுவையைக் குறிக்கும் சுவைப்பெயர்கள். பலம், சேர், வீசை எனக் நிறையைக் குறிக்கும் நிறைப் பெயர்கள் போன்றவற்றில் தமிழ்ச் சொற்களுக்கும், தெலுங்குச் சொற்களுக்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன.[19]

### 2. வினைச் சொற்கள்

எண், எண்ணு, வா, போ எனச் செய்யும் வேலையை அதாவது செயலைக் குறிக்கும் வினைச் சொற்கள். சின்ன, பெரிய, கெட்ட என வரும் பெயரெச்சங்கள். ஏ, ஓ, ஆகா என இடையில் வரும் இடைச்சொற்கள். கடு, வடி, சால் என வரும் உரிச் சொற்கள் போன்றவற்றிலும் தமிழ் தெலுங்கு இலக்கணங்களுக்கு இடையே பல ஒற்றுமைகள் உள்ளன.[20]

### தெலுங்குச் சொற்கள் தமிழில் திரிந்துள்ள முறைகள்

தமிழில் உள்ள கோணி என்ற எழுத்து தெலுங்கில் கோனெ என வரும். இதனை எழுத்துத் திரிபு என்பர். எழுத்துக்கள் திரிந்து வருவது

என்பது இதன் பொருள். சொற்கள் திரிந்து ஒலிப்பது சொல்திரிபு ஆகும். இதில் ஈறுகேடு, ஈறுமிகை, தொகுத்தல், இலக்கணப் போலி போன்ற சொல் திரிபுகள். செப்பு, ஈ எனப் பொருளைக் குறிக்கும் பொருள் திரிபுகள். வீடு, மனை, குடி என இயற்கையாக உள்ளவற்றைக் குறிக்கும். இயற்கைத் திரிபுகள், விதப்புச் சொற்கள், தொடர்ச் சொற்கள், வாக்கியங்களாக வரும் சொற்கள், முனி, மஞ்சு, கணக்கு என வரும் திரியாச் சொற்கள் போன்றவற்றிலும் தமிழ், தெலுங்கு மொழி இலக்கணங்களுக்கு இடையே பல ஒற்றுமைகள் இருக்கின்றன.[21]

**இலக்கிய உத்திகள்**

தமிழில் பல துறைகளிலும் கவிஞர்கள் தம் கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கு இலக்கிய உத்தி ஒரு கருவியாகத் தொன்றுதொட்டு இருந்து வந்துள்ளது. கருத்து வெளியீட்டிற்கு உரிய எளிய கருவியாக உரைநடை பெருவழக்குப் பெற்றுள்ள நிலையில் கவிதை மட்டும் உரிமையாகப் பல கூறுகளைப் பெற்றுள்ளது.

உத்தி எனும் சொல் பல்பொருள் நிலையானது. தமிழ்ப் பேரகராதி பல்வகை அடிச்சொல் நிலையில் இதற்குப் பல்வகைப் பொருள் நிலைகளைக் காட்டுகின்றது.

உத்தி – அனுமானம், அறிவு, தேர்தல், இசைவு, இணக்கம், தந்திர உத்தி,
திருவறுப்பு, தூக்கங்கள், தேமல், படப்பொறி, சொல்[22]

என்று சுட்டுகின்றது. பல பொருளும், வேறுபட்ட தோற்றமும் உடைய உத்தி என்னும் இச்சொல், இலக்கியத்தோடும் இலக்கியத் திறனாய்வோடும் இணைந்து வரும்போது தனிப்பொருள் கொள்கின்றது.

இலக்கணங்களும், உரைகளும் உத்தியாக முப்பத்திரண்டை மட்டும் பட்டியல் செய்துதந்துள்ளபோதும், அவை இத்துணை எளிதாக

வரையறுக்கப்படத் தக்கன அல்ல என்ற எண்ணம் இன்றளவும் நிலவுகின்றது. தொல்காப்பியத்தில் இஃது பற்றி,

மெய்ப்பட நாடி
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி லெண்ணி மாசறத் தெரிந்து கொண்
டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே[23]

என்று சுட்டப்பட்டுள்ளது. "சொல்லிய வல்ல பிற" என்பது சிந்தனைக்குரியது.

நடை, கவிதைமொழி, வருணனை, ஒலி நயம் போன்றன இதனுள் அடக்கப்படுகின்றன. உரையணிகளான உருவகம், உவமை, மீமரபுவமை போன்றனவும் இங்கு இடம் பெறும். நடையியல் என்பதால் ஒத்திசை, அமைப்பொருமை காட்சிப்படுத்தல், முரண், வேறுபாடின்மை, விகற்பம், கவிதைமொழி, இணைமை, உருவாக்கம், ஒலியின்மை, ஒலிக்குறிப்பு என்பனவும் கருதப்படுகின்றன.[24]

எல்லாத் கலைகளும் உத்திகள் பலவற்றைப் பெற்று விளங்கும். படைப்பாளி தனக்குரிய பல உத்திமுறைகளைப் பயன்கொண்டு ஆக்கம் புரிகின்றான். பிற எல்லாக் கலைகளைக் காட்டிலும் இலக்கியம், ஏற்றமும், சிறப்பும் பெற்று அமைவதற்குக் காரணமாக உத்தி வகைகள் அமைகின்றன. மேற்சொல்லப்பட்ட சான்றுகளிலிருந்து உத்திவரம்பின்றி அமையும் என்பதும் இலக்கியச் சிறப்பிற்கு இவை பெரிதும் துணைநிற்கின்றன என்பதும் பெறப்படுகின்றன.

### உணர்ச்சி - ஒரு விளக்கம்

கருத்து, கற்பனை, அணிநலன்கள் ஆகியவை உரைநடைக்கும் உரியனவாகிப் பொதுத்தன்மை பெற்றுவிட்டது. உணர்ச்சியும் வடிவமும் கவிதைக்கு எஞ்சியுள்ளன. இவ்விரண்டிலும் உணர்ச்சி, இலக்கியம் உட்பட எல்லாக் கலைகளுக்கும் பொதுவென அமைந்துள்ளது. பிற கலைகளுக்கும் உணர்ச்சி தேவை என்றாலும் கவிதைக்கு உணர்ச்சி என்னும் கூறு முதலாக

*இருப்பதனால் அதை ஓர் இன்றியமையாத உயிர்க்கூறாக அறிஞர்கள் கருதுகின்றனர். பாட்டு என்பது கலை; உணர்ச்சியை முதலாகக் கொண்டது.*

இலக்கிய வகைகள் எல்லாவற்றிற்கும் உணர்ச்சியும் வடிவமும் இன்றியமையாதவை; ஆயினும் பாட்டே உணர்ச்சி மிக்கது; வடிவ அமைப்பிலும் சிறந்தது"[25]

*என்று மு.வரதராசன் தெரிவித்துள்ள கருத்துக்கள் இங்கு எண்ணத்தக்கன.*

உணர்ச்சி வசப்பட்ட மனநிலையில் கவிஞன் இருக்கும்போது அவன் உருவாக்கும் கவிதைகளில் தானாகவே வந்து வாழும் வார்த்தைகளுக்கு இசையும் தானாகவே வந்து சேரும். இதை நான் பலமுறை அனுபவத்தில் கண்டிருக்கின்றேன். 'ஒரு வெண்பா எழுது' என்று ஒரு புலவனிடம் கேட்டு வாங்கும் கவிதையைவிட அவனாகவே எழுதும்போது அதற்குச் சிறப்பு அதிகம்"[26]

*என்பது ஆங்கிலக் கவிஞரின் கருத்தாகும். கவிஞர் ஒருவருடைய அனுபவக் கருத்து, கவிதை ஆகியவை உணர்ச்சியால் சிறக்கின்றன என்பதனை இக்கூற்று மெய்ப்பிக்கும். இதிலிருந்து கவிதைக்கு உணர்ச்சி என்னும் கூறு இன்றியமையாதது என்பதை அறிய முடிகின்றது.*

ஒருவரின் மனவெழுச்சி உணர்ச்சி என்பர். இது பற்றிக் கூறும்போது உணர்ச்சிகளின் காரணங்களும் அவற்றைப் பெறும் முறைகளும் மனிதர்க்கு மனிதர் வேறுபட்டிருக்கலாம்; வீரம், காதல், இரக்கம் ஆகிய உணர்ச்சிகள் வெவ்வேறு காரணங்களால் வெவ்வேறு சூழ்நிலையில் பிறக்கலாம். ஆயினும், அந்த உணர்ச்சிகள் எல்லாக் காலத்தார்க்கும் எல்லா மாந்தர்க்கும் பொதுவாக உள்ள உணர்ச்சிகளே ஆகும்[27]

*என்று மேலைநாட்டு அறிஞர் மொழிவதனை இங்கு காணுதல் தகும் இவ்வகையில் தொல்காப்பியர் உணர்ச்சிகள் தோன்றும் பாங்கினை,*

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று
அப்பாலெட்டே மெய்ப்பாடென்ப[28]

என்று எண்வகைப்படுத்தியுள்ளார். இதன் அடிப்படையில் தெலுங்கு மொழி இலக்கியங்களிலும் உணர்ச்சி பெரும் பங்கு கொண்டுள்ளது.

**அழுகை**

மிகுந்த துன்பத்தினால் அழுகை தோன்றும். இழிந்த தன்மையும், பிறர் இறப்பும், தோல்வியும், வறுமையும் இவ்வுணர்வினைப் பெறச் செய்யும் நிலைக்களன்களாக அமைகின்றன. இதனை,

பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி
நட்டனை மன்னோ முன்னே யினியே
பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுது நிற் பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே[29]

என்ற பாடல் மொழிந்துள்ளது. பாரிமன்னன் இறந்தமையால் சங்கப்புலவர் கபிலர் உற்ற துயரத்தினை அழுகையுடன் மொழிந்துள்ளமையை இப்பாடல் காட்டுகின்றது. இதனைப்போன்று தெலுங்கில்,

3 3 3
வேடி யச்ருலு நிகு டங்க வெக்கி வெக்கி
3 3 3 3 3
யேட் வ தொ ட கெ லதாங்கி ப்ருத் வீசு ரோல
3 3 4
மருதுல பரிவேதனா க்ஷரோந்மிச்ர மதுர
கண்ட காகு விகாரகாகலிக யலர[30]

கொடியிடையாள் தமயந்தி நளமகாராஜனின் பிரிவை எண்ணித் துயரமுற்று இருக்கையிலே அவள் கண்களிலிருந்து சூடான கண்ணீர்த்துளிகள் கீழே சரிய தேம்பித் தேம்பி அழுதாளாம்.

ஸ்ரீநாதனின் அறிவுரையைக் கேட்டு போதனா தன்னுடைய பாகவத்தை அரசருக்குச் சொல்லி விடுவானோ என்று சரஸ்வதியே கண்கலங்கினாற் போல போதன்னாவுக்கு தோன்றியதாம். உடனே,

3 3 3 3

காடுககண்டி நீரு சனுகட்டு பயிம்ப ட நேல யேட் செதோ

3 3 3 3 3 3

கைபட தை த்யமர்துனு நிகாதிலி கோட ல யோயதம்பயோ

3 4 3

ஹாடக கர்பு ராணி! நினு நாகடிகிங் கொ னிபோயி, யல்லக

3 3 3 4

ர்ணாடகிராட கீசகுலகம்ம, த்ரிசுத்திக னம்மு பாரதி[31]

*என்னும் பாடலைச் சொன்னார்.*

*மையிட்ட கண்களிலிருந்து கண்ணீர் மார்பங்களின் மீது சரிய சரஸ்வதி தேவியைப்பார்த்து போதன்னா பின்வருமாறு கேட்கின்றார். உலக மாதாவே கர்பராணியே ஏன் அழுகிறாய்? கலைவாணியே கர்னாடக ஜிறாதர்களுக்கு உன்னை விற்றுவிடுவேன் என்று பயப்படுகிறாயா? என்று கேட்கின்றார் போதன்னா.*

**பெருமிதம்**

*வீரவுணர்வு பெருமிதம் எனப்படும். கல்வி, தறுகண், இசைமை, கொடைமை ஆகிய நான்கின் வழி இவ்வுணர்ச்சிக் குறிப்பு தோன்றும் என்கிறார். தொல்காப்பியர், இவ்வகையில் தெலுங்கில் 'நிர்வசனோத்தர ராமாயணத்தில்' திக்கனா வீரத்தைப் பற்றிச் சிறப்பாகக் கூறியுள்ளார். ராமன் ஆரண்யவாசம் முடித்து அயோத்திக்குத் திரும்பி ராஜியத்தை ஆளத் தொடங்குவதிலிருந்து இக்காப்பியக் கதை ஆரம்பமாகின்றது. இஃது பத்து ஆஸ்வாசங்களைக் கொண்டது. இதில் ராவணன் போன்றவர்களின் கதை, சீதை பரித்யாகம் (நெருப்பில் வீழ்வது), இராவணன் என்ற அசுரனை வதம் செய்யும் கதை, அஸ்வமேதாயாகத்தைக் கடைப்பிடித்தல், லவகுசன் இவர்களின் கதை, சீதையின் சிறப்பு பற்றிய செய்திகள் போன்ற காட்சிகளை வீரரசத்தை முதன்மையாக்கிச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இதில் 18 வகையான வருணனைகள் கையாளப்பட்டுள்ளன.*

3 3 3
கூலின வாரி ஜீசி வெட கொ ங்கின மெச்சக முன்னு வென்னுகா

3 3
நேலகு ஜொச்சு வாரு, தம ஸெய்யுரகட்ட மு வச்சு வாருனு

3 3
க்கீலயி நேர்புலேக தமகிஞ்சி பயிம்படி

வாலின மச்சரம்பகுட வாரண ஸேயக வச்சு வாருனை[32]

மருட்கை

*வியப்புடையன எல்லாம் மருட்கை என்னும் உணர்ச்சிக் குறிப்பை உணர்த்தும். ஏதேனும் ஒன்றினைக் கண்டு வியத்தலும் முன்னர்க் கண்ட அளவின் மிக்கன கண்டு வியத்தலும் சிறிய ஒன்றினைக் காணும் போதும் புதியன காண்டல் வழியும் இவ்வுணர்ச்சி வெளிப்படும். இவ்வுணர்வு தெலுங்கு மொழியில் உள்ள திக்கனாவின் ஆந்திர மகாபாரதத்தில்,*

3 4 3 4 3 3 3
கலபம்பு லபிநவ கந்த ம்பு லுக கூர்சி

3 3 3 3
தனுவுன நல'து து நனுவுகா க

3 3 3 3 3
ம்ருத மத வங்கம்பு ம்ருது வுகா சாரிஞ்சி

3 3 3
திலகம்பு வெட்டுது ஜெலுவு மிகு ல

3 4 3 3
நுவ்வுல பஹூவித ம்புல கட்டி முடி கொக்க

4
பங்கிகா நெத்துலு வட்டி யித்து

3 3
ஹாரமுல் மெறய நொய்யாரம் பு கா க்ருத்தி

3 3 3
யந்த ம்பு விந்தகா நலவரிந்த

4
விவித சில்பமுல ப்ரவீணனை மறியுனு

3
வலயு மனுலு வெங்கட மெல 'க நேர்து

மத்ஸ்யராஜ மகஷி மனமுன மக்குவ

3

நெல கொனங்க நிட்டு கொலுவ நேர்து[34]

இதில் நறுமணப் பொருட்கள், நல்ல சந்தனம் இவற்றால் மேனியில் பூசுதல், கஸ்தூரி திலகம் இடுவது, பூக்களைப் பல வண்ண மாலைகளாகத் தொடுத்து ஒவ்வொரு முடிக்கும் ஒவ்வொரு வண்ண பூ மாலையைச் சூடுதல், கழுத்தில் ஆரங்கள் அணிந்து கொண்டு இருக்கும்போது திரௌபதியைக் காண்பவர் வியப்படைவர்.

**தன்னுணர்ச்சிப் பாங்கு**

புலவன் தன்னுள்ளத்துத் தோன்றும் எண்ணங்களை அப்படியே எடுத்துக்காட்டுவது தன்னுணர்ச்சிப் பாங்கு என்பர். சங்க இலக்கியங்களில் இவ்வகை உத்தியினைப் புலவர்கள் பெரிதும் போற்றியுள்ளனர். தன்னுணர்ச்சிக் கவிதை புலவர்களின் மனநிலையை ஒட்டிப் பாகுபாடு செய்யப்பட்ட வகையைச் சார்ந்ததாகும்.

ஆங்கில இலக்கியம், இதனை லிரிக் (Lyric) என்ற பிரிவில் அடக்கும். இக்காலத்தில் தன்னுணர்ச்சிக் கவிதை ஒரு தனி மனிதனின் அகமன உணர்வுகளைச் சித்திரிக்கும் ஒரு சிறிய படைப்பாகக் காணப்படுகின்றது. இவ்வகையில் புறநானூற்றுப் பாடல் ஒன்றில்,

வெள்ளிடைப் பொத்திய விளைவிற்கு ஈமத்து
ஒள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஏங்கர் மாய்ந்தனள், மடந்தை
இன்னும் வாழ்வில்; என்இதன் பண்பே[35]

என்று இறப்புக் குறித்து வரும் பாடலில் "பெருங்கோப்பெண்டு துஞ்சிய காலை அவளோடு தானும் உயிர்விடவில்லையே" எனக் கசிந்து வாடுகின்றான் மன்னன்.

இவ்வகையிலே தெலுங்கு இலக்கியத்தில் விஜய நகர சாம்ராஜ்யத்தில் அரசரைத் தரிசிக்க ஸ்ரீ நாதகவி மிகவும் பாடுபட வேண்டி வந்தது. அரசரைப் பார்ப்பதற்கு நீண்டநேரம் காத்திருந்தாராம். அப்பொழுது தன்னைப்பற்றி தான் பாடிக் கொண்டப் பாடல்,

3 3
குல்லாயுஞ்சிதி கோக சுட்டிதி மஹாகூர் பாஸமும் தொட் கிதின்
3 3 3 3
வெல்லுல்லிந்தில ஷிஷ்ட முந்தே ஸவிதின் விச்வஸ்த வட்டி ம்பகா
3 3 3 3
சால்லாயம்பலி த்ராவிதின் ருசுலு தோடம் பஞ்சு போநாடி தின் தல்லீ!
3 3 2 3
கன்னட ராஜ்யலக்ஷிமி! தயலேதா நேனு ஸ்ரீ நாதுடன்![36]

என்பதாகும்.

தலைப்பாகை அணிந்து, நல்ல ஆடைகள் தரித்து வகை வகையான உணவுகள் உண்டு அனைத்து சுகங்களையும் அனுபவித்து இருக்கிறேன். இப்ப என் நிலை இப்படியாகி விட்டது தாயே! கன்னட ராஜலக்ஷ்மி என் மீது உனக்கு கருணை இல்லையா! நான் ஸ்ரீநாதன் வருந்துகிறேன் கருணைக் காட்டு தாயே! என்று கவிஞர் தன்னுணர்ச்சியைப் பாடலாக வெளிப்படுத்தியுள்ளார்.

**கற்பனை**

மனிதனின் உள்ளம் நினைக்கத் தெரிந்து கொண்ட காலந்தொட்டுக் கற்பனை உணர்வும் தோன்றியிருக்க வேண்டும் என்பர். கவிஞனின் உள்ளத்து எழும் எண்ணங்களைத் தானுணர்ந்தவாறு படைத்துக் காட்டுகின்றான். கற்போரும் இவ்வுணர்வினைப் பெற வேண்டும் என்ற நோக்கம் மேலோங்கப் படைப்பாளி கற்பனையைக் கையாண்டுள்ளமையை அவனது படைப்புகள் உணர்த்துகின்றன. புறக்கண்களால் காணவியலாத பலவற்றை அகக்கண்ணால் கண்டு வியக்கின்றான். கவிஞனின் மனத்தில் தோன்றிய அக்காட்சி எண்ணங்களாக வெளிப்பட்டுக் கற்பனை வடிவம் பெறுகின்றது. இருப்பினும்,

கற்பனை பற்றிய முடிவான கருத்து இதுவரை வெளியாகவில்லை என்பது ஈண்டு கருதத்தக்கது.

தனித்தனி இயல்புகளைக் கொண்டு அமைந்துள்ள பொருள்களை ஒன்றுசேர்த்துப் புதுப்பொருள் தோன்றப் பாடுவது படைப்புக்கற்பனை எனப்படும்.

**அரசியல்**

மனிதனை நல்லாற்றுப்படுத்தி, செம்மை பெறச் செய்வது அரசியலாகும். மன்னன் எவ்வழியோ அவ்வழியே மக்களும் செல்வர். ஆள்வது அரசு, ஆளப்படுவது குடி. இவ்விரண்டும் சேர்ந்திருப்பதை அரசியல் என்பர். இந்தியாவில் திருவள்ளுவர், சாணக்கியர் போன்றோர் அரசியல் நுட்பம் அறிந்தவர்களாவர். இவ்வகை அமைப்புப் பண்டைத் தமிழகத்திலும் அமைந்திருந்தது என்பதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. சங்ககால மக்களுக்கு மன்னன் உயிராக விளங்கினான் என்பதை,

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்[37]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றது.

சங்ககாலப் புலவர்கள் இரத்தல் கருதியும், இருபெரு வேந்தர்களைச் சந்து செய்வித்தல் பொருட்டும், போர்முறை கருதியும் சென்று வந்துள்ளனர். இந்நிலையில் நாடாளும் வேந்தனின் இயல்பு பற்றிப் பாடுவது இயல்பாகும். இவ்வகையில் முன்பிருந்த சோழன் நளங்கிள்ளியையும், அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் பற்றி,

நின்ன கண்ணியும் ஆர்மிடைத் தன்றே; நின்னொடு
பெருளவோன் கண்ணியும் ஆர்மிடைத்தன்றே;
ஒரு வீர் தோற்பினும், தோற்பது நும்குடியே
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்
குடிப்பொருள் அன்று, நும் செய்தி[38]

**பக்தி**

*தெலுங்கில் பக்தி என்பது அனாதையாக கடவுள் இருக்கின்றாரா? எங்கே இருக்கின்றார் காட்டுங்கள்! போன்ற கேள்விகள் இருந்து கொண்டுதான் உள்ளன. அதனால் தான் ஹிரண்ய கசிபனின் வாயால் இம்மாதிரியான கேள்வியினைக் கேட்க வைத்துப் பிரஹலாதனின் வாயிலாக இதற்குப் பதில் சொல்கிறார் போதனா.*

**3 3**
**இந்து கட ட ந்து லேட னி**

**3 3**
**ஸந்தேஹமு வலது சக்ரி ஸர்வோபகதும்**

**3 3 3**
**டெந்தெ ந்து வெதகி சூசின**

**3 3 3 3**
**நன்த ந்தே கலடு தான வாக்ரணி விண்டே**[40]

*(இதில் உள்ளான். அதில் இல்லை என்ற சந்தேகம் தேவையற்றது. அந்த திருமால் (விஷ்ணு) எங்கெங்கு தேடுகின்றாயோ அந்தந்த இடத்தில் எல்லாம் இருப்பான்)*

*பாகவதத்தில் கிருஷ்ண தத்துவம் நன்கு விளக்கப்பட்டது. கோபியர்களது பக்தி மதுர பக்தியாகச் சித்திரிக்கப்பட்டது. உலகெங்கும் கிருஷ்ண மயம்தான் என்று கூறுவது ராசக்ரீடை (ராச விளையாட்டு) காட்சியால் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாத்திரப் படைப்பிலும் போதன்னா ஆழ்ந்து சென்று தன்னுடைய பக்தியை எடுத்துரைத்துள்ளார். கடவுள் அனைத்து இடங்களிலும் இருப்பவன் என்றும் 'கலட்[3] ந்து[3] ரு த்[3] னுலயெட[3]' பாவப்பட்டவர்களிடத்தில் கடவுள் இருப்பான் என்றும் கூறுகின்றார்.*

**வடிவம்**

*பாட்டு உணர்ச்சிக்குத் தகுந்த ஓசைநயமும் வடிவமும் உடையது. இடத்திற்கு ஏற்ப சுவையும் வெவ்வேறு சீர்களோடு ஓசை நயமும்*

பெற்றுவரும். சில சமயம் செப்பலும், அகவலும், துள்ளிக்குதிக்கும் ஓசையும் தூங்கிவிழும் ஓசைநயத்துடன் பாட்டு வெளிப்படும். இதனை 'பா' என்று தொல்காப்பியர் செப்பினார். இது பற்றி ஆராயும் நோக்கில் யாப்பிலக்கண ஆராய்ச்சியெல்லாம் எழுந்தது. ஓசைநயம் கருதி உணரும் தன்மையில் சீர்களாகவும் சீர்களை அசையாகவும் பிரித்தனர்.

தொல்காப்பியச் செய்யுளியல் பண்டைக்கால யாப்பிலக்கணத்தை ஆராய்கின்றது. இந்த இலக்கணம் வகுத்த யாப்பு விதிகளுக்கு உட்பட்ட செய்யுளாகவே சங்ககாலப் பாடல்கள் எல்லாம் அமைந்திருக்கின்றன. செய்யுளியலில் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, பரிபாடல் ஆகிய அறுவகைச் செய்யுட்கள் சிறப்புறப் பேசப்பெற்றன. இவையெல்லாம் ஒழுங்குற அமையும் பாங்கினை இலக்கிய வடிவம் என்பர்.

> "கவிதையில் வெறும் வடிவம்" என்று ஏதொன்றும் கிடையாது; கருத்து வெளிப்பாடே வடிவங்களாகும்[41]

என மேனாட்டு அறிஞர் செப்பினார். இஃது யாப்பு என்பது இயல்பானது என்னும் உணர்வோட்டத்தைப் புலப்படுத்துகின்றது.

தெலுங்கு இலக்கியங்களில் பக்தி, தத்துவம், அரசியல் போன்றவை பாடுபொருளாக மிளிர்கின்றன.

**அணிநயம்**

செய்யுளில் அமையும் அழகை தமிழ் இலக்கண நூலார் அணி என்றனர். இதனை வடமொழியாளர் அலங்காரம் என்பர். மொழியின் அழகை விளக்குவது அணி இலக்கணமாகும். புலவன் தன்னுடையக் கருத்தினைத் தெளிவாகவும், உறுதியாகவும் எடுத்துரைப்பதற்கு இலக்கியத்தில் அணிகள் பலவும் உதவுகின்றன. தொல்காப்பியர் தம் பொருளதிகாரத்தில் உவமை இயல் என்னும் பகுதியில் உவமையின் இலக்கணத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார். வினை, பயன், மெய், உரு ஆகிய பொருளின்

தன்மைகளை உவமைகள் சிறப்பிக்கின்றன என்பது அவர் தரும் விளக்கமாகும். பொதுவாகப் பொருளின் சிறப்பை வலியுறுத்த உவமை அமைக்கப்படுகிறது. அதன் உயர்வைக் காட்ட அதனினும் உயர்ந்தப் பொருளை வரையறை செய்து அமைக்கின்றனர். இந்நிலையில் உவமை பொருளை விட உயர்ந்ததாக இருக்க வேண்டும் என்பதை,

உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை[42]

என்று தொல்காப்பியர் செப்பினார். இவற்றின் அடிப்படையை வைத்துக் கொண்டு, சங்கப் பாடல்களில் வரும் உவமை நயங்களைப் போல் தெலுங்கு இலக்கியத்திலும் காணப்படுகிறது.

**உவமை அணி**

வானி சக்கதனமு வைராக்யமுன சேஸி
காங்க்ஷஸேயு ஜாரகாமினுலகு
3 3
போக பா ஹ்யமய்யெ பூசினஸம்பங்கி
4 3
பொலுபு மதுகராங்க னலகு போலே[43]

பெத்தன 'மனுசரித்ர' என்ற காப்பியத்தில் பிரவரன் என்ற தலைவனைப் பற்றிக் கூறிய பாடல் இது. பிரவரனுடைய அழகை எதிர்பார்த்து வந்த அனைவரும் அவமானப்பட்டனர். ஏன் என்றால் பிரவரன் சம்பங்கிப் பூ போன்றவன் படத்தையர் 'தும்மிகள்' (பூச்சி) போன்றவர்கள். சம்பங்கிப் பூ எவ்வளவு வாசனையாக இருந்தபோதிலும் அதன் அருகில் தும்பிப் பூச்சிகள் சேர முடியாது. இங்கு உவமை அணி பொருத்தமுள்ளதாகவும், பிரவரனுடைய பாத்திரப்படைப்பை விளக்குவதாகவும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**விரோத அணி**

மாறுபட்ட சொல்லாலும் பொருளாலும் கொண்டு மாறுபாட்டுத் தன்மை விளைவு தோன்ற உரைப்பது விரோதமென்னும் அணியாகும். இது குறித்து இலக்கணம் கூறும் போது,

மாறுபடு சொற்பொருண் மாறுபாட்டியற்கை

விளைவுதர வுரைப்பது விரோத மாகும்[44]

என்று சொல்லப்படுகின்றது. வழக்கமாகக் கூறப்படும் உவமைக்கு எதிர் மறுப்பு உவமை கூறுமிடத்து இவ்வகை அணி இலக்கணம் அமைகின்றது.

பாரி பாரி என்று பல ஏத்தி

ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்

பாரி ஒருவனும் அல்லன்

மாரியும் உண்டு ஈங்கு உலகு புரப்பதுவே[45]

என்று வரும் பாடலில் பாரியை உயர்த்தி உலகம் புகழ்கிறது. எனினும் மாரியும் உண்டு இவ்வுலகைப் புரக்க என்னும் கருத்தும் அமைந்து வருகின்றது.

தெலுங்கில் இவ் அணியை விரோதா$^4$ பா$^4$ஸா லங்காரம் என்று அழைக்கின்றனர்.

4 4
த்னரு விரோதா பாஸம்

3 4 4 3
பன க்ருதுல விரோத முனடு நா பாஸலே கி

3
ஸ்கின ஹாரமுலனு பாஸியு

3 3
நன்ரு தோதரி நீகுசமுலு ஹாருலு காவே[46]

விரோதத்திற்கு (பகைமைக்கு) ஆபாசம் இருந்தால் அது விரோதா பாஸாலங்காரம் எனப்படும். விரோதத்திற்கு ஆபாசம் என்றால் பகைமை அது இருப்பது போல தோன்றுமே தவிர உண்மையான பகைமை உணர்வு இருக்காது.

ஓ தஸ்வி! நீ குசமுலு ஹார ரஹிதமு

லய்யு ஹாருலுகா நுன்னவி[47]

(ஓ பெண்ணே! உன் தனங்கள், மார்பகங்கள் மாலையற்றதாக இருப்பினும் மாலை அணிந்தாற் போல் உள்ளன).

இதில் மாலைகள் அணிந்திருந்தால்தான் மாலை அணிந்தவள் என்று சொல்ல முடியும். மாலைகள் இல்லை என்றாலும் மாலைகள் அணிந்திருப்பதாகக் கூறுவது விரோதமாகிறது. ஆக முதலில் கூறப்பட்ட விரோதம் (பகை) இப்பொழுது இல்லை. விரோதம் பகை போல தோற்றமளிக்கிறதே தவிர உண்மையில் விரோதம் இல்லை. இதனைத்தான் விரோத பாஸாலங்காரம் (விரோத அணி) என்பர்.

**உருவகம்**

சங்க இலக்கியங்களில் உருவகம் இடம் பெற்றுள்ளது. தன்னுள்ளத்து எழுந்து எண்ணத்தை விளக்கும் ஒரு கவியாக உருவகத்தைப் பயன்படுத்தியுள்ளார்.

> உவமானம், உவமேயம் இரண்டிற்கும் பேதமின்மை தோன்றச் சொல்லுவது உருவக அணி என்பர்[48]

> உவமை எப்போதும் ஒரு சொற்றொடராகவே அமையும்; உருவகம் வழக்கமாக ஒரு சொல்லாக அமையும். ஆனால் இந்த வடிவ அமைப்புதான் அவற்றினிடையிலான உண்மையான வேறுபாடாகும். 'போர் புரிவதில் அவன் சிங்கம்' என்பதைக் காட்டிலும், 'சிங்கம் போல் அவன் போர் புரிந்தான் என்பது ஆற்றல் குறைந்த கற்பனையாகும்[49]

என்று உருவகத்தின் இயல்பினை அறிஞர் சுட்டியது இங்குக் கருதத்தக்கது. ஆக, ஆகிய, என்னும், எனப்படும் இந்நான்கு உருபுகளே உருவக மரபுகளாக வந்துள்ளன. இவ் உருபுகளே ஒன்று மற்றொன்றாகிறது என்னும் செய்தியைப் புலப்படுத்துகின்றன. எனவே பொருள் உவமையாகவே மாறும் பொழுது அஃது உருவகமாகி விடுகிறது என்று மொழிவர். சங்க இலக்கியப் பாடல் ஒன்றில்,

> ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
> கோடை யவ்வளி குழலிசை யாகப்
> பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
> தோடமை முழவின் துதை குரலாகக்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

கழைவளர் அடுக்கத் தியலி யாடும் மயில்
நவைப்புகு விறலியின் தோன்றும்[50]

என்னும் பாடலில், மூங்கிலில் அமைந்த துளையில் கோடைக் காற்றுப் புகுந்து குழலிசையாகவும் இனிய அருவியிசை முழவின் குரலாகவும், கணக்கலையை அழைக்கும் குரல் தூம்பாகவும், சாரல் வண்டு யாழாகவும், இனிய பல இசையைக் கேட்டு மகிழும் மந்திகள் பார்வையாளராகவும், மேகம் தவழும் மலைப்பகுதிகளில் ஆடும் மயில்கள் விறலியராகவும் காட்சியளித்தன என்று கூறப்படுகின்றன.

மாலை வேளையில் நிழல் நீண்டதாகத் தெரியும். அந்த நிழல் ஏன் அவ்வாறு இருக்கக் காரணம் சொல்லி (ரூபக) உருவக உவமை அணியாக பெததன 'மனுசரித்திர'த்தில் வந்துள்ளது.

3
தரணி யிதெ க்ருங்கு சுன்னா

3 3 3 3 3 3
டரு டெம்மனி சந்த்ரு பில்வ நரிகெடு ரஜனீ

3
தருணி மணி தூதி கலன

3 3 3 3 2
நரிகெ ம் தூர் புனகு நீடலதி தீர் க முலை[51]

இரவு என்கின்ற பெண் தன்னுடைய காதலனான சந்திரனுக்காக நிழல்கள் என்ற தூதுவனை அனுப்பி 'சூரியன் அஸ்தமிக்கிறான்' பயம் இல்லாமல் இனி நீ வெளியில் வரலாம் என்று தூது விடுகிறதாம்.

**மொழிநடை**

வாழ்வுக்கு இன்றியமையாது அமையும் மொழி எல்லா வகைக் கருத்துப் பரிமாற்றத்திற்கும் ஊடுபொருளாகப் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றது. இலக்கிய ஆக்கத்திற்கு மொழி இன்றியமையாதது. மொழி

ஒன்றாக அமையினும் பண்பாட்டு நிலையில் இது பல்வேறு வகையாகி, ஒலிக்கு ஏற்பவும் சொல்லுக்கு ஏற்பவும் பொருட்பயன் கொள்பவனுக்குத் தகவும் நடையால் வேறுபடும்.

காலத்துக்கு ஏற்ப மொழிநடையில் வேறுபாடுகள் தோன்றுவது இயல்பாகும். பொதுவான பேச்சு மொழிநடை ஒன்றாகவும் இலக்கியத்தில் வேறுவிதமாகவும் காணப்படுகின்றது. செய்யுள் இலக்கியத்திலும் உரைநடை இலக்கியத்திலும் அடிப்படையில் மிகுதியாக நடை வேறுபட்டு விளங்குகின்றது. இலக்கியம் எழும் சூழலுக்குத் தக்கவாறு இலக்கிய ஆசிரியனைச் சார்ந்து, பொருள் வெளிப்பாட்டு நிலையில் மொழிநடையும் இதில் பயிலும் உத்திவகை வேறுபாடுகளும் அமைகின்றன.

**மோனையும் எதுகையும்**

மோனையும், எதுகையும் இலக்கியத்திற்கு அழகு சேர்ப்பனவாக அமைகின்றன. சங்க காலந்தொட்டு இன்றளவும் எல்லா வகை இலக்கியங்களிலும் படைப்பாளியினால் எடுத்தாளப்படும் மோனையும் எதுகையும் தெலுங்கு இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

**மோனை**

அடிதொறுந் தலையெழுத்து அல்லது சீர்தொறுந் தலையெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது மோனை எனப்படும். இதற்கு இலக்கணம் சுட்டும் தொல்காப்பியர்,

அடிதொறுந் தலையெழுந் தொப்பது மோனை[52]

என்று சுட்டினார்.

**எதுகை**

அடிகள் தோறும் முதற்சீரின் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது எதுகை என்பர். எதுகை பற்றித் தொல்காப்பியரும்,

அ·.தொழித் தொன்றின் எதுகை ஆகும்[53]

என்று கூறியுள்ளார்.

இதைத் தெலுங்கில் 'ப்ராச' என்பார். பாடல் வரிகளில் இரண்டாம் எழுத்து. இதில் மெய் எழுத்துக்குச் சமமான மெய்எழுத்து இருந்தால் போதும். உயிர் எழுத்து எந்த எழுத்தோடாவது சேர்ந்து இருக்கலாம். அதாவது முதல் பாதத்தில் எதுகை எழுத்து 'கி' என்று இருந்தால் மற்ற வரிகளிலும் 'க'கரத்தோடு சேர்ந்த எந்த எழுத்தாகவும் இருக்கலாம். முதல் வரியில் எதுகைக்கான எழுத்து குருவாக இருப்பின் மற்ற வரிகளிலும் குருவாகவே இருக்க வேண்டும் (குருவு என்பது சீர் பிரித்தலில் இரண்டு மாத்திரை காலம் உச்சரிப்பவை). முதல் வரியில் லகுவாக இருப்பின் மற்ற வரிகளிலும் லகுவாகவே (ஒரு மாத்திரை காலம் உச்சரிக்கும்) எழுத்தாக இருத்தல் வேண்டும். கூட்டெழுத்தாக இருப்பினும், இரட்டை எழுத்தாக இருப்பினும் பிந்துவு (0) முழு வட்டத்துடன் கூடிய எழுத்தாக இருப்பினும் அந்தந்த எழுத்துக்களே வர வேண்டும்.

3

காலமு மஞ்சிதை விழிவிகா தெக பண்டின மைரு பண்டலே

சாலவு பொட்ட கூடிகயிடி ஸ்வர்க மு நன்று வஸிஞ்சு வாரிகின்[54]

காலம் நன்றாக இருந்து நிறைய விளைச்சல் விளைந்தாலும் சுவர்க்கத்தில் வசிப்பவர்கள் வயிற்றுப் பசிக்கு போதாது இவ்வுணவு,

இதில் காலமு

சாலவு என்ற சொற்களில் இரண்டாவதாக வந்த 'ல' கரம் எதுகையும் லகுவும் ஆகிறது.

மற்றொரு பாடலில் எதுகை, மோனை இரண்டையுமே பயன்படுத்தி பாடல் எழுதியுள்ளார்.

எவ்வனிசே ஜனிஞ்சு ஜகமெவ்வனி லோபல நுண்டு லீனமை

3 3 3 3 3 3
யெவ்வனி யந்து டிந்து பரமேஸ் வருடெவ்வடு மூல காரணம்

3 3 3 4 3 3
பெவ்வட நாதி மத் யலயு டெ வ்வடு ஸர்வமு தானயைனவா

3 4 3 3 3
டெவ்வடு வானி நாத்மபவு நீச்வருநே சரணம்பு மேடை தன்[55]

*கஜேந்திர மோக்ஷத்தில் - முதலை யானைக்காலைப் பிடித்துக் கொண்டது. யானையால் அசைய முடியவில்லை. இறைவனை வேண்டியது. 'யாரால் இவ்வுடலகம் பிறந்ததோ, யாருக்குள்ளே இந்த உலகம் ஒடுங்கி இருக்கின்றதோ, யார்அனைத்துக்கும் முதன்மையானவன், யாரு ஆதியும், நடும், இறுதியும் ஆக இருக்கின்றானோ, யாரு அனைத்தும் தானாக உள்ளானோ அப்படிப்பட்ட இறைவனை நான் எண்ணி ஆதரவு கேட்கிறேன் என்பது பொருள்.*

*இப்பாடலில் எதுகை சொற்கள் எவ்வனிசே*

*யெவ்வன்*

*பெவ்வட நாதி*

*டெவ்வடு*

*போன்ற சொற்களில் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்துள்ளது.*

*இப்பாடலில் ஒவ்வொரு வரியிலும்,*

*எவ்வனி ஜகமெவ்வனி*

*யெவ்வனி டெவ்வடு*

*பெவ்வட டெவ்வடு*

*போன்ற வாக்கியங்களில் இரண்டாம் சொற்கள் ஒன்றி வந்துள்ளன.*

**வருணனை**

*சங்க இலக்கியத்தில் குறுந்தொகைப் பாடல் ஒன்றில் இந்த வருணனை பயன்படுத்தப்பட்டுள்ளது.*

ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்

கையில் ஊமன் கண்ணிற் காக்கும்

வெண்ணெய் உணங்கல் போல[56]

தலைவியைக் காணப் பெறாமையாற் பெரிதும் நலிந்த தலைவன் அத்துன்பம் போக்கும் வழியறியாது கலங்கும் நிலையில் இவ்வுவமை வெளிப்படுகின்றது. கையில்லா ஊமை கண்களால் மட்டும் பாதுகாக்கும் வெண்ணெய் உணங்கல் போன்று யானும் இவ்வுடல் உருகாமல் பொருத்தல் அரிதாகும் என்று கூறுமிடத்து அவலநிலை வெளிப்படுகிறது.

சங்க இலக்கியங்களைப் போன்றே தெலுங்கு மொழி இலக்கியத்திலும் இப்பழமொழி பயன்படுத்தப்பட்டுள்ளது. பாஸ்கர ராமாயணத்தில்,

3 3
வாகுலஜீடைன ராமுடு

2 3
ஶ்ரீகண்டு னி வில்லு விறிசி ஸீதம்ப் ரீதிம்

3
கை கொனு பேரபனி செப்பக

3 4 3
நகய ஸமுனகு நருகு வித முனன் ரவி க்ருங்கென்[57]

என அமைந்துள்ளது.

ராமன் வில்லை உடைத்து சீதையை அன்போடு கைப்பற்றும் போது நாளை என்று கூறும் பொழுது ஆகாயத்துக்கும் பூமிக்குமாக குதித்தான் என்று சூரியன் மறைவதைப் பற்றி கூறியுள்ளது. இங்கு வருணனை என்பது இயற்கையோடு ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளது.

**சிலேடை**

ஒரு சொல்லை இருபொருள்பட அமைப்பது சிலேடை என்பர். சிலேடைப் பொருள் சொல்வழக்கில் நயம் விளைவிப்பதாக அமைகின்றது. சங்க காலந்தொட்டு இன்றளவும் இம்மொழிநடை ஆளப்பட்டு வருகின்றது.

வேங்கையும் புலி ஈன்றன[58]

என்னும் நற்றிணைப் பாடலில் வேங்கை மரமும் பூக்களை ஈன்றது என்ற ஒரு பொருளையும் வேங்கை மரமும் புலிக்குட்டியை ஈன்றது என நுட்பப் பொருளும் இதில் அமைந்துள்ளன. இத்தகைய சொல் வழக்கிலும் பொருட்சுவை நல்கி உவமச் செய்தியில் அமைந்திருப்பதைச் காண முடிகின்றது.

இதன் அடிப்படையில் தெலுங்கு இலக்கியத்தில் ஸ்ரீ கிருஷ்ணதேவராயரின் அவைப்புலவராக உள்ள பிங்களிமாரன என்பவர் 'ப்ரபாவதி', 'ப்ரத்யும்னமு' போன்ற காப்பியங்களை இயற்றியுள்ளார். இவற்றில் 'ராகவ பாண்டவீயமு' என்ற காப்பியத்தில் ஆறுவகையான சிலேடைகளைக் கையாண்டுள்ளார் அவை,

1. ஆந்த்ர பாஷா சமஸ்கிருத பாஷா சிலேடை
2. உசித சப்த சிலேடை
3. அர்த சிலேடை
4. முக்ய கௌண விருத்தி சிலேடை
5. அர்தான்வய சிலேடை
6. சப்தான்வய சிலேடை

சான்றுக்கு ஆந்த்ர பாஷா சமஸ்கிருத பாஷா சிலேடை, பாடலில் அமைக்கப்பட்டச் சொற்களைச் சேர்த்துப் படிக்கும் போது சமஸ்கிருத மொழிப் பொருளிலும், தனியே பிரித்து படிக்கும் போது தெலுங்கு மொழிப் பொருளிலும் அமைந்துள்ளது.

3 3
வினியத நிந்த னபை நிடு கொனியே

2
கி நியமிகி தகனி கோ ரார்தி யொன

3 3 3
ர்சின வாட மீகு தண்ட் யுட னனி

தன தெலுபுசுனு வாரி கப்பன யேயென்[59]

சிந்தமுடு[3] என்ற முனியைக் கொன்று, அதன் பிறகு பச்சாதாபம் அடைந்த பாண்டு மன்னனைப் பற்றிக் கூறும் பொழுது பாரதப் பொருளில் சமஸ்கிருதச் சொல்லாக எடுத்துக் கொண்டால் 'வினியத நிந்தனகி' மிகவும் நேர்மையாக இகழை (புகழற்ற நிலை) 'தலையில் போட்டுக் கொண்' என்ற பொருள் கொள்ள வேண்டும். ராமாயணப் பொருளில் வினி, யதநிந்தனமை, நிடு[3] கொனி என்று தெலுங்கு சொற்களாகப் பிரித்துப் பார்த்தால் தசரதன் ஒரு முனி பாலகனைக் கொன்று அவனைக் கொண்டு செல்கின்ற காட்சியாக மாறுகிறது.

மூலத்திராவிட மொழியிலிருந்து தெலுங்கு எப்போது பிரிந்து அது தனக்கென்று இலக்கியத்தை உருவாக்கிக் கொண்ட நிலை, தெலுங்கு மொழி ஆறாம் நூற்றாண்டிற்குப் பிறகு தோற்றம் பெற்றாலும் தெலுங்கு, வடுகு, தெலுங்கர் நாடு போன்ற சொற்கள் சங்க இலக்கியப் பாடல்களில் இடம் பெற்றுள்ள முறை போன்றவற்றை அறிய முடிகின்றது.

சங்க இலக்கியங்களுக்கும், பழைய தெலுங்கு இலக்கியங்களுக்கும் பல்வேறு உறவுகளும், தொடர்புகளும் ஏற்பட்டுள்ளது என்பதையும், தமிழ் இலக்கணத்திற்கும் தெலுங்கு மொழி இலக்கணத்திற்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன என்பதையும் அறிய முடிகின்றது.

சங்க இலக்கியங்களை அகம், புறம் எனப் பாகுபாடு செய்துள்ளனர். மக்களின் அக, புற வாழ்க்கை நிலையினை இவை விளக்கி நிற்பதால் திணை இலக்கியங்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. காதல் தழுவிய பாடல்கள் அகமாகவும், காதல் அல்லா மற்ற பாடல்கள் புறமாகவும் கருதப்படுகின்றன.

தெலுங்கு இலக்கியங்களில் அகம், புறம் என்ற பாகுபாடு இல்லை. அதனை அவ்வாறு பாகுபாடு செய்வதும் கடினம். சங்க இலக்கியத்தை நெறிப்படுத்த தொல்காப்பியம் என்ற இலக்கணம் இருப்பதைப் போல

அங்குள்ள இலக்கியங்களை நெறிபடுத்த ஒரு முறையான இலக்கண நூல் இல்லை எனலாம். ஒரு சில இலக்கண நூல்கள் இருக்கின்றன. அதில் இலக்கியங்கள் இவ்வாறுதான் எழுதப்பட வேண்டும் என்று விளக்கப்படவில்லை.

தெலுங்கு கி.பி.ஆறாம் நூற்றாண்டுக்குப் பிறகு தோற்றம் பெற்ற இலக்கியமாக இருந்தாலும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள இலக்கிய உத்திகள், உணர்ச்சிகள், கற்பனை, வடிவம், மொழிநடை போன்ற சங்க இலக்கியக்கூறுகள் பல தெலுங்கு மொழி இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றன.

## குறிப்புகள்

1. குறுந்., பா.11.
2. அகம்., பா.2:11.
3. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 10, ப.311.
4. டி.எஸ்.கிரிபிரகாஷ், பா.ஆனந்தகுமார், தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.5.
5. மேலது., ப.6.
6. மேலது., ப.7.
7. ஞா.தேவநேயப்பாவாணர், திரவிடத் தாய், ப.83.
8. புறம்., பா.378. (1-2)
9. ச.வே.சுப்பிரமணியன், திராவிட மொழி இலக்கியங்கள் அறிமுகம், ப.16.
10. ஞா.தேவநேயப் பாவாணர், திரவிடத் தாய், ப.83.
11. புறம்., பா.385.
12. நற்., பா.212.
13. குறுந்., பா.11.
14. ஞா.தேவநேயப்பாவாணர், திரவிடத் தாய், ப.86.
15. அகம்., பா.213.
16. மேலது., பா.295.
17. தா.சா.மாணிக்கம், தமிழும் தெலுங்கும் (கட்டுரை), ப.19.
18. மேலது., ப.22.
19. காண்க, பின்னிணைப்பு, 4.அ.
20. மேலது., 4.ஆ.
21. மேலது., 4.இ.
22. நா.கதிரைவேற்பிள்ளை (தொ.ஆ), தமிழ் மொழி அகராதி பகுதி ஒன்று, ப.271.
23. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள்., நூ.656.
24. Lexpreminger, Princaton Encyclopaedia of Poetry and Poeties, pp.V-Vi.
25. மு.வரதராசன், இலக்கியத்திறன், ப.50.

26. பெரியசாமித்தூரன், குங்குமம், கிழமை இதழ், நாள் 29.10.1979, ப.107. "Emotion is not poetry; but the cause of Poetry and emotional expression is only poetry. When it takes a beautiful form", E.A.G.Lamborn, **Rudiments of Criticism**, p.14.

27. "At the level of the emotions and the appetites we are all very much alike. comtemporary human beings when hating and loving differ very little among themselves. Moreover, they differ very little form human beings hating and loving in the intellect that difference emerge", C.E.M.Joad, **Guide to morden thought**, p.256.

28. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள், நூ.247.

29. புறம்., பா.113.

30. ஆசார்ய கொர்லபாடி ஸ்ரீராமமூர்த்தி, தெலுகு சாஹித்ய சரித்ர, ச்ருங்கார நைஷதம் 4 ஆவது ஆஸ்வாசம், ப.90.

31. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, முதல் தொகுதி, ப.78.

32. மேலது., ப.273.

33. மேலது., ப.71.

34. மேலது, பக்.302-303.

35. புறம்., பா.245.

36. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.73.

37. புறம், பா.186.

38. மேலது., பா.45.

39. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, மூன்றாம் தொகுதி, ப.105.

40. மேலது., ப.84.

41. A.C. Bradly, **Oxford Lectures on Poetry**, p.100.

42. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள், நூ.274.

43. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.108.

44. கு.சுந்தரமூர்த்தி, தண்டியலங்காரம் மூலமும் பழையவுரையும், நூ.82.

45. புறம்., பா.107.

46. சத்தியநாராயணசர்மா, தெலுகு வ்யாகரணம், ப.85.

47. மேலது., ப.85.

48. கு.சுந்தரமூர்த்தி, தண்டியலங்காரம் மூலமும் பழையவுரையும், நூ.36.

49. E.A.G.Lamborn, **The Rudiments of Criticism,** pp.91-92.

50. அகம்., பா.82.

51. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.108.

52. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள், நூ.397.

53. மேலது., நூ.398.

54. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.180.

55. வெலகா வெங்கடப்பய்ய.மனவாரசத்வமு, ப.169.

56. குறுந்., பா.58.

57. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, பக்.50-51.

58. நற்., பா.399.

59. த்வாரா.நா.சாஸ்த்திரி, தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.141.

## இயல் 3
# தமிழ் – மலையாள மொழி இலக்கியங்கள்

### மலையாள இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

எத்தனையோ நூற்றாண்டுகளின் வரலாற்றுத் தொன்மை உடைய நாடு கேரளம். இராமாயணத்திலும், மகாபாரதத்திலும் கேரளத்தைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன. கி.மு. நான்காம் நூற்றாண்டில் அலெக்ஸாந்தரின் சேனைத் தலைவனாயிருந்த செல்யூக்கஸின் பிரதிநிதியாக இந்தியாவுக்கு வந்த மெகஸ்தனீஸ் கேரளத்தைப் பற்றியும், கேரளத்தை ஆண்டுவந்த அரசனைப் பற்றியும் எழுதி வைத்திருக்கிறார். அசோகருடைய கல்வெட்டுக்களில் குறிப்பிட்டிருக்கும் தென்னிந்திய நாடுகளின் வரிசையில் கேரளம் சிறப்பிடம் பெறுகிறது. திருவஞ்சிக்குளத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட சேர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் சிறப்பெய்தியிருந்த தென்னிந்திய நாடுகளில் கேரளமும் ஒன்றென்பதற்குக் கிடைக்கும் சான்றுகள் மிகப் பல. பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய தமிழ் நூல்களே சேர அரசர்களின் ஆட்சிக்காலச் சிறப்பை மெய்ப்பிக்கப் போதுமானவையாக உள்ளன.

கேரளம், மலையாளம் என்பன தற்போது மலையாள நாட்டையும், அங்கு வழங்கும் மொழியையும் குறிக்கும் பெயர்களாம்.

> சங்க காலத்தில் முத்தமிழ் நாடுகளில் ஒன்றாக இருந்த சேர நாட்டின் மேல்பாகமே இப்போது மலையாள நாடாயிருக்கின்றது. கீழ்பாகம் கொங்கு நாடும் (கோயம்புத்தூர் சேலம் கோட்டகப் பகுதிகள்) கங்க நாடும் (சேலம் மைசூர்ச் சீமைப்பகுதிகள்) ஆகும். மறன், திறன் முதலிய பெயர்கள் முறையே மறல், திறல், திரிந்தாற்போல், சேரன் என்ற பெயரும் சேரல் எனப் போலியாகிப் பின்பு 'அன்' ஈறு பெற்று சேரலன் என வழங்கிற்று.[1]

(எ.டு)

சேரன் செங்குட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், தகடூர் எறிந்த பெருஞ்சேரல், குடக்கோ இளஞ்சேரல் போன்றோர்கள் சேரலன் என்னும் பெயர் முறையே கேரலன், கேரளன் என மருவிற்று. இம்மரூஉ வடிவங்கள் பழந்தமிழ் நூல்களில் ஓரிடத்தும் காணப்படவில்லை. பிந்திய நூல்களில்தான் காணப்படுகின்றன. இதனால் இவை பிற்காலத்தன என்பது தெளிவு.

**மலையாள இலக்கியத்தின் தோற்றுவாய்**

கேரள நாட்டின் மொழிக்கு மலையாளம் என்ற பெயர் உண்டானதே சமீப காலத்தில்தான் 'மலையாளம்' என்பது முதலில் நாட்டின் பெயராக மட்டும் வழங்கிற்று. மலையைச் சார்ந்த 'அளம்' அதாவது நாடு என்ற பொருள் தோன்ற அமைந்த 'மலையாளம்' என்ற சொல் சற்றே மருவி 'மலையாளம்' என்றாகியிருத்தல் கூடும். பிறகு 'மலயாண்ம', 'மலயாய்ம்' என்ற பெயர்கள் பேச்சு வழக்கில் பயின்று வந்திருக்கின்றன. இப்பால் நாட்டின் பெயரான மலையாளம் என்ற சொல்லே மொழியின் பெயராகவும் வழங்கி வருகிறது.

மலையாள மொழியின் தோற்றம் குறித்து அறிஞர்களிடையே பல்வேறு வகையான கருத்துக்கள் நிலவுகின்றன. எல்லிசு, மலையாள மொழியின் தோற்றம் குறித்து முதன் முதலில் ஒரு கட்டுரை வரைந்தார். செந்தமிழின் ஒரு பிரிவாகக் கொடுந்தமிழ் இருப்பதைப் போல, மலையாளமும் செந்தமிழின் ஒரு பிரிவு என்று அவர் அக்கட்டுரையில் தெரிவித்தார். மலையாள மொழியின் தோற்றம் பற்றி ஆராய்ச்சி அடிப்படையில் முதன்முதலில் கருத்துக்களை வெளிப்படுத்தியவர் கால்டுவெல் ஆவார். அவருக்குப் பின் வந்த அறிஞர்கள் பலர் அவரது கருத்துக்களைப் பின்பற்றியும் மறுத்தும் ஆராய்ந்திருக்கின்றனர். இவ்வாய்வுகளின் அடிப்படையில்,

1. சமஸ்கிருதத்திலிருந்து மலையாளம் தனிமொழியாக வளர்ச்சியடைந்தது.

2. மூல திராவிட மொழியிலிருந்து ஏனைய தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகியவை தோன்றியதைப் போல மலையாளமும் தனித்துத் தோன்றியது.

3. மலையாளம் தமிழின் கிளைமொழிகளுள் ஒன்றாக இருந்து அரசியல், பண்பாடு, புவியியல் காரணங்களினால் பிரிவுற்று, பின்னர்த் தனிமொழியாக உருவானது.

4. செந்தமிழின் வட்டார வழக்குகளில் ஒன்றான மலைநாட்டுத் தமிழும் சமஸ்கிருதமும் கலந்து மலையாளம் தனி மொழியாக உருவானது.

5. தென் திராவிட மொழியிலிருந்து கன்னடம், துளு, குடகு போன்ற மொழிகள் பிரிந்த பின்னர், சேர நாட்டை உள்ளிட்ட பண்டைத் தமிழகத்தில் வழங்கிய தமிழ் மொழியிலிருந்துதான் தற்பொழுதிருக்கும் தமிழும் மலையாளமும் பிரிந்து தனித்தனி மொழிகளாக உருவாயின.

மலையாளத்தின் இயல்புகளைப் பார்க்குமிடத்து, அது திராவிட மொழியினத்தைச் சேர்ந்தது என்பது புலனாகிறது. மலையாளத்துக்கும் ஏனைய திராவிட மொழிகளுக்கும், சிறப்பாக அதற்கு மிகவும் நெருங்கி நிற்கிற தமிழுக்கும், இடையிலுள்ள உறவு எத்தகையது என்பது பற்றி நிறையக் கருத்து வேற்றுமை உண்டு. பண்டிதர்கள் பலர் மலையாளம் தமிழின் கிளைமொழிதான் என்று கருதுகிறார்கள். கால்டுவெல், பாதிரியார் தோற்றுவித்த இக்கருத்தைத்தான் பிற்காலத்தில் ஏ.ஆர்.ராஜராஜவர்மா தம் கேரள பாணினீயத்தில் விரித்துரைத்து வலியுறுத்தியிருக்கிறார். மூன்று வகையில் இக்கருத்துக்குப் பெருவாரியான ஆதரவு கிடைக்கிறது.[2]

1. தமிழும் மலையாளமும் கொண்டுள்ள நீண்ட நாளையத் தொடர்பு.
2. இவ்விரு மொழிகளின் இலக்கண விதிகளும் சொற்களும் புலப்படுத்தும் ஒற்றுமை.
3. மலையாளத்தையே தமிழ் என்ற பெயரிட்டு அழைத்து வந்தமை.

*ஆயினும் மொழிகளின் தொடர்பை அறுதியிடும் அறிவியல் ஆராய்ச்சிகளும், வரலாற்றுக்கண் கொண்டு ஒப்புமை பார்க்கும் முறையும் பெருக பெருக மேற்குறிப்பிட்ட கருத்து வலுக்குறைந்து வருகிறது.*

**மலையாள எழுத்தின் வரிவடிவம்**

*மலையாளத்துக்கே உரிய வரிவடிவம் ஒன்று வழக்கிலிருந்து வருகிறது. முற்காலத்தில் வட்டெழுத்து வழக்கிலிருந்தது. சேர பாண்டிய நாடுகளில் தொன்றுதொட்டு வட்டெழுத்தே கையாளப்பட்டு வந்தது. 15 ஆம் நூற்றாண்டோடு அந்நாடுகளில் வட்டெழுத்து வழக்கொழிந்து போயிற்றாயினும் கேரள நாட்டில் மட்டும் ஏறக்குறைய 18 ஆம் நூற்றாண்டு வரை அது வழக்கிலிருந்து வந்திருக்கிறது. அரசரின் ஆணைகள், கடிதங்கள், நூல்கள், கல்வெட்டுக்கள் ஆகியவற்றில் வட்டெழுத்தையே கையாண்டிருக்கின்றனர். முற்காலத்தில் சிறுவர் சிறுமியர்க்கு நெடுங்கணக்கு பயிற்றுவிக்கும்போது மலையாள-தமிழ் எழுத்துகளேயின்றி வட்டெழுத்தும் கற்பித்து வந்துள்ளனர்.*

> வட்டெழுத்திலிருந்து படிப்படியாக கோலெழுத்து தோன்றிற்று. கோலினால் எழுதப் பெற்றதால் இப்பெயர் வழங்கிற்று என்பர். இவ்வடிவத்தில் இது வட்டெழுத்தினின்றும் மிகுந்த வேறுபாடுடையதன்று. குற்றியலுகரம் எனத்தகும். 'ஸம்வ்ருத' உகாரம், 'ஐ'காரம், 'ஓ'காரம் என்பனவற்றிற்குத் தனித்தனியான குறியீடுகள் கோலெழுத்தில் இருந்தன என்பது அதன் பெருமை. இவ்வெழுத்து கொச்சியிலும், மலபாரிலும் பெருவழக்கிலிருந்து வந்தது. வட்டெழுத்திலிருந்து தோன்றியதும் அதனின்றும் சிறிதளவே வேறுபட்டதுமான 'மலையாண்ம' என்ற லிபி திருவனந்தபுரத்துக்குத் தெற்கிலுள்ள பகுதிகளில் மட்டும் வழக்கிலிருந்து வந்திருக்கிறது[3]

*இம்மூன்று வரி வடிவங்களும் வழக்கிலிருந்தபோதே அவற்றைப் படிப்பது அவ்வளவு எளிதாய் இருந்ததாகத் தெரியவில்லை. இம்மூன்றினுள் சிறந்ததும், கேரளம் நெடுக வழக்கிலிருந்ததும் வட்டெழுத்தேயாகும். இதில்*

பிரதேச வேறுபாடு இல்லை. ஆனால், கூட்டெழுத்துக்களுக்கும், 'ஏ, ஓ' என்ற நெடில்களுக்குத் தனி வடிவமும், குறியீடுகளுக்கு தனிப்பெயர்களும் இல்லை என்பது போன்ற சிற்சில குறைகள் இருந்தன. கோலெழுத்திலோவென்றால் பிரதேச வேறுபாடுகளால் விளைந்த இடர்ப்பாடு மிக அதிகம். 'மலயாண்ம' எழுத்தில் ராயச வடிவங்கள், சொற்களின் குறுகிய வடிவங்கள் என்பன போன்ற தொல்லைகள் உண்டு. இம்மூன்று எழுத்து முறைகள் படிப்படியாக மறைந்து இப்போது வழக்கிலிருக்கும் எழுத்துக்களின் முன்னோடியாக கிரந்த எழுத்துக்கள் வந்திருக்கின்றன. மேற்குறிப்பிட்ட மூன்று எழுத்துமுறைகளிலிருந்த தொல்லைகளைத் தவிர்க்க இப்புது எழுத்துமுறை வரவேற்கப்பட்டிருக்கவும் கூடும்.

> **கிரந்த எழுத்துக்கள் கி.பி.ஏழாம் நூற்றாண்டிலிருந்தே தென்னிந்தியாவில் வழக்கிலிருந்ததாகக் கருதப்படுகிறது. மலையாளத்தில் மணிப்பிரவாள இலக்கியம் தோன்றியதை ஒட்டி கிரந்த எழுத்துக்கள் இங்கு வழக்கில் வந்திருக்கலாம். படிப்படியாக அவை மலையாள எழுத்தை உருமாற்றியிருக்கின்றன. இவ்விதமாக கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டோடு மலையாள நெடுங்கணக்கின் வடிவடிவம் உருவாகி ஒருவாறு நிலைபெற்றது[4]**

அதற்கு 'ஆரிய' எழுத்து எனப் பெயர் வழங்குவதுமாயிற்று. அதுதான் இப்போதைய மலையாள வரிவடிவமாகும்.

**இலக்கிய வரலாற்றுக் கட்டங்கள்**

மலையாள இலக்கிய வரலாற்றின் காலகட்டங்களைப் பலர் பல விதமாக வகுத்து வருகிறார்கள் பண்டிதர்கள் பலர். இலக்கியவரலாற்றை, மொழியின் இயல்பைக் கொண்டு தொன்மைக் காலம், இடைக்காலம், நவீன காலம் என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்க முயன்றிருக்கின்றனர். ஆனால் அவ்விதம் அமைத்துக்கொண்ட காலகட்டம் ஒவ்வொன்றிலும் அதற்குரிய மொழியியல்புக்கு ஒவ்வாத நூல்களுமே ஏராளமாக அவ்வப்போது எழுந்துள்ளதால் இப்பாகுபாட்டை ஏற்றுக் கொள்வதற்கில்லை. அதனால்,

கருத்தில் கொள்ள வேண்டியது மொழியின் இயல்பன்று, இலக்கியத்தின் இயல்பாகும் என்ற அடிப்படையில் மலையாள இலக்கிய வரலாற்றைத் தொன்மைக்காலம், நவீன காலம், மிக நெருங்கிய காலம் என்ற மூன்று காலகட்டங்களாகப் பிரிக்கலாம்.

> மலையாளம் மூலத்திராவிட மொழியினின்று பிரிந்து, தனக்கே உரித்தான உருவம் பெற்றுவிட்ட பிறகு சமஸ்கிருதத்தின் ஆதிக்கத்துக்கும் உட்பட்டு வளர்ந்திருக்கிறது. இவ்வாறு உருவான இலக்கிய நடையில் பாட்டாகவும், மணிப்பிரவாளமாகவும் நூல்கள் ஏராளமாக இயற்றப்பட்ட காலத்தை முதல் தசை எனக் கொள்ளலாம் கிருஸ்துவாண்டு பத்தாம் நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டு வரை உள்ள காலம்தான் இம்முதல் கட்டம்[5]

பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த செறுசேரின் நடையில் நவீன இயல்புகள் தெளிவாகப் புலப்படுகின்றன. எனினும் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்தச்சனின் நூல்களில்தான் பிற்காலக் கவிதையின் பிறப்பு துல்லியமாய்த் தெரிகிறது. கவிதையின் பொருள், கவிதையைச் சொல்லும் முறை ஆகியவற்றில் எழுத்தச்சன் கவிதையிலுமே, 'முற்காலம்' 'பிற்காலம்' எனும் இரு பிரிவுகளுக்கும் இடைப்பட்டதான ஒரு 'மத்திய கால' முத்திரை இருப்பதாகக் கூடத் தோன்றலாம். ஆனாலும் மொழி இயல்பிலும் நடையிலும் நவீன காலத்தின் லட்சணங்கள் மிகத் தெளிவாகப் புலப்படுவது அவர் கவிதையில் தான் தற்காலத்திலுமே கவிஞர்கள் பலர் எழுத்தச்சனுடைய நடையைத்தான் பின்பற்றி எழுதுகின்றார்கள் என்பது உண்மை.

ஆங்கில இலக்கியத்தின் செல்வாக்கு தெளிவாகப் புலப்படத் தொடங்குகிற கட்டம்தான் தற்காலத்தின் தொடக்கம். அச்செல்வாக்கின் அறிகுறிகள் தெரிய ஆரம்பித்து இன்றைக்கு ஒரு நூற்றாண்டு ஆயினும் நிறைவு பெறவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கில ஆட்சி தொடங்கியதை ஒட்டி மேனாட்டு இலக்கியம், பண்பாடு ஆகியவற்றோடு மலையாளிகளுக்குத் தொடர்பு உண்டாயிற்று. அதன் விளைவாகத் தோன்றியிருக்கும் புது

முனைப்புக்களே இக்காலகட்டத்தின் முக்கியமான விசயங்கள். கவிதையிலும் உரைநடையிலும் மேனாட்டுக்குரிய புதுப்பாணிகள் பல மலையாளத்தில் பின்பற்றப் பெற்றிருக்கின்றன. சிறு காப்பியங்கள், பாவ கீதங்கள் (உணர்ச்சிப் பாடல்கள் எனும் Lyrics) முதலிய நூதன கவிதைப் பாணிகள், நாடகங்கள், இலக்கியத் திறனுரை முதலிய உரைநடை இலக்கியம், அச்சடித்தல், வெளியிடுதல், செய்தித்தாள் நடத்தல் முதலிய புதுப் பிரச்சாரக் கருவிகளின் தோற்றுவாய் என்பனவும் இன்னும் பிறவும் இலக்கிய வரலாற்றின் தற்கால காலக்கட்டத்தின் நோக்கங்களாகும்.

**மலையாளம் தமிழிலிருந்து பிரிந்த நிலை**

மலையாளம் பேச்சு மொழியாக மட்டுமே இருந்த காலத்திலேயே தமிழும் சமஸ்கிருதமும் வளம்பெற்ற இலக்கிய மொழிகளாக வளர்ந்துவிட்டன. எனவே தொடக்கக் காலத்தில் மலையாள இலக்கியம் எழுதியவர்கள் இவ்விரு மொழி இலக்கிய மரபுகளைச் சார்ந்தே எழுதினார்கள். கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட 'ராமசரிதம்' என்ற நூலே மலையாளத்தில் கிடைத்திருக்கும் மிகப் பழைய செய்யுள் நூலாகும்.

> திருவிதாங்கூரின் அப்போதைய தலைநகரமான (இப்போது கன்னியாகுமரி மாவட்டத்தில்) உள்ள பத்மநாபபுரத்தில் வைத்து இந்நூல் எழுதப்பட்டது. இதை எழுதிய சீராமன் என்பவர் திருவிதாங்கூர் மன்னராக இருந்திருக்கலாம். தமிழும் மலையாளமும் கலந்த 'பாட்டு' என்ற நடையில் இது அமைந்துள்ளது. திராவிட மொழிக் குடும்பத்தின் எழுத்துக்களை மட்டுமே கொண்டு சமஸ்கிருத மொழியின் எழுத்துக்களை விலக்கி, எதுகை மோனை அமைதியுடன் மொழியின் சொந்தமான யாப்பு முறையில் அமைந்தது. இந்நடை 'ராமசரிதத்'தில் தமிழ் மலையாளம் இரு மொழிகளின் இலக்கண இலக்கிய அமைதிகளும் கலந்து காணப்படுகின்றன. மற்றொரு மொழிக் கலவை மணிப்பிரவாளம் எனப்படும். இதில் மலையாளத்துடன் சமஸ்கிருதச் சொற்கள் மட்டுமன்றி அம்மொழியின் இலக்கண அமைப்பும் கலந்து வழங்கும்[6]

ராமகிருஷ்ணய்யா என்பவரால் தொகுக்கப்பெற்று சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டிருக்கும் திராவிட மொழிக் குடும்பச் சொல் திரட்டில் (Dravidian Cognates) தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் ஆகிய மொழிகளுக்குப் பொதுவானவையும் வழக்கிலுள்ளவையுமான சொற்கள் ஏறக்குறைய 5000 உண்டென்று சொல்லப்படுகிறது.[7]

தொன்மையான மூலமொழி ஒன்றிலிருந்து அம்மொழிகளுள் ஒவ்வொன்றும் தோன்றியிருக்கிறது என்று காட்டுவதன்றி, இவற்றில் ஏதாவது ஒன்றிலிருந்து ஏனையவை தோன்றியிருக்கின்றன என்பதை இவ்வொப்புமைகள் மெய்ப்பிக்கவில்லை. இவ்வொப்புமை மலையாளத்தையும் தமிழையும் பொறுத்த வரையில் மேலும் நெருக்கமாக இருப்பதோடு, தெளிவாகவும் தெரிகிறது. இதற்குக் காரணம் இவ்விரு மொழிகளும் வழங்கி வந்த நாட்டுப் பகுதிகளின் நெருக்கமும் வரலாற்றுத் தொடர்புமேயன்றி இம்மொழிகளின் தாய் சேய் உறவு அன்று.

பண்டைக் காலத்தில் தென் இந்தியா நெடுகிலும் நிலவி வந்த மூலத்திராவிட மொழி பல்வேறிடங்களில் பலவாறாகப் பேசப்பட்டு வந்திருக்கின்றது. அம்மொழியைப் பேசிய மக்களின் வாழ்க்கையில் ஏற்றத்தாழ்வுகள் பல நிகழ்ந்திருக்கின்றன. இக்காரணங்களால் விளைந்த பரிணாமத்தால்தான் இன்று முக்கியமானவை எனக் கருதும் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகியவையும், அந்த அளவு முக்கியத்துவமில்லாத துளுவமும் குடகு மொழியும் தோன்றியிருக்கின்றன என்பதில் மொழியியல் வல்லுநர்களிடையே கருத்து வேற்றுமைக்கு இடமில்லை. மேற்குத் தொடர்ச்சி மலையால் வெவ்வேறாகப் பிரிக்கப்பட்டு, தமிழும் மலையாளமும் சுயேச்சையாக வளர்ந்தனவாயினும், பிற்காலத்தில் சோழ நாடும், பாண்டிய நாடும், கேரள நாட்டுடன் அரசியல் தொடர்புகள் கொண்டிருந்ததால் தமிழுக்கு அசாதாரணமான செல்வாக்கு உண்டாகி, அதன் கை ஓங்கி நிற்பதாயிற்று.

பல நூற்றாண்டுகளாக கேரள நாட்டின் அறிவியல் விவகாரங்கள் யாவும் செந்தமிழிலேயே நடந்து வந்தன. இவ்வாறு செந்தமிழின் ஆதிக்கம் கேரள நாட்டை வெகு ஆழமாகப் பாதித்த போதிலும் பேச்சு வழக்கிலிருந்த மொழி, தொன்மையான காலத்திலிருந்தே உருவாகி, தமிழைச் சாராது வளர்ந்த மலைநாட்டு மொழியாகும். மூலத்திராவிட மொழியினின்றும் தோன்றிய காரணத்தால் கேரள மொழிக்கு சில தனித்த இயல்புகள் உண்டு. மிகுந்த ஆக்கமும் செல்வாக்கும் பெற்றிருந்த செந்தமிழால்கூட இவ்வியல்புகளை அடியோடு மாற்ற முடியவில்லை என்றால் மலையாளத்தின் தனித்துவம் ஒருவாறு புலனாகின்றது. இதற்கு நேர்மாறாக மேற்குறிப்பிட்டச் செந்தமிழாக்கம் பாண்டிய நாட்டுத்தமிழை ஓரளவு உருமாற்றியிருக்கிறது. இதனால் மூலத் திராவிட மொழியின் அடிப்படை இயல்புகளைப் பாண்டிய நாட்டுத் தமிழில் காண்பது அரிது. நுணுகிப் பார்க்கும்போது பலவற்றால் மலையாளமே மூலத்திராவிட மொழிக்கு மிகவும் நெருங்கிய மொழியாகக் காணப்படுகின்றது என்பது ஆராய்ச்சியாளர்களின் துணிபு.

**மலையாளத்தின் தனித்தன்மைகள்**

மேலே குறிப்பிட்டிருக்கும் தனி இயல்புகளினால் மலையாளம் பழங்காலத்திலிருந்தே வேறுபட்டு நின்றிருக்கின்றது என்பது மறுக்க முடியாதபடி மெய்ப்பிக்கப்படுகிறது. மலையாளமும் தமிழும் சுதந்திரமாக வளர்ந்து வருகின்றன.

> பிற்காலத்தில் தமிழ் செம்மைப்பட்டு செந்தமிழாக மாறியபோது, மலையாளம் அடிப்படையில் அந்த அளவு மாறவில்லை. ஆயினும் வரலாற்றுத் தொடர்பாலும் இரு நாடுகளின் நெருக்கத்தாலும் பாண்டிய நாட்டுத் தமிழிலிருந்து பல சொற்களையும் சொல்லாட்சிகளையும் பிற்காலத்தில் மலையாளம் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆதனால் மேலெழுத்தவாறாகப் பார்க்குங்கால் மலையாளத்துக்கும் தமிழுக்கும் மிக நெருங்கிய உறவு இருப்பதாகத் தோன்றுகிறதேயின்றி, அவ்விரண்டில் ஒன்று மற்றொன்றிலிருந்து பிறந்தது என்ற தாய் சேய் உறவு ஒன்றை கற்பனை செய்யத் தேவையே இல்லை. இரு

மொழிகளிலும் ஒத்த ஒலிகள் மலிந்திருக்கின்றன என்பதைக் கொண்டு மட்டும் ஒன்று மற்றொன்றிலிருந்து பிறந்திருக்கிறது என்று முடிவு கட்டுவது மொழியியல் முடிபுகளுக்கு முரண்பட்டதுமாகும்[8]

என்ற கருத்து குறிப்பிடத்தக்கது.

பழங்காலத்திலிருந்தே மலையாளத்தைத் 'தமிழ்' என்றே பெயரிட்டு அழைத்திருக்கின்றார்கள் என்பதுதான் தமிழும் மலையாளமும் ஒன்றே என்றோ அல்லது பழங்காலத்திலேயே மலையாளத்தை 'தமிழ்' என்று பெயரிட்டு அழைத்திருக்கிறார்கள். இதற்குக் காரணம் மலையாளம் தமிழின் ஒரு கிளைமொழி என்பதுதான். கன்னடத்தைக் 'கரிநாட்டுத் தமிழ்' என்றும் துளுவை 'துளு நாட்டுத் தமிழ்' என்றும் வழங்கி வந்ததைப்போல மலையாளத்தை 'மலைநாட்டுத் தமிழ்' என்றும் அழைத்துள்ளனர். 'கரி நாட்டுத் தமிழ்' பிற்காலத்தில் கர்னாடகமாகவும், 'துளு நாட்டுத் தமிழ்' துளுவாகவும் மாறியது போல மலைநாட்டுத் தமிழ் மலையாளமாகவும் மாறியுள்ளன.

**மலையாள மொழி முதிர்ந்த நிலையில் தோன்றிய இலக்கியங்கள்**

மலையாளமொழி வளர்ச்சி அடைந்து இம்மொழியில் பல்வேறு இலக்கியங்களைப் படைத்துள்ளது; படைத்தும் வருகின்றன. பதினைந்தாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் 'கிருஷ்ண காதா' (அ) கிருஷ்ணப்பாட்டு என்ற நூலை வடக்கு மலபாரைச் சேர்ந்த செருசேரி நம்பூதிரி எழுதினார். நிரணம் கவிஞர்கள் கையாண்டத் தமிழ், சமஸ்கிருதக் கலவைகளை இவர் முற்றிலுமாக விலக்கிவிட்டார். பாகவதம் பத்தாவது காண்டத்தை அடிப்படையாகக் கொண்டுதான் இவர் தம் நூலை எழுதினார். ஆனால், கவிதை ரசத்துக்கு ஒத்துவராத தத்துவ விசாரணைகளை எல்லாம் விட்டுவிட்டார். நூலின் முன்பகுதியில் பாலகிருஷ்ணனின் விளையாட்டுக்களைச் சித்திரிப்பதில் வாத்சல்ய ரஸமும், பின் பகுதியில் கோபியருடன் கண்ணனின் லீலைகளை வருணிப்பதில் சிருங்கார ரஸமும் மிக நயமாகக் காணப்படுகின்றன. மலையாள

மொழியின் மிகச்சிறந்த படைப்புக்களுள் இந்நூலும் ஒன்று. மலையாளச் சொல் வழக்குகளுக்கு இக்கவிஞர் ஒரு நிலையான வடிவம் கொடுத்துள்ளார். இவரது கவிதைச் சொல் வழக்குகளுக்கும் இன்றைய மலையாள மொழிச் சொல் வழக்குகளுக்கும் அதிக வேறுபாடுகள் தெரிவது இல்லை.

செருசேரிக்குப் பின்னர் வந்த துஞ்சத்து எழுத்தச்சன், மலையாள இலக்கிய வரலாற்றில் மிக முக்கியமான இடத்தில் இருப்பவர். இவரது வாழ்க்கை வரலாற்றைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியவில்லை.

> தெற்கு மலபாரில் உள்ள திரிக்கண்டியூர் இவரது ஊர் என்பதும், தென்னாட்டில் இவர் பரவலாகச் சுற்றுப்பயணம் செய்திருக்கிறார் என்பதும், இவரது பெயர் எழுத்தச்சன் என்று இருப்பதிலிருந்து இவர் ஆசிரியர் தொழில் செய்தார் என்பதும் தெரிகிறது. கேரளத்தில் பதினாறாம் நூற்றாண்டில் காணப்பட்ட ஒழுக்கச் சீர்குலைவிலிருந்து மக்களை உய்விப்பதற்கு இவர் மிகவும் பாடுபட்டார். பக்தி இயக்கத்தில் இவரது மனது ஈடுபட்டது. நாட்டின் பண்பாட்டையும் ஒழுக்க மரபையும் மக்கள் உணரச் செய்வதை இவர் தமது கடமையாக மேற்கொண்டார். இவரது கவிதை, உயர் இலக்கியத் தன்மை கொண்டதாகவும், இவரது கருத்துக்களும் சொல்லும் முறையும் எல்லா மக்களின் மனத்தையும் தொடுவதாகவும் அமைந்துள்ளது[9]

எழுத்தச்சனுடைய மிக முக்கியமான நூல்கள் 'அத்யாத்ம ராமாயணமும்', 'மகாபாரதமும்' ஆகும். இவை கிளிப்பாட்டு நடையில் இயற்றப்பட்டுள்ளன. சமஸ்கிருத ராமாயணக் கதைக்கு ஒரு புதிய உயிரும் வடிவமும் கொடுத்து ஒரு பக்திக் காவியமாக 'அத்யாத்ம ராமாயண'த்தை எழுத்தச்சன் ஆக்கியிருக்கிறார். அவருடைய 'மகாபாரதம்' வியாச பாரதத்தில் ஐந்தில் ஒரு பங்கு அளவே உடையது என்றாலும் ஒரு முழுமையும் தனிப்பட்ட கவிதைப் பண்பும் கொண்டு அமைந்துள்ளது. இன்றும் கூடக் கேரளத்தில் சமயப்பற்றுள்ள இந்துக்கள் எழுத்தச்சனுடைய நூல்களை நாள்தோறும் பாராயணம் செய்கின்றார்கள். எழுத்தச்சனைப் பின்பற்றிப் பலர் புராணக்

கதைகளுக்கு ஆத்மார்த்த வடிவம் கொடுத்து எழுதினார்கள். ஆனால் எழுத்தச்சனுடைய கவிதைச் சிறப்பை அவர்கள் யாரும் அடையமுடியவில்லை என்று கூறலாம்.

பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய பக்தி இயக்கத்தின் தூண்டுதலால், ஏராளமான பக்திப் பாடல்களும், நீதிச் செய்யுட்களும் எழுதப்பட்டன. இவ்வாறு எழுதியவர்களுள் மிக முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர் பூந்தானம் நம்பூதிரி.

> பூந்தானம் நம்பூதிரியின் "ஞானப்பாட்டு" வாழ்க்கை நிலையாமையை உணர்ச்சி ததும்ப எடுத்துக் கூறுகிறது. இவர் தத்துவ நூல் அறிஞரல்லர். இவரது தத்துவமெல்லாம் இவரது சொந்த உணர்ச்சி அனுபவங்களையே அடிப்படையாகக் கொண்டது. இவரது ஒரே குழந்தை ஒரு விபத்தில் மூச்சித் திணறி இறந்தது. இந்தச் சோகத்தின் விளைவாக இவரது உள்ளத்தில் குழந்தை கிருஷ்ணனிடம் மகன்-தந்தை உறவு உணர்ச்சி வளர்ந்தது. 'சந்தான கோபாலாம் பானா' என்ற கவிதையில் இவர் தம் மகனை இழந்த சோகத்தை எட்டுப் பிள்ளைகளை இழந்த ஒரு பிராமணனின் புலம்பலாக வெளியிட்டிருக்கிறார்.[10]

இப்பாடல்கள் அனைத்தும் சங்க இலக்கியத்தில் காணப்படும் தன்னுணர்ச்சிப் பாடல்களைப் போலவே அமைந்திருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய ஜயதேவரின் 'கீத கோவிந்தம்' என்ற சமஸ்கிருத நூல் கேரள மக்களின் மனத்தை மிகவும் கவர்ந்து கோவில்களில் பாடப்பட்டது. பதினேழாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் மானவேதன் என்ற கோழிகோட்டு ஜாமொரின் 'கீத கோவிந்த'த்தை முன் மாதிரியாகக் கொண்டு 'கிருஷ்ண கீதி' என்ற சமஸ்கிருத நூலை எழுதினார். இந்த நூலை அடிப்படையாக வைத்து அவர் 'கிருஷ்ணன் ஆட்டம்' என்ற நடன நாடகத்தை உருவாக்கினார்.

**மலையாளம் - தமிழின் கிளைமொழி**

மலையாளம் தமிழின் கிளைமொழி என்பது பல அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. அது தமிழிலிருந்து வேறுபட்டு தனிமொழி என்ற நிலையை எந்தக் காலத்தில் அடைந்தது என்றும் அதற்கான காரணங்களை பற்றியும் இனிக் காணலாம்.

எல்லா மொழிகளுக்கும் சுவை வேறுபாடு காரணமாக, வட்டார வேறுபாடுகள் வருவது உண்டு. மலையாளத்தில் தற்பொழுது இடைநாட்டு மலையாளம் தவிர, தெற்கத்திய மொழி, வடக்கத்திய மொழி என்று இருவகை வேறுபாடுகள் உள்ளன. தமிழ்நாட்டிலும் தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூமி, பன்றி, அருவா, வடக்கு, சீதம், மலைநாடு, புனநாடு, செந்தமிழ் என்ற பன்னிரண்டு நாட்டுப்பிரிவுகள் வழக்கில் இருந்தன. அந்தப் பகுதிகளில் வட்டார மாறுபாடுகள் மொழி உச்சரிப்பின் அடிப்படையில் ஏற்பட்டிருந்தன.

> மதுரையில் வழங்கிய மொழிக்குச் செந்தமிழ் என்றும், மேற்கூறிய பன்னிரெண்டு நாடுகளில் வழங்கி வந்த மொழிக்குக் கொடுந்தமிழ் என்றும், தமிழ் நூலாசிரியர்கள் பெயர் கொடுத்திருந்தனர். மேற்கூறிய பன்னிரண்டு நாடுகளில் குட்டம், குடம், கற்கா, வேண், பூமி ஆகிய ஐந்தும் இன்றைய கேரள மாநிலத்தில் உள்ளவை. இந்த ஐந்து நாடுகளிலும் வழங்கிய கொடுந்தமிழ் மலையாளமாக வளர்ந்தது.[11]

**கொடுந்தமிழ் மலையாளமாக மாறியதற்கான முக்கிய காரணங்கள்**

1. சேர - சோழர்களின் நூறு ஆண்டுக்காலப் போரின் காரணமாக, சேர நாடு, வீழ்ச்சியுற்று அமைதியற்ற நிலையில் சில காலம் இருந்தது. இக்காலத்தில், ஏற்கெனவே செல்வாக்குப் பெற்றிருந்த நம்பூதிகள், வலுப்பெற்றனர். வடமொழியின் தொடர்பு அதிகமாயிற்று. புதிய மணிப்பிரவாள நடை உருவாயிற்று.

2. குலசேகரர்களின் ஆட்சிக்காலத்தில் மலையாளத்திற்குத் தமிழ்நாட்டுடன் நல்ல தொடர்பு இருந்தது. அவர்களின் ஆட்சியின் வீழ்ச்சிக்குப்பின்னர் தொடர்பு குறையத் தொடங்கியது.
3. வேணாட்டு அரசர்களின் காலத்தில் இருந்த சிறிது தொடர்பும் இரவிவர்ம குலசேகரன் ஆட்சிக்குப்பின் அற்றுப்போயிற்று.
4. பதின்மூன்றாம் நூற்றாண்டின் மலையாளம் தன்னிச்சையாக சமஸ்கிருதத்தின் தொடர்புடன் வளரத் தொடங்கியதால் அக்காலம் வரை வளர்ந்து வந்த மலையாளத்தை எழுதப் பயன்படுத்திய தமிழ் வட்டெழுத்து, தன் செல்வாக்கை இழந்தது. வடமொழிச் சொற்களை எழுத, வட்டெழுத்தில் எழுத்து வடிவங்கள் இல்லாததால் அறிஞர்கள் கிரந்தம் கலந்த புதிய வடிவைப் பயன்படுத்தினர்.

மலைநாட்டில் கொடுந்தமிழாயிருந்த மொழி தற்பொழுது வழக்கிலிருக்கும் மலையாளமாகப் பரிணமித்ததற்குள்ள காரணங்களும் சூழ்நிலைகளும் எண்ணத்தக்கன.

மலையாள மொழிக்கு மூன்று பெருங்கால நிலைகளைக் கொள்ளலாம். கொல்லம் ஆண்டின் தொடக்கக் காலமாகிய கி.பி.825க்குப் பின்னர் மலையாளம் ஒரு சுதந்திரமொழியின் நிலையை எய்திற்று. கொல்லம் ஆண்டிற்கு முன்னுள்ள காலத்தைத் தாயாகிய தமிழின் அல்லது மூலத்திராவிட மொழியின் கருவில், வளர்ந்திருந்த காலமாகக் கணக்கிட்டால் போதும் அக்காலத்தின் தொடக்கத்தில் தோன்றியதுதான், பதிற்றுப்பத்து போன்ற நூல்கள் அவை கேரளத்தில் வாழ்ந்தவர்களால் இயற்றப்பட்டன.

கொடுந்தமிழாய்ப் பிறந்த கேரளமொழி. 500 ஆண்டுகாலம் குழந்தைப் பருவத்திற்கு ஒத்த கொடுந்தமிழ் நிலையில் இருந்து விட்டு, அதில் பாதிக்கும் மேற்பட்டகாலம் குமரிப் பருவமாகிய முதிர்ந்த நிலையில் மலையாளம் என்ற பெயரைப் பெற்றிருக்கிறது.

செய்யும் தொழிலைக் குறிக்கும் தொழிற்பெயர்கள், செய்யும் வேலையைக் குறிக்கும் வினைச் சொற்கள், அதற்கான துணை வினைகள், இடைச்சொற்கள், வினாவடிச் சொற்கள் போன்றவற்றிலும் இரண்டிற்கும் பல ஒற்றுமைகள் உள்ளன.[13]

**உணர்ச்சி**

*இலக்கியத்திற்கு இன்றியமையாத கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகிய இந்நான்கும் ஒருங்கே சிறந்து அமைதல் அரிது. மிகச் சிறந்த புலவரிடத்துள் நான்கும் ஒருங்கே சிறந்து அமைதல் உண்டு. இவ்வகையில் சங்க இலக்கியப் பாடல்களிலும் மலையாள இலக்கியப் பாடல்களிலும் உணர்ச்சி மிக்க பாடல்கள் அதிகம் உள்ளன. சங்க இலக்கியத்தில்,*

மலர்தார் மார்பன் நின்றோன் கண்டோர்
பலர்தில் வாழி தோழி அவருள்
ஆரிருள் கங்குல் அணையொடு பொருந்தி
ஓர்யான் ஆகுவது எவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே[14]

*காதலனை முதலில் கண்டபோது காதலி மட்டும் தனியாக இல்லை; அவளோடு மற்ற பெண்களும் இருந்தார்கள். எல்லோரும் கண்டது போலவே அவளும் கண்டாள். அவளுடைய உள்ளத்தில் மட்டும் அவனைப் பற்றிய காதல் வளர்ந்தது. ஒருநாள் தோழியிடம் தன் உள்ளத்தின் ஏக்கத்தைப் பற்றிக் கூறுகிறாள். "தோழி" மலர்மாலை அணிந்த அழகிய தோற்றத்தோடு அன்று அவன் அங்குநின்ற காட்சியைக் கண்டவர் பலர். அவர்களுள் யானும் ஒருத்தி ஆனால் மற்றவர்கள் வருந்தவில்லை. யான் மட்டும் நள்ளிரவிலும் படுக்கையில் கிடந்து தனியே கண்ணீர் சொரிந்து வாடுவது ஏன்? என்கிறாள். இவ்வாறு ஒரு பெண்ணுள்ளம் உணர்ந்த உணர்ச்சியைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார் கபிலர். மலையாள இலக்கியத்தில்,*

வோடாகுரவகரஜஸாம் கிஸலயபுடபேத
ൗ காராறுகத

அநிமித் தோல்கண்டாம பிஜனயதி

மனஸோமலயவாத[15]

என்றும்,

மேகாலோகே பவதிஸ  கினேப்பன்யதாவ்ருத்தி சேத[16]

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

கருங்குவளையின் தாதுவைக் கொண்டதும், மூடியிருக்கும் (தளிதை) அரும்பை விரியச் செய்யும்போது சேரும் நீர்த்துளிகள் பொருந்தியதும் ஆகிய தென்றல், காரணம் இன்றியே துன்பத்தை உண்டாக்குகின்றது.

மேகக் காட்சியில் இன்புற்றிருப்பவன் மனத்திலும் விகாரம் தோன்றுகிறது.

மாலக் காலத்து மல்லீதல சலன படோ
மல்ப்ரியா விப்ரயோகே
நீதானும் நீண்ட சோக ப்ர மன
விதயே தென்றலே கொன்றிடு என்னெ[17]

வண்டுகளால் கவரப்பட்ட அழகிய பூக்களைக் கொண்டு அனங்கனால் என்னைக் கொல்ல இயலவில்லை. சந்திரன்கூட, சகோரப் பறவைக் கூட்டம் அதன் நிலவை உண்டதால், என்னைக் கொல்ல வல்லானல்லன். மாலைக் காலத்தில் முல்லை முகைகளை அசைப்பதில் வல்லமையுள்ள தென்றலே, என் காதலியைப் பிரிந்த துயரில், நீதானும், நீண்ட சோகத்தைத் தணிப்பதற்கு என்னைக் கொன்றிடு.

**நகை**

இகழ்ச்சியில் பிறப்பது நகை எனப்படும் இது எள்ளல், இளமை, பேதைமை, மடன் போன்றவற்றால் இந்நான்கு நிலைகளன்களும் பிறக்கும். இதனையே மலையாளத்தில்,

குலதனம் இஹ ந்தி விட்டு அஜஸ்ரம்
மிளி யுழுதிட்டவெ ஒக்கயும் மறந்து

"நடிகுல முடி நங்ங" யென்ற அழய்க்கும்

துளுவனொளம் ஜளர அங்ஙும் இங்ஙும் இல்ல[18]

இப்பாடலில் எள்ளல் என்ற நிலைகளன் இடம் பெற்றுள்ளது.

குலநிதியை ஒத்த பூசைத்தொழிலை விட்டுவிட்டு என்றும் வயல் உழுது அவற்றை எல்லாம் மறந்து, இப்போது "நடன குல உயர் நங்கையே!" என்று அழைக்கும் துளுவனைப் போன்ற மூடர்கள் அங்கும் இங்கும் இல்லை.

**அச்சம்**

ஒருவருக்கு துன்பம் நேரிடும்போது அச்சம் என்ற மெய்ப்பாடு தோன்றும். அணங்கு, விலங்கு, கள்வர், இறை என இந்நான்கும் அச்சத்தின் நிலைகளன்கள் எனலாம். சங்க இலக்கியப் பாடல் ஒன்றில்,

திண் சுவர் நோக்கி நினைந்து கண்பனி

ஐமென் தூவி அணைசேர்பு அசை இ

மையல் கொண்ட மதனழி இருக்கையல்

பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி

நல்ல கூறு என நடுங்கிப்

புல்லென் மாலையொடு பொருங்கொல் தானே[19]

என வருவதைச் சான்றாகக் கூறலாம்.

இப்பாடலில் காதலன் வெளியூர்க்குப் பிரிந்து சென்ற பிறகு காதலி அவனுடைய வரவை நினைத்து ஏங்குகிறாள். அவன் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற பருவமும் வந்துவிட்டது. அவன் பிரிந்து சென்ற நாட்களைச் சுவரில் குறித்து வைத்து அவற்றை நோக்கிக் கண்ணீர் விட்டபடியே, படுக்கையில் கிடந்து வருந்துகின்றாள். அப்போது பல்லி சொல்வது கேட்டு, "பல்லி உன்னை வேண்டுகிறேன் என் காதலர்க்கு ஒரு தீமையும் இல்லை என்று நல்ல திசையில் நல்லன சொல்வாயாக" எனப் பயந்து நடுங்குகிறாள்.

பரம் உடனே பரப்ருதனாம்

பாண்ட்ய யுவா கண்டயாம்சகாரா களே

துரகாருடாஸ் த்வரயா

துரதுர மண்டி துருக்கர் எல்லோரும்[20]

என்று மலையாளப் பாடலில் அச்சச் சுவை வெளிப்படுகிறது.

இங்கு துருக்கருக்கு விக்கிரமபாண்டியனைப் பற்றி உள்ள பயம் 'ஓட்டம்' என்ற பின்னிலையாலும், குறிப்பால் எய்தும் தளர்வு, வருத்தம் முதலிய இயக்கங்களாலும், மிகுதியைப் பெற்று அச்சமாய் விடுகின்றது.

போர் நடைபெறும் போது பகைப் படையினரைப் பாண்டிய இளைஞன் (விக்கிரம பாண்டியன்) கழுத்தை வெட்டினான். உடனே எதிரே வந்த துருக்கப் படையினர் குதிரையின் மீதேறி விரைவாக பயந்து ஓடினார்கள்.

**உவகை**

மகிழ்ச்சியால் பிறப்பது உவகை எனப்படும். உவகை இன்பத்தின் மிகுதியாகும். செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு என இந்நான்கும் உவகையின் நிலைக்களன்கள் ஆகும். இதற்குச் சான்றாக மலையாளத்தில்,

பரரோடு பறஞ்ஞிருந்நும் எல்லாம்
பகலோ போய்க் கழியும், ப்ரியா வியோகே
படும் அத்தல் நி ஸீ சொல்ல வல்லேன்
சில வாணாள் உளவாய்க் கழிக்க யென்றி[21]

காதலன் பகல் பொழுதில் தன் காதலியுடன் பேசிக் கொண்டிருக்கிறான். பின்பு அவளுடன் பல்வேறு இடங்களுக்கும் சென்றுள்ளான். இரவில் தன்னுடைய காதலியை பிரிந்து இருக்கும் நேரத்தில் பகல் பொழுதில் காதலியுடன் இருந்ததை நினைத்துப் பார்க்கும் போது மனத்திற்கு மகிழ்ச்சியாக இருக்கிறது என்று கூறுகிறான்.

**கற்பனை**

இலக்கியத்தைக் கற்போர் மனத்தில் கவினுறப் பதியச் செய்யப் படைப்பாளர்கள்தம் கற்பனையைப் பயன்படுத்துகின்றனர்.

இயற்கையைத் தீட்டிக் காட்டும் நல்ல ஓவியங்களை அனைவரும் விரும்புகின்றோம். அவை இயற்கையை உள்ளவாறு காட்டாமல் வேண்டாத பகுதிகள் பலவற்றை விட்டு, அழகுணர்ச்சிக்கு வேண்டியவற்றை மட்டும் கொண்டு தீட்டப்படுவதால்தான் விரும்பிப் போற்றுகின்றோம். இயற்கையைப் பாடும் பாட்டுகளும் அவ்வாறு அமைந்திருப்பதால்தான் போற்றுகின்றோம்.

புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தூம்பி பழுஞ்செத்துப்
பல்கால் அலவன் கொண் கோட்கு அசாந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைதேர் நாரை எய்தி விடுக்கும்[22]

என்பதைச் சான்றாகக் கருதலாம்.

நாவல் மரத்தருகே பலவற்றைக் காண்கின்றார் கவிஞர். கருநிற நாவற்பழங்கள் நிலத்தில் உதிர்தல், கருநிற வண்டுகள் அங்கும், இங்கும் பறந்து செல்லுதல், நிலத்தில் நண்டுகள் ஓடிச் சென்று நாவற்பழங்களைத் தின்னுதல், நாரைகள் நண்டுகளைப் பற்றித் தின்னுதல் முதலான பலவற்றைக் காண்கின்றார். ஆனால் அவற்றுள் சிலவற்றை மட்டும் தேர்ந்து தம் உள்ளம் விழைந்தவாறு ஒரு கற்பனையைக் கூறியுள்ளார். ஒரு வண்டு நாவற்பழத்தைத் தன் இனமான கருவண்டு என்று கருதி அருகே சேர்கின்றது. அப்போது அதை வண்டு என்று உணராமல் நாவல்பழம் என்று கருதி நண்டுபற்றுகிறது. அதன் கூரிய நகங்களுக்கு இடையே சிக்குண்டு வருந்தும் வண்டின் ஒலி கேட்டு நாரை ஒன்று திரும்பிப் பார்த்து, அந்த நண்டைப் பற்றச் செல்கிறது. நாரையின் வருகையை உணர்ந்த நண்டு, வண்டை விட்டு ஓடிவிடுகிறது. வண்டு தப்பிப் பிழைக்கிறது. தம் உள்ளம் விழைந்த காட்சிக்கு வேண்டாதவற்றை விட்டு

வேண்டிய சிலவற்றைத் தருவித்துக் கூட்டி ஓர்அழகிய கற்பனையை அமையச் செய்துள்ளார் கவிஞர். மலையாள இலக்கியத்திலும்,

மந்தீ பூதே ஜனௌகே, பரிமள பஹுளாம்
கய்யிலாதாய மாலாம்
மந்தார போக மந்தஸ்மித மதுரமுக்
மங்கலஸ்த்ரீ ஸமேதா
மந்தம் மந்தம் நயந்த்கன ஜகனபரம்
ப்ராப்ருத ப்ராய மக்ரே
மந்தாக்ஷா லங்க்ருதா க்ஷீ மனஸிஜ கலிகா
மைதிலீ ஸா நடந்தாள்

மூளிடும் ப்ருங்கபாளீ விவலன மதுராம்
மாலிகாம் கைத்தலே சேர்த்
தாளீ தத்தாவலம்பா நிஜ தனுமஹஸா
ரங்க முத்யோத யந்தீ
வ்ரீளா வேகேன ராமானன மிடயிடயில்
கட்டு நோக்கிப் ப்ரமோத
வ்யாலோலா மேல்லெ மெல்லெந் நரிகி லுபகதா
கோமளாப்யாம் பதாப்யாம்[23]

என்று கற்பனை விரிந்துள்ளது.

சுயம்வரம் நடைபெறும் நேரத்தில் சீதை வருவதை, இவ்வாறு கற்பனை நயத்துடன் கூறுகிறார். சீதை கையில் ஒரு அழகிய மாலையை எடுத்துக் கொண்டு வருகிறாள். மாலையின் மணம் எங்கும் வீசுகின்றது. அவள் முகத்தில் புன்னகை பூத்துக் குலுங்குகின்றது. அவளுடன் மங்களகரமான பெண்களும் வருகின்றனர். அவளுடைய கூந்தலில் பல்வேறு ஆபரணங்களையும் பொருத்தியதால் அவளால் நடக்க இயலாதவளாய் மைசெறிந்த விழிகளைத் தாழ்த்தி மணமகனைக் கண்டாள்.

வண்டுகள் முரன்று மொய்க்கும் மாலையில் சேர்த்தகைதான் மயங்கிட நெகிழும். பெண்டிர் தன் மேனி தாங்க பெடையனம் போல அங்கே பெயர்த்தடி வைப்பாள். கடைக்கண்ணால் ஐயனைக் காண்பாள். அப்போது நாணுவதைப் போல உவகைக் கொண்டாள். பெண்களுக்குரிய நாணத்துடன் கோமகள் அருகில் வந்தாள்.

**உள்ளுறை**

உள்ளுறை என்பது கருப்பொருளின் துணைக்கொண்டு பெறப்படும் குறிப்பு உவமையாகும். தொல்காப்பியர் இது பற்றிக் குறிப்பிடும்போது,

> திணையை உணர்வதற்கும் கருப்பொருளோடு சார்த்தி ஒத்துப்
> பொருள்கொள்ளும் வகையிலும் இவ்வுள்ளுறைச் செய்தி
> மேற்கொள்ளப்படும்[24]

என்று உரைத்தார். இக்கூற்றிற்குச் சான்று பகரும் வகையில்,

> அருவி ஆன்ற நீரில் நீளிடைக்
> கயந்தலை மடப்பிடி உயங்கு பசி களை இயர்
> பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை
> அருஞ்சுரஞ் செல்வோர்க்கு அல்குநிழல் ஆகும்[25]

என்று நற்றிணைப் பாடல் சுட்டுகின்றது. பிடியானையின் நிமித்தம் களிறு முறித்துச் சாய்த்த ஓமைமரம் சுரஞ்செல்வோர் தங்குதற்குரிய நிழலாகும் என்று பொருளின் நிமித்தமாக அமைந்துள்ளது. தலைவனால் பிரிந்து நீக்கப்பட்ட தலைவி பசலை பாய்ந்து அவ்வோமை வாடுவது போல துன்புறுவாள் என்ற பொருளின் வெளிப்பாட்டால் வலியுறுத்தப்பட்டது. இக்குறிப்பு தோன்றுமாறு மலையாள இலக்கியத்தில்,

> காற்றென்றால் காற்று காற்றல்லது மிது
> முடணங்ஙய்ய நாட்டின் னடுத்தோ
> ராற்றில் தெற்றொன்று நீந்திக் குளிர்மையில்
> வளரும் தெங்ஙிலெங்ஙும் குழஞ்ஞ்
> ஏற்றொலெம் மெய் குளிர்க்கும் பரிசு கருணையா
> ரோகிணி நாயிகா தன்

மாற்றில்லாக் காந்தி சேர்ந்நோருல் தடவி வரும்
காற்று காற்றாகிலின்று[26]

என்னும் பாடல் இடம்பெற்றுள்ளது.

காற்றென்று பேசுகிற எல்லாக் காற்றும் காற்றல்ல. ஊர்ப்புறத்தே உள்ள ஆற்றில் நீந்திக் குளிர்ந்து, வளர்கின்ற தென்னைகளிடையே தள்ளாடி வந்து ஒப்பற்ற அழகியான தலைவி ரோகிணியின் உடலை வருடி வந்துபட்டால் (படும்போது) என மெய்யைக் குளிர்விக்கிற காற்றைத்தான் காற்று என்று கூற வேண்டும் என்கின்றனர். மற்றொரு பாடலில் கீழ்க் கடலினின்று உதித்தெழும் சந்திரனை அந்திப்பொழுதின் மணிபந்தாகக் கற்பனை செய்து பார்க்கின்றார்.

சலதி ஜலதி வீசி கைத்தலம் கொண்டு தட்டி
தரள சசிமணிப் பந்துல்க்ஷிபந் தீவ சந்த்யா
விலுளித மிருளென்னும் கூந்தல் வீணிட்டு தாரா
ச்ரமஜலவு மணஞ்ஞாள் அச்சிதன் நந்தினீவ[27]

அலையெனும் கைத்தலத்தால் அந்தியாம் மங்கை, பந்தை அடித்தனள் என்னப் பொங்கி ஆழியின் மதியெழும்ப கங்குலாம் கரிய கூந்தல் கட்டவிழ் புரள, மீன்கள் அங்கவள் நுதல் வேர்த் தென்ன அரும்பின, ஆச்சி ஆட இப்பாடலில் தலைவியரின் மேனியழகு வருணிக்கப்படுகின்றது.

**வடிவம்**

கலைஞரின் உள்ளத்தையும், கற்பவரின் உள்ளத்தையும் வடிவமே தொடர்புபடுத்துகிறது. படைப்பாளரின் உணர்ச்சி ஆற்றலுடையதாய், பண்பட்டதாய் விளங்கின் கலை பெறும் வடிவிலும் அந்த ஆற்றலும் பண்பாடும் விளங்கும். அந்த ஆற்றலால்தான் அவருடைய உணர்ச்சி கற்பவரின் உள்ளத்தில் சென்று பதிய முடிகின்றது. அந்த பண்பாட்டால்தான், அது கற்பவரின் உள்ளத்தைப் பயன்படுத்த முடிகின்றது.

ஒருவருடைய உள்ளத்தின் துயரம் அவருடைய கண்ணீரில் புலப்பட, அந்தக் கண்ணீரைக் கண்ட மற்றொருவரின் உள்ளத்திலும் அத்துயரம் ஏற்படுதல் போலவே, படைப்பாளியின் உணர்ச்சி அனுபவம் அவர் படைத்த படைப்பின் வடிவத்தில் புலப்பட, அதைக் கற்பவரின் உள்ளத்திலும் அதே அனுபவம் விளைகிறது. ஆகவே, அனுபவம் ஓர் உள்ளத்திலிருந்து மற்றோர் உள்ளத்திற்குப் பரவுவதற்குக் கலையின் வடிவம் பயன்படுகிறது. இதனை,

> பாட்டியல் பொருளுக்கும் வடிவிற்கும் இயைபு உண்டு. உணர்த்தப்படும் பொருளும் அதை உணர்த்தும் வடிவம் பிரிக்க முடியாதனவாய் இயைந்து நிற்கும். கற்பனையுணர்ச்சியும் ஒலிநயமாகிய அதன் வடிவமும் ஒன்றுபடும் இவையே பாட்டாக அமையக் காரணமாக இருப்பது. இந்த உணர்ச்சியை வேறு வடிவில் புலப்படுத்த முடியாது என்று கருதத்தக்க வகையில் அந்த அமைப்பு உள்ளதாகும்[28]

என்று மு.வ. கூறுகின்றார்.

> முகைமுற் றினவே முல்லை; முல்லை யொடு
> தகைமுற் றினவே தண்கார் வியன்புனம்
> வாலிழை நெகிழ்த்தோர் வாரார்
> மாலை வந்தன்றென் மாண்நலம் குறித்தே[29]

கார்காலத்தில் திரும்பி வருவதாகக் கூறித் தலைவன் பிரிந்து சென்றான். கார்காலம் வந்துவிட்டது. தலைவன் வரவில்லை. அந்நிலையில் தலைவி நினைந்து நினைந்து ஏங்குகின்றாள்.

முல்லை அரும்புகள் முற்றிவிட்ட காடுகள் கார்காலத்து அழகை நிரம்பப் பெற்றுவிட்டன. தம் அணிகலன் நெகிழுமாறு பிரிந்தவர் இன்னும் வரவில்லை. ஆனால், என் சிறந்த அழகையெல்லாம் அழிக்கவல்ல மாலைக்காலம் வந்துவிட்டது.

மேலே, உள்ள பாட்டைச் சிலமுறை படித்தால்தான் உணர்ச்சியை ஒருவாறு பெற முடிகிறது. இப்பாட்டில் வியன்புனம், வாலிழை, வந்தன்று போன்ற சொற்கள் இன்றைய தமிழ் வழக்கில் இல்லாத சில சொற்கள் -

உள்ளமையால் அந்த உணர்ச்சியை எளிதில் பெற முடியவில்லை. மலையாள இலக்கியத்தில்,

இது காலம் ஜடயாயிது கார்குழ
லிடரோடு பூமியில் வீணு கிடந்நவள்
நிதரா மழுவது காலம் கண்ணின
நீரோடு பொடியு மணிஞ்ஞுதினாலே
கதிரவனெப் பனி பொழிவதினகமே
காணாயது போலெக் கண்டேன் நான்
அதி தீனாமேனேம் புக தந்நி
லமர்ந் நெரியும் தீபம் போலெயும்[30]

அசோகவனத்தில் சிறையிருந்த சீதையின் உருவம் இவ்வாறு இருந்தது என்று அனுமன் கூறுகிறான். தலைமுடிகள் கலைந்து கிடந்தன. அவள் கண்களில் நீர் சொறிந்து கொண்டேயிருந்தது. அருகில் உள்ள தூசுகள் அனைத்தும் அவள் கண்களில் படிந்திருந்தன. அது சூரியனையே பனி சூழ்ந்து கொண்டது போல சீதை மிகவும் சோகத்தோடு மண்ணில் வீழ்ந்து கிடந்தாள். அக்காட்சி புகைதன்னில் எரிந்து அடங்கும் தீபம் போல் காட்சியளித்தன.

**அணிநயம்**

செய்யுளில் அமையும் அழகைத் தமிழ் இலக்கண நூலார் அணி என்றனர். இதனை வடமொழியாளர் அலங்காரம் என்பர். எல்லா பொருளணிகளுக்கும் பெரும்பாலும் உவமையே அடிப்படையாய் அமைந்துள்ளது. உவமை என்பது ஒப்புமை ஆகும். ஒரு பொருளோடு மற்றொரு பொருளை ஒப்பிடுவது உவமையாகும்.

**பல்பொருள் உவமை**

ஒரு பொருளுக்குப் பல உவமை காட்டுதல் பல்பொருள் உவமை அணி எனப்படும். சங்க இலக்கியத்தில்,

கார் மலர் பூவை கடல் இருள்மணி
அவை ஐந்தும் அணிகிளர் மேனியை[31]

என்று பரிபாடலில் காணப்படுகின்றது. மழை, பூவை, மலர்,கடல், இருள், நீலமணி ஆகிய ஐந்து பொருள்கள் திருமாலின் கரிய மேனியின் நிறத்திற்கு உவமையாக வந்துள்ளன. ஒரு பொருளுக்கு ஓர் உவமை எடுத்துக்காட்டுவது மரபாகும். இம்மரபினைச் சங்க காலத்திலேயே மீறியுள்ளனர். மலையாள இலக்கியத்திலும்,

வில் போலே புரிகம், விலாஸி ஜகனம்
தேர்த்தட்டு போலே, மனம்
கல் போலே, கனகோஜ்வலம் நிறமெடோ,
பூந்தொத்து போலே முல,
வேல் போலே நயனங்ஙள், வெண் முறுவலோ
முல்ல ப்ரஸூனோபமம்
பால் போலே படவார்த்த, பங்ஙுனி மலச்
சாரத் தொரேணீத்ரு[32]

என அமைந்துள்ளது.

வில் போல உன் புருவம், அழகிய அல்குல் தேர்த்தட்டுபோல, மனம் கல்போல, பொன் போன்ற ஒளி உள்ளது அவள் நிறம். பூங்கொத்து போல முலை. வேல் போல நயனங்கள். வெண்முறுவலோ முல்லை மலருக்கு உவமை. பால் போல படைவார்த்தை (உரையாடல்) பங்குனி மலைச்சாரலில் உள்ள ஒரு மான்விழியே. இப்பாடலுள் வளைவு, பரப்பு, கடுமை, விளக்கம், பொலிவு, கூர்மை, வெண்மை, இனிமை முதலிய பொதுத்தன்மைகள் தொக்கு நின்று பல உவமைகளைக் கூறியுள்ளனர்.

**எடுத்துக்காட்டு உவமை அணி**

ஒரே எடுத்துக்காட்டைக் கூறுதல் பொதுவாகத் தமிழ் இலக்கியத்தில் காணப்படும் பொதுத்தன்மையாகும். ஒன்றுக்கு மேற்பட்ட எடுத்துக்காட்டுக்களை அடுக்கிக் கூறுவது பண்டைய இலக்கியத்தின் தனிச்சிறப்பாகும். எடுத்துக்காட்டுகளை அடுக்கிக் கூறி அவற்றை உவமையாக அமைத்தல் எடுத்துக்காட்டு உவமை அணி ஆகும். இதனைச் சங்க இலக்கியத்தில் காணலாம்.

புலி பார்த்து ஒற்றிய களிற்றரை பிழைப்பின்
எலி பார்த்து ஒற்றா தாகும்
கடல்மண்டு புனலின் இழுமெனச் சென்று
நனியுடைப் பரிசில் தருகம்[33]

என்னும் இப்பாடலில், புலி யானையை நோக்கிப் பாய்ந்து குறிதவறிப்போனால் அது ஒருபோதும் மனம் சோர்ந்து எளிதில் கிடைக்கக்கூடிய எலியை நாடிப் பாயாது. அதுபோல இரவலன் குறிப்பிட்ட வள்ளலை நாடிச் செல்வதை விடுத்துப் பிறரை நாடான். மலையாளத்தில் எடுத்துக்காட்டு உவமையாக,

தனயே தவ ஸம்பர்த்தமுச்சை
ரினிய ஓர் ஆட்யயெ நீ வ ச்சுகொள்க
தனஹீனரில் நின்று உயர்ச்ச வாரா
பனி நீர் வீண்ணு குளம் நிறஞ்ஞுதில்ல[34]

என்று அமைந்துள்ளது.

இப்பாடலின் பொருள், நின் நன்மைக்காய் இனி ஒரு செல்வந்தனை வசீகரித்துக் கொள்க. செல்வமில்லாதாரினின்று உயர்வு வாராது. பனி நீர் வீழ்ந்து குளம் நிறைந்ததில்லை.

இப்பாடல் வைசிய தந்திரத்திலுள்ளது. மற்றொரு பாடலில்,

ராகாங்குரோ ஹ்ருதயமே வெடியும் தருண்யாம்
உண்டாவிதோ யுவதி மாத்ர குதூஹலேன

நீரே தனெக்கு நியதாசிரயம் என்றவாறே

வெந்நீரிலும் விளையுமோ குவளப் ரஸுனம்?[35]

என அமைந்துள்ளது. இதில் இதயத்தையே களைந்த இளம் பெண்ணில் இன்பம் உண்டாகுமோ? இளம்பெண் என்ற மகிழ்ச்சி மாத்திரத்தால்? "நீரே, தனக்கு எப்பொழுதும் சார்பு" என்பதால் வெந்நீரிலும் விளையுமோ குவளை மலர் என்று எடுத்துக்காட்டு உவமை வந்துள்ளது.

**உருவகம்**

ஒரு பொருளின் அழகைக் கண்டு மற்றொரு பொருளின் அழகை நினைந்து இதனை அதனோடு ஒப்பிடுதல் உவமை. அதே மனநிலை மேலும் சிறிது வளர்ந்து, இரண்டு பொருளையும் வேறு வேறாகக் காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றைக் கண்டால் அது உருவகம் எனப்படும். இரண்டனைச் சார்ந்த தனித்தனி உணர்ச்சிகளும் சேர்ந்து ஆற்றல் மிக்க உணர்ச்சியாய் வளர்கிறது இவ்வளர்ச்சியால் பாட்டு பெறும் பயன் பெரிது. இதனை மலையாள இலக்கியத்தில்,

பண்டு இல்லாதோர் அம்ருது, பதினாறாண்டு புக்கோரு பத்மா
பூப்பான் பொன்னின் முகளம் உளவானேரு பூகல்பவல்லி
அம்போஜம் கொண்டு அணிமதி, நிறம் தூகுவோர் இந்துரேகா
சித்ராகாரா ஜயதி சிரிதேவீ தி மே சித்த நாதா[36]

எனக் காணலாம்.

இப்பாட்டின் பொருள், பண்டு இல்லாதோர் அமுது, பதினாறாண்டு புக்க திருமகள், பதுமம் பூப்பதற்குப் பொன் முகளாகி உள்ள ஒரு பூகற்ப வல்லியாகும். தாமரையோடு கூடிய அணிமதி. நிறம் (ஒளி) தூவும் ஓர் பிறைமதி. இவ்வாறு அற்புத மயமாகச், ஸ்ரீதேவி ஆகிய உயிர்த் தலைவி வெற்றி பெறுகிறாள். அழகு, முலைமொட்டு, கண், முகம், நெற்றி ஆகியன அமுதம், திருமகள், வல்லி, தாமரை, முழுமதி, பிறை ஆக உருவகிக்கப்பட்டுள்ளன. இது போன்ற பாடல்கள் சங்க இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளன.

**சிலேடை**

ஒரு சொல்லை இருபொருள்பட அமைப்பது சிலேடை என்பர். சிலேடைப் பொருள் சொல்வழக்கில் நயம் விளைவிப்பதாக அமைகின்றது. சிலேடைப் பொருள் தமிழில் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. மலையாள இலக்கியத்திலும் சிலேடை நயம் அமைந்துள்ளதை,

துள்ள வேண்டும் கிடந் நங்ஙு
கொள்ள வேண்டும் அதின் வில
பாவம் நடிக்கயும் வேண்டும்
கேவலம் கூத்து வைபகம்[37]

என்னும் சான்றால் அறியலாம்.

துள்ள வேண்டும் அங்கு, கொள்ள வேண்டும் அதன் விலை. மெய்ப்பாட்டோடு நடிக்கவும் வேண்டும். பரத்தைத் தொழிலே கூத்து, (அங்ஙு, கிடந்து ஆகியன அசைநிலை. துள்ளலுக்கு ஆட்டம் என்றும் காமக்கூத்து என்றும் இரு பொருள். பாவம் என்பதற்கு அன்பு என்றும் மெய்ப்பாட்டு குறிப்பு என்றும் இரு பொருள், நடித்தல் என்பதற்குப் பாவித்தல் என்றும் அபிநயம் செய்தல் என்றும் இரு பொருள் இடம் பெற்றுள்ளன.

**எதுகை**

தமிழில் அடிகள் தோறும் முதற்சீரின் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது எதுகை என்பர். ஆனால் மலையாளத்தில் ஒத்த எழுத்துக்களை முறையாக வைப்பது என்று கூறுகிறது. மெய்யெழுத்துக்களின் ஒப்புமையே இங்குக் கருதப்படுகின்றது. உயிரெழுத்துக்கள் தம்முள் ஒத்தவைகள் ஆயினும் அல்லவையாயினும் குறை ஒன்றுமில்லை. ஒத்த எழுத்துக்களின் வைப்பு இடை அகன்று போகக்கூடாது. அவ்வாறெனில் ஒன்றுதல் தோன்றாது என்கின்றனர்.

வீயாதோ போந்து மாலெப் பொழுது
மனஸிஜோன்மாதம் ஊடேமிப்பிச்சு

அஸ்மத் காத்ரம் குளூர்ப்பிச்சு அபலதரம்

ஒழிச்சு அன்ய ப்தோபசாரம்

கோடீ சூடின்ற முல்லப் புது

மலரிதளில்ப் புக்கு தேனுண்டுறங்ஙும்

ப்ருங்காளீ பக்ஷபாளீ பரிசலன

படுர்ம்மாலயோ கந்த வாஹ[38]

இப்பாடலில் ச்ச, ச்ச என்றும், டீ, டி என்றும் ளீ, ளீ என்று அதிகம். இடையீடில்லாது பயன்படுத்தப்பட்டுள்ளது. மனதிலெழும் காம மயக்கத்தைத் தணிவித்து எனது உடலைக் குளிரச்செய்து, குளிரவைக்கும்படிச் செய்கின்ற பிற பணிவிடைகளைப் பயனற்றவையாக்கிக், கோடி என்னும் அழகி தலையில் ஆடும் முல்லையின் புது மலரிதழில் புக்குத் தேன் நுகர்ந்து உறங்கும் வண்டினத்தின் சிறகை இளக்குவதில் திறமை வாய்ந்த மலயக்காற்று இம்மாலைப் பொழுதில் வந்து வீசாதோ? இப்பாடலில் ச்ச் என்பது ம மிப்பிச்சி, குளிர்ப்பிச்சு, மொழிச்சன்ய ஆகியவற்றிலும் "டி டீ" என்பது கோடீ, சூடின்ற ஆகியவற்றிலும், ளி, ளீ என்பது ப்ருங்காளீ, பக்ஷபாளீ ஆகியவற்றிலும் வந்தன.

### மோனை

அடிதொறும் தலையெழுத்தும் அல்லது சீர்தொறுந் தலையெழுத்தை ஒன்றிவரத் தொடுப்பது மோனை எனப்படும். இதனை மலையாள இலக்கியத்தில் கையாண்டுள்ளனர்.

நல்லோரு மாந்தளிர் நிறம் நவ யௌவனாட்யம்,

நாணித் தளர்ந்து மழறும் நயனபிராமம்,

நானாவிலாசம் ஒரு நாயருடே களத்ரம்

நாராயணாய நம! நல்லுயிர் தீர்க்கும் என்னெ[39]

நல்ல மாந்தளிரின் நிறமுடையவளும், புதிய இளமை நிறைந்தவளும் நாணித் தளர்ந்து கலங்கிய கண்களால் அழகு பெற்றவளும் பல்வகைப் பாவனைகளோடு கூடியவளுமான ஒரு நாயர் குலப்பெண் எனது நல்லுயிரைத் தீர்ப்பாள். நாராயணயநம! இப்பாடலில் முதலடி, மூன்றாமடி, நான்காமடி

ஆகியவற்றில் பொழிப்பு மோனையும் இரண்டாமடியில் ஒரூஉ மோனையும் உள்ளன.

### தொடர் உவமை

தொடர் உவமைகளைப் பயன் கொள்ளும் பான்மை பண்டைய இலக்கியங்களிலும் அதனை ஒட்டியமைந்த மற்ற படைப்புக்களிலும் காணப்படுகின்றது. ஒரு பொருளின் உண்மை நிலையினை எடுத்துரைக்கும் நோக்கம் பண்டைய இலக்கியங்களின் வாயிலாகப் பெறப்படுகின்றது. இவ்வகைப் போக்கு புலவனின் மொழிநடைத் திறத்தினை வெளிப்படுத்துவனவாக அமைகின்றது. இந்நிலையில் மலையாள படைப்புக்களில் தொடர் உவமைகள் பற்றிய உத்தி மேலோங்கி நிற்கின்றது. சங்க இலக்கிய வருணனைப் பகுதியில் இத்தகைய அமைப்பினைக் காணமுடிகின்றது. இஃது பற்றி வரும் பாடலில்,

அறல் போற் கூந்தல் பிறைபோல் திருநுதல்
கொலைவில் புருவத்துக் கொனமுங்கடை மழைக்கண்
இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்
பலவுறு முத்தின் பழிதீர் வெண்பல்
மயிர்குறை கருவி மான்கடை யன்ன
பூங்குழை[40]

என்று அமைந்துள்ளது. பாடினி பாடிய வருணனையுள் இத்தொடர் உவமை அமைந்துள்ளது. போல, புரைய, அன்ன போன்ற உவமை உருபுகள் வந்து நின்று தொடர் உவமையினை உணர்த்துகின்றன. கால வளர்ச்சியின் காரணமாக இவ்வுத்தி பின்வந்த மலையாள இலக்கியத்திலும் இடம்பெற்றுள்ளது.

மேகம், வண்டிண்ட, சந்த்ரக்கல, மதன
தனுர்ப்பாணம் எள்ப்பூ, பாசம்
சாதர்சம், வீண, வெண்முத்து அழகிய பவழம்
பங்கஜம், சங்கு, மால
(பொல்க்கும்பம்) பாம்பு, நீரில் செறுதிர,

**அரயால், பத்ர மாவர்த்த சக்ரம்,**

**தும்பிக்கை, குப்பி, கூர்ம்மம், நளினம், அவயவம்**

**நாரணீ நந்த நாயா**[41]

இப்பாடலில் மேகம் (கூந்தல்), வண்டு (கூந்தல் நெறி), கலைமதி (நெற்றி), மன்மதனது வில் (புருவம்), மன்மதனது அம்பு (கடைக்கண்), எள்ளினது பூ (மூக்கு), சிவனது ஆயுதமாகிய பாசம் (காது), கண்ணாடி (கன்னம்), வீணை (மொழி), வெண்முத்து (பல்), அழகிய பவழம் (இதழ்), தாமரை (முகம்), சங்கு (கழுத்து), மாலை (கை), பொற் கும்பம் (கொங்கை), பாம்பு (வயிற்றிலுள்ள உரோமரேகை), நீரில் சிறு அலை (வயிற்று மடிப்பு), அரையாள் பத்திரம் ஆலிலை (வயிறு), நீர்ச்சுழி (உந்தி), துதிக்கை (துடை), குப்பி (கணைக்கால்), ஆமை (புறவடி), தாமரை (உள்ளடி) போன்ற பல உவமைகள் நாரணியின் மகளை வருணிக்கும் போது சொல்லப்பட்டன.

### அடுக்குத் தொடர்

யாப்பு உத்திகளுள் ஒன்றான இரட்டை யாப்புடன் இது ஒத்துச் செல்லினும் மொழிநடை உத்தி என்ற நிலையில் தனித்து எண்ணத்தகும் பான்மை கொள்கின்றது. இது சங்க இலக்கியங்களில் அதிகம் காணப்படுகின்றன.

**நில்லு நில்லு மதன புரா ஸதே**

**நின்னெ யேது புரவைரி செய்தது?**

**என்னெ யாகில் எளது என்று தோன்றியோ**

**மன்மதா, விரஹம் இல்ல, போயிடு**[42]

என்ற மலையாளப் பாடலில் 'நில்லு நில்லு' என்று ஒரு சொல் மீண்டும் வருவதை குணம் என்று கூறுகின்றனர். இது விரைவு பற்றி வந்த அடுக்குத் தொடராக அமைந்துள்ளது.

தோழா, மன்மதா! நில்நில் பண்டு முப்புரமெரித்தோன் நின்னை என்ன செய்தான்? என்னை எளியவன் என்று எண்ணி வந்தாயோ? எனக்குப் பிரிவுத்துயர் இல்லை போய்விடு என்று கூறுகின்றனர்.

தமிழ்நாடும் கேரளா என அழைக்கப்படும் சேரநாடும் ஒரு காலகட்டத்தில் ஒன்றாகவே இருந்துள்ளது. அப்போது சங்க இலக்கியங்களே அவர்களுக்கும் இலக்கியமாகத் திகழ்ந்துள்ளது. பின்னர் தனி மாநிலமாகப் பிரிக்கும் போது அவர்களுக்கு என்று இலக்கியங்களைப் படைத்துக் கொண்டு, அந்த இலக்கியங்களை அவர்கள் மொழியிலேயே எழுதி வந்துள்ளனர்.

மலையாள மொழியின் தோற்றம், வளர்ச்சி, மலையாளம் தமிழிலிருந்து பிரிந்த நிலை, மலையாள எழுத்தின் வரி வடிவம், இலக்கிய வரலாற்றுக் கட்டங்கள், மலையாளத்திற்கும், தமிழுக்கும் உள்ள உறவுநிலை, மலையாளத்தின் தனித்தன்மைகள், அது முதிர்ந்த நிலையில் என்னென்ன இலக்கியங்கள் தோற்றம் பெற்றன என்பவற்றை அறிய முடிகின்றது.

சங்க இலக்கியக் கூறுகளான உத்திகள், உணர்ச்சிகள், கற்பனை, வடிவங்கள், மொழி நடை போன்றவற்றை மலையாள இலக்கியத்திலும் காணலாம். சங்க இலக்கியத்தின் தாக்கம் மலையாள இலக்கியத்தில் பல இடங்களில் பரந்து கிடக்கின்றன.

தமிழ் இலக்கியத்தை நெறிபடுத்தத் தொல்காப்பியம் இருப்பதைப் போன்று மலையாளத்தில் லீலாதிலகம் என்னும் மணிப்பிரவாள இலக்கண நூல் இருக்கிறது. இந்த இரண்டு நூல்களுக்குள்ளும் பல ஒற்றுமைகள் இருப்பதை அறிய முடிகின்றது.

## குறிப்புகள்

1. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.1.
2. ஞா.தேவநேயப்பாவாணர், திரவிடத்தாய், ப.33.
3. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.10.
4. மேலது., ப.11.
5. மேலது., ப.13.
6. குஞ்சன்பிள்ளை, மலையாள இலக்கியம் (கட்டுரை) ப.220.
7. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.5.
8. மேலது., ப.8.
9. குஞ்சன்பிள்ளை, மலையாள இலக்கியம், (கட்டுரை), ப.222.
10. மேலது., ப.223.
11. இரா.கிருஷ்ணமூர்த்தி, சேர நாட்டில் தமிழ் வட்டெழுத்து (கட்டுரை), ப.22.
12. காண்க: பின்னிணைப்பு, 5.அ.
13. மேலது., 5.ஆ.
14. அகம்., பா.82.
15. மா.இளையபெருமாள், லீலாதிலகம், பா.199.1. (இந்நூலில் இடம் பெற்றுள்ள மேற்கோள் பாடல்கள் எந்த நூலிலிருந்து எடுத்தாளப்பட்டது என்ற குறிப்புகள் காணப் பெறாமையால், இந்நூலில் இடம் பெற்ற எடுத்துக்காட்டு பாடல் எண்கள் ஆய்வுக் குறிப்புகளாக எடுத்தாளப்பட்டுள்ளது.)
16. மேலது., பா.199.2.
17. மேலது., பா.199.
18. மேலது., பா.202.
19. அகம்., பா.289.
20. மா.இளையபெருமாள், லீலாதிலகம், பா.205.
21. மேலது., பா.197.
22. நற்., பா.35.

23. இரா.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.75. (ஆசிரியர் இரா.கோபிநாதன் எடுத்துக்காட்டிய பாடல்கள் இடம் பெற்ற இலக்கியம், அதற்கான எண் போன்றவை இடம் பெறவில்லை. அதனால் அந்நூலில் அப்பாடல்கள் இடம் பெற்ற பக்கங்களே இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது)
24. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள், நூ.46-47.
25. நற்., பா.137.
26. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.37.
27. மேலது., ப.37.
28. மு.வரதராசன், இலக்கியத்திறன், ப.153.
29. குறுந்., பா.188.
30. இரா.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.52.
31. பரி., பா.13.
32. மா.இளையபெருமாள், லீலாதிலகம், பா.134.
33. புறம்., பா.237.
34. மா.இளையபெருமாள், லீலாதிலகம், பா.163.
35. மேலது., பா.162.
36. மேலது., பா.149.
37. மேலது., பா.177.
38. மேலது., பா.122.
39. மேலது., பா.123.
40. பொருந., பா.25-30.
41. மா.இளையபெருமாள், லீலாதிலகம், பா.32.
42. மேலது., பா.93.

# இயல் 4
# தமிழ் – கன்னட மொழி இலக்கியங்கள்

**கன்னட மொழியின் தோற்றமும் பழங்கன்னடம் என்பதன் தனித்தன்மைகளும்**

*பழைமையும் சிறப்பும் வாய்ந்த பாரத இலக்கியங்களில் கன்னட இலக்கியமும் ஒன்றாகும். அது தொடக்கம் முதலே பாரத நாட்டின் செல்வாக்குக்கு ஆளாகி வந்துள்ளது. பாரதம் மற்றும் பிராந்தியக் கூறுபாடுகளின் அழகிய பிணைப்புகள் அதன் வளர்ச்சியில் ஆங்காங்குக் காணப்படுகின்றன.*

*தென்னிந்திய முக்கிய மொழிகளில் கன்னடமும் ஒன்றாகும். கருநாடகப் பகுதியில் வாழும் கன்னட மக்கள் இம்மொழி பேசுகின்றனர். இது எவ்வளவு பழைமையானது என்பதை நிறுவப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால் குறைந்தது இரண்டாயிரம் ஆண்டுகளாக இது பேச்சு வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்பதற்குத் தக்க சான்றுகள் கிடைக்கின்றன.*

> கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் டாலமி என்ற கிரேக்கப் பூகோள அறிஞன் பாதாமி, இண்டி, கலக்கேரி முதலிய சொற்களை வழங்கியுள்ளான். அவற்றுள் சில தூய கன்னடப் பெயர்களாயுள்ளன. நாட்டினைக் குறிக்கும் 'புன்னாட்' என்ற கன்னடச் சொல் அவனிடம் 'பௌன்னாட' என வருகிறது. கி.பி.200இலிருந்து ஹாலராஜனின் 'காதா சப்தசதி' என்ற பிராகிருதப் பாடல் தொகுப்பில் ஆங்காங்கே கன்னடச் சொற்கள் பயின்று வந்துள்ளன. கர்நாட, குந்தல என்னும் நாட்டுப் பெயர்கள் 'மகாபாரதம்', 'பாணினீயம்' என்னும் நூல் காணப்படுகின்றன[1]

*என்ற கருத்து கன்னடத்தின் பழைமையை அறியத் துணை செய்கின்றது.*

'கர்நாட' இது எப்படி வந்தது என்பதற்குப் பற்பல யூகங்கள் தோன்றியுள்ளன. எ-டு. கர்நாடு; கருமண் நாடு; கம்மிது நாடு ; மணம் பொருந்திய நாடு. அது கருநாடு, கர்நாடு (பெரிய நாடு அல்லது உயர்ந்த பிரதேசம்) என்ற கன்னடச் சொல்லின் வடமொழித் திரிபு எனத் தோன்றுகிறது. 'கர்நாடு' என்பது நாளடைவில் 'கன்னட' என்ற வடிவம் பெற்று நாடு, மொழி இரண்டையும் குறிக்கும் சொல்லாகிவிட்டது. மேல்நாட்டினர் நாவில் அது 'கானரீஸ்' என்ற வடிவு பெற்றது.

கன்னடத்தில் எழுத்துப் படைப்புகள் கி.பி. அல்லது கி.மு.வில் தொடங்கியிருக்க வேண்டுமெனச் சில ஆராய்ச்சியாளர்கள் யூகித்துள்ளனர். அசோகன் கால முதல் பிராகிருதம் அல்லது வடமொழிக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கர்நாடகத்தில் காணப்படுகின்றன. கன்னடக் கல்வெட்டுக்கள் மட்டும் கி.பி. 5, 6 ஆம் நூற்றாண்டுகளில் இருந்துள்ளன என்பது விவாதத்துக்கிடமின்றி ஒப்புக் கொள்ளத்தக்கது. இவற்றுள் கி.பி.450 எனத்தக்க 'ஹல்மிடி'க் கல்வெட்டு இன்னும் பழைமையானது என்று கூறுவர். அதனைப் போக்க, கன்னடத்தில் எழுத்து வடிவம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே இருந்துள்ளது என்றும் விளங்கும். கி.பி.6 அல்லது 7 ஆம் நூற்றாண்டுகளின் கன்னடக் கல்வெட்டுக்கள் அதிகமாகக் கிடைக்கின்றன. அவற்றில் இலக்கியப் பண்பு தெளிவாகக் காணப்படுகின்றன.

> கி.பி.5 ஆம் நூற்றாண்டு முதல் கன்னட நூல்கள் வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்பதற்குத் தெளிவான சான்றுகள் உள்ளன. கைக்குக் கிடைத்தவற்றுள் முதல் நூலாகிய 'கவிராஜ மார்க்கம்' கி.பி.9 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. அதற்கும் 400 ஆண்டுகளுக்கு முன்பே கன்னடத்தில் நூல்கள் இயற்றியுள்ளமைக்கு அதிலும் பிற இடத்திலும் சான்றுகள் உள்ளன.[2]

கன்னடம் குறைந்தது இருபது நூற்றாண்டுகளேனும் வழக்கில் இருந்து பல மாறுபாடுகள் அடைந்து வளர்ந்து வந்துள்ள மொழி என்பதையும்,

குறைந்தது 15 நூற்றாண்டுகளாக எழுத்து வடிவும் இலக்கியப் புகழும் படைத்திருந்த மொழி என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். அம்மொழியின் வழக்கில் உள்ள இலக்கியம் குறைந்தது 1000 ஆண்டுகாலப் பழைமையுடையது.

தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளைப் போன்றே கன்னடமும் திராவிட இனத்தைச் சார்ந்த மொழியாகும். இலக்கணம், சொல்லமைப்பு ஆகிய கூறுகளில் இந்நான்கு மொழிகளுக்கிடையே நெருங்கிய தொடர்பு காணப்படுகின்றன. பொதுவான மூலத்தையுடையது. வடமொழியுறவு கொண்டு இவை வேறு வேறாகி வளர்ச்சி பெற்றுள்ளது. அப்படியாயின் இவற்றின் மூலம் யாது? இவற்றுள் மிகப் பழைமையானது தமிழ்மொழியே எனச் சிலர் கூறுகின்றனர். தமிழ் என்பதன் வடமொழி வடிவே 'திராவிடம்' என்ற கருத்தும், ஆனால் தமிழுக்கும் முற்பட்ட பழைமையான சில சொற்களும் வடிவுகளும் கன்னடத்தில் காணப்படுவதற்கான கருத்தும் நிலவுகின்றது.

பேச்சு மொழி மாறுகின்ற அளவுக்கு விரைவாக எழுத்து மொழி மாறுவதில்லை. பழைமையை விரும்பும் பாரத நாட்டில் இது இயற்கை. அவ்வாறே ஒவ்வொரு காலத்திலும் பேச்சு மொழி முந்தியிருக்க, வேறு எந்தப் பெருமை ஏற்பட்டாலும் இலக்கிய மொழி பின் நின்று விடுகிறது. இரண்டுக்கும் நடுவில் இடைவெளி அகலமாகி, பூகம்பம் போன்ற மாறுபாடு நிகழ்ச்சிகளால் அவை மீண்டும் நெருக்கம் அடைகின்றன. உயர்வு நவிற்சிகளை நீக்கி இரண்டையும் ஒன்றுபடுத்தும் நோக்கத்தை ஏற்றுக் கொண்டுள்ள மொழியாகும். வழக்கு மொழியின் சாரத்தைக் கைக்கொண்டு எழுத்து மொழி ஒன்றை முதல் கன்னட நூலார் ஆக்கிக் கொண்டார். வடமொழிச் செல்வாக்குக்கு அவர் ஆளாயினும் கன்னடப் பண்பிலிருந்து மாறிப் போகவில்லை. சில பழங்கவிஞர்கள் பேச்சு மொழியிலிருந்து நெடுந்தொலைவு சென்று வடமொழிச் சொல்லடைவில் சிக்குண்டபோது

வேறு சிலர் அதற்குத் தீவிர எதிர்ப்புக் காட்டிப் பேச்சு மொழியை வலுப்படுத்தினர். அதுவே ஒரு தனிப்பரம்பரையாகிவிட்டது. ஆனாலும் இலக்கண வடிவைப் பொறுத்தவரையில் கன்னடத்தில் வழக்கு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் இடைவெளி சற்று அதிகமாகவே இருந்து வந்துள்ளது.

> கன்னட நாட்டில் ஏறத்தாழ கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு வரையில் தமிழையே கையாண்டிருக்க வேண்டும். அதற்குப் பின் 'பூர்வத ஹளகன்னடம்' என்ற பழைய கன்னடம் உருவானது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு கிரேக்க நாடகத்தில்பழைய கன்னட மொழியிலமைந்துள்ள சில வாக்கியங்கள் தென்பட்டுள்ளன. சமணர்களது செல்வாக்கினால் சமஸ்கிருதம் கன்னட மொழியோடு கலந்துள்ளதை கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் பழைய கன்னடத்தில் அமைந்துள்ள கல்வெட்டுக்களில் காணலாம்.[3]

பொதுவாகக் கன்னட எழுத்து நடையில் பழங்கன்னடம், புதுக்கன்னடம் என்ற இரு நிலைகள் காணப்படுகின்றன. சுமார் கி.பி. 9 முதல் 12 ஆம் நூற்றாண்டு வரைப் பழங்கன்னடம் ஒன்றே வழக்கில் இருந்தது. அதன்பின் 12 ஆம் நூற்றாண்டில் பெருவெள்ளமாகப் புதுக்கன்னடம் வளர்ந்தது. அதனோடு கூடவே பழங்கன்னடமும் 12, 13, 14 ஆம் நூற்றாண்டுகளில் சில நூல்கள் பயின்று வரலாயிற்று. 17, 18 ஆம் நூற்றாண்டுகளில்தான் அது புது வாழ்வு பெற்றது. 19, 20 ஆம் நூற்றாண்டுகளில்தான் புதுக் கன்னடத்துக்குத் தனிச்சிறப்பு வந்தது. எனினும் கன்னட மொழி வரலாற்றைப் பழங்கன்னடக் காலம், புதுக்கன்னடக்காலம் எனப் பிரிப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. சுமார் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரையில் பழங்கன்னடச் செல்வாக்கு மிகுந்திருந்தாலும் அதுவரையுள்ள காலம் பழங்கன்னடக் காலம் எனச் சொல்ல இயலாது. அவ்வாறு கூறின் அதன் பின்னர்ப் பழங்கன்னடம் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை என்றாகிவிடும்.

புதுக்கன்னட வடிவில் பழங்கன்னடக் கூறுகள் பல வகையாகக் கலந்து நிற்கக் காரணம் புதுக்கன்னடம் பழங்கன்னடத்தின் தொடர்பின்றி

இருந்ததுதான் என்பதை உணர்த்துவதற்குத் தக்க வாய்ப்பில்லை. கட்டுப்பாட்டிற்கும், தூய்மைக்கும் பழங்கன்னடம் எனப் பெயர் வாய்ந்தது. புதுக்கன்னடத்தில் காணப்படும் வேற்றுமை வடிவங்கள், விகுதியமைப்புகள் முதலியன பழங்கன்னடத்துக்கே உரியன. அவைகளில் மட்டும் அதன் தனித்தன்மை அடங்கிவிடாது. பழங்கன்னடத்தின் பல வடிவுகள் சிறுசிறு வேறுபாடுகளுடன் இன்று வரையில் புதுக்கன்னடத்தில் இருந்து வருகின்றன. ஆனால் மூலச் சொற்களுடன் அவை நெருங்கிப் பிணைந்துள்ள தன்மை, விகுதியால் படைக்கப்படும் புதிய சொல்லமைப்பு ஆகியவற்றால் புதுக்கன்னடம் பழங்கன்னடத்திலிருந்து வேறுபடுகின்றது. பழங்கன்னடத்தில் பகுதிகளும் சொற்களும் மிகுதியாக மெய்யீறு பெற்றுள்ளன. புதுக்கன்னடத்தில் அவை உயிரீறு பெறுகின்றன. கன்னடத்துக்கேயுரிய இலக்கண விதிகளினால் பழங்கன்னடத்தின் கட்டுப்பாடு அதிகரிக்கிறது. ஒன்றனுள் ஒன்றாய் இணைந்து நிற்கும் தனிச்சொற்கள் ஒரு சொல் நீர்மை பெற்று நிற்கின்றன. புதுக்கன்னடத்திலும் இத்தன்மை நிகழக் கூடாது என்பதில்லை. ஆனால் உயிரீற்றுப் பகுதிகளால், நெருக்கமான பிணைப்புத் தன்மை குறைகிறது. பழங்கன்னடம் புதுக்கன்னடம் இரண்டையும் வேறுபடுத்தும் பிற விதிகளும் உள்ளன.

| | பழங்கன்னடம் | புதுக்கன்னடம் |
|---|---|---|
| 1. | வேற்று நிலை மெய்மயக்கு (இர்தம்) | உடனிலை மெய்மயக்கு (இத்தனு) |
| 2. | மெல்லினம் பெறுதல் (கூந்தல்) | மெல்லினம் நீங்கல் (கூதலு) |
| 3. | பகர ஒலியுடைமை (பால்) | பகரம் ஹகரமாதல் |
| 4. | ழ, ற உடைமை (மழெ, கெறெ) | ழ, ற இழத்தல் (மளெ, கெரெ) |

பழங்கன்னடத்தின் மற்றொரு சிறப்பு யாதெனில் பெயர்ச் சொற்களுடன் வினைவிகுதி சேர்த்து வினைச்சொற்களுக்குப் புதுப்பொருள் படைப்பதாகும். கேசவன் என்ற பெயருடன் 'என்' என்னும் உயர்திணை ஆண்பால் வினை விகுதியைச் சேர்த்தால் 'கேசவனென்' என்றாகி, 'நான் கேசவன் என்பவனாக

இருக்கிறேன்' என்ற பொருள் தோன்றுகிறது. 'பிரிய ரெவு' எனின் 'நாங்கள் பெரியவர்களாக இருக்கிறோம்' என்பது பொருள்.

> திராவிட மொழிகளுக்குரிய சிறப்பெழுத்தாகிய ழகரம் கன்னடத்தில் பொது ளகரமாக மாறிவிட்டது. பல கன்னடப் பதங்களில் ழகரம் நழுவி ஒழிந்தது. கொழுப்பு என்பது கொப்பு என்றும், கழுத்து என்பது கத்து என்றும் வழங்கப்பெறுகின்றது. குஷ்ட நோயைத் தமிழில் பெருநோய் என்று பொதுமக்கள் கூறுவர். அந்நோய் இலக்கியங்களில் தொழுநோய் என வழங்கப்படுகிறது.[4]

புலி என்னும் சொல் பழங்கன்னடத்தில் உண்டு. அது, புதுக்கன்னடத்தில் ஹுலி ஆயிற்று. வேங்கைப் புலியைத் தமிழில் பெரும்புலி என்பர். அதற்கு நேரான கன்னடப் பதம் பெப்புலி என்பது. ஆந்திர தேசத்திலுள்ள 'பொப்புலி' என்ற ஊர்ப்பெயரின் பொருள் பொப்புலி என்பதேயாகும். தெலுங்கிலும் கன்னடத்திலும் பல சொற்கள் இவ்வாறு தேய்ந்து வழங்கக் காண்கின்றோம். கன்னடத்தில் பருப்பு 'ப்ப்பு' என்றும், மருந்து 'மத்து' என்றும் எருமை 'எம்மெ' என்றும் பருத்தி என்பது 'பத்தி' என்றும் வழங்குகின்றன.

இவ்வாறு கன்னடம் ஆதிப் பழங்கன்னடம், பழங்கன்னடம், நடுக்கன்னடம், புதுக்கன்னடம் என்ற நான்கு நிலைகளில் கன்னட மொழி இலக்கியங்களைப் பகுத்துப் பார்க்கும் தன்மையையும் சில அறிஞர்கள் கொண்டுள்ளனர்.

### பழங்கன்னடத்திற்கும் தமிழுக்கும் உள்ள உறவு

தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளைப் போன்றே கன்னடமும் திராவிட இனத்தைச் சார்ந்த மொழியாகும். இலக்கணம், சொல்லமைப்பு ஆகியவற்றின் முக்கிய அம்சங்களில் இந்நான்கு மொழிகளும் நெருங்கிய தொடர்பு காட்டுகின்றன. பொதுவான மூலத்தையுடையன. தமிழுக்கும் முற்பட்ட பழைமையான சில சொற்களும் வடிவுகளும்

*கன்னடத்தில் காணப்படுகின்றன. மூலத்திராவிடம் என்ற பேச்சுமொழி ஒன்று இருந்ததென்றும், அதிலிருந்து தமிழ், கன்னடம் முதலிய மொழிகள் தோன்றி தத்தம் அளவில் வடமொழிச் செல்வாக்குக்குட்பட்டு வளர்ந்தன என்றும் கூறப்படும் கருத்து சிந்தனைக்குரியது.*

> கன்னடம் தமிழுக்கு மிக நெருங்கிய மொழி புதுக்கன்னடத்திலிருந்து பழங்கன்னடத்துக்குப் போனால், தமிழின் இந்நெருங்கிய தொடர்பு தெரிய வருகிறது. கன்னடத்துக்கும் தெலுங்கிற்கும் இத்துணை நெருங்கிய தொடர்பு இல்லை. ஒரே மூலத்திலிருந்து தோன்றிய மொழிகளுக்குள்ளும் தொடர்புகள் ஏற்றத்தாழ்வாக இருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் முக்கியமானது போக்குவரவின் ஏற்றத் தாழ்வாகும். போக்குவரவு ஏற்றத்தாழ்வுக்கேற்பத் தொடர்பிலும் ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது. கால, தேச, தட்பவெப்ப நிலைமையும் இத்தொடர்பின் ஏற்றத்தாழ்வுக்குக் காரணம் ஆகிறது. ஒரு குடும்பத்தில் ஒருவர் முதலில் வெளிநாடு சென்று தனியாகஇருந்தால் அவருக்கு மற்றவருடன் தொடர்பு அந்த அளவுக்குக் குறைகிறது. முதலில் தனியானது தெலுங்கு மொழி என்றும், அதன்பின் அதன்பின் தமிழும் கன்னடமும் பிரிந்தன என்றும் அதன்பின்னர் தமிழிலிருந்து மலையாளம் பிரிந்தது என்றும் கூறலாம்.[5]

*சரித்திர காலத்தில் கன்னடம் எவ்வாறு மாறுபட்டு வளர்ந்து வந்தது என்பதைக் கல்வெட்டுக்கள், நூல்கள் முதலிய பல சான்றுகளால் அறிந்து கொள்கின்றோம். இச்சான்றுகள் யாவும் எழுத்து மொழிக்குரியன. இதில் அவ்வக் காலங்களின் வடிவங்கள் ஓரளவு கிடைப்பினும் அக்கால மொழியின் திட்டவட்டமான அறிவைப் பெறமுடியாது.*

*தமிழ்ச் சொற்களின் முதலில் உள்ள வகரம் பகரமாக மாறியிருத்தலைப் பல கன்னடப் பதங்களிற் காணலாம். வடுகர் என்பது படகர் என்றாயிற்று. வீடு என்பது பீடு. வீதி என்பது பீதி. வில் என்பது பில்லு. இத்தகைய மாற்றங்களை*

உணர்ந்து கொண்டால் தமிழுக்கும் கன்னடத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பு நன்கு விளங்கும்.

**சங்க இலக்கியத்தில் கன்னட நாட்டின் தொடர்பு**

மலையாளத்திற்கு அடுத்துத் தமிழோடு தொடர்புள்ளது கன்னடம். கன்னடம் என்பது கருநடம் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. இது முதலாவது கன்னட நாட்டைக் குறித்துப் பின்பு அங்கு வழங்கும் மொழியைக் குறித்தது. இதன் பழைய வடிவங்கள் கருநாடு, கருநாடகம் என்பன கன்னட நாட்டார் கருநாடர் என்றும் கருநடர் என்றும் அழைக்கப்பட்டனர்.

கருநடம் அல்லது கருநாடகம் என்னும் சொல்லுக்கு இரு பொருள் கூறப்படுகின்றன. 1. கரிய நாடு 2. கருங் கூத்து என்பன.

கன்னட நாட்டின் பெரும்பகுதி கரிசல் நிலமாயிருப்பதால், கரிய நாடு என்று பொருள் கொண்டனர். கூத்துக்களில் இழிந்த வகைக்குக் கருங்கூத்து என்று பெயர்.

> முதுபார்ப்பான் வீழ்க்கைப் பெருங் கருங்கூத்து[6]
>
> நடம் = கூத்து, நடன் = கூத்தன்
>
> வளிநடன் மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க[7]
>
> நடர் = கூத்தர்.

நாடகம் = கதை தழுவி வரும் கூத்து. மிகப் பழைமையான அநாகரிக அல்லது கண்மூடிப் பழக்கத்தைப் 'பழைய கருநாடகம்' என்பர்; இங்கு 'கருநாடகம் என்பது பழைமையான அநாகரிகத்தைக் குறிக்கலாம். ஆகவே கருநடம் (அ) கருநாடகம் என்னும் பெயர் கருங்கூத்து நிகழும் நாடு என்னும் பொருள் கொண்டதாகயிருக்கலாம்.இன்றும் 'யக்ஷகணம்' என்னுங் கருங்கூத்து கன்னட நாட்டில் நடிக்கப்பட்டு வருவதாகக் கூறப்படுகின்றது.

ஆயினும் கருநடரைக் கருநாடர் என்னும் வழக்கு உண்மையானும், கூத்தாகிய காரணத்தினும் நிலவகையாகிய காரணப் பெயர்ப் பேற்றிற்குச் சிறத்தலானும், கரிசற்பாங்கான நாடு என்று பொருள் கொள்வதே பொருத்தமாம். கரைநாடு என்பது கருநாடு என மருவிற்றென்பர் சிலர்.

கன்னட நாட்டிற் சிறந்த பகுதி மைசூர்ச் சீமையாகும். மைசூரில் தற்போது ஹலெபீடு என வழங்கும் துவரை நகர் (தூவார சமுத்திரம்) கி.மு.2000 ஆண்டுகளுக்கு முன்னர் செந்தமிழ் நாட்டை சேர்ந்ததாயிருந்தது. இது துவராபதி எனவும் வழங்கும். பண்டைச் சேர நாட்டில் மைசூர்ச் சீமையின் தென் பகுதியும் சேர்ந்திருந்தது.

மைசூர்ச் சீமையிலுள்ள பல ஊர்கள் இன்றும் தமிழ்ச் சொற்களையே தம் பெயரிறாகக் கொண்டுள்ளது.

அதிக திறமையுள்ள இருபாலரையும் வல்லாள கண்டன் வல்லாள கண்டி எனப் புகழ்வது இன்றும் தமிழ்நாட்டின் வழக்காக உள்ளது.

> மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கும் அரபிக் கடலுக்குக் கிழக்கும் கூர்ச்சரத்திற்குத் தெற்கும் கோவாவுக்கு வடக்குமாக உள்ள கொங்கண தேசம் பண்டைக்காலத்தில் கொடுந்தமிழ் நாடுகளும் ஒன்றாக இருந்துள்ளது என இலக்கண நூல்கள் கூறுகிறது.[8]

சேர நாடு கடைக்கழகக் காலத்திலேயே குடகு மலைக்கு மேற்குப்பகுதி வேறும் கிழக்குப் பகுதி வேறுமாகப் பிரிந்து போயிற்று. கிழக்குப் பகுதியில் உள்ள நாடு மீண்டும் தெற்கில் உள்ள கொங்கு நாடும் வடக்கில் உள்ள சங்க நாடும் இடையில் உள்ள அதிகை நாடு தகடூரை தலைநகராகக் கொண்டு அதியமான் மரபினர் ஆண்டு வந்தனர். கங்கநாடு வடக்கில் கங்க மரபினர் குவளாலபுரத்தை தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர். இது கங்கபாடி என்று கல்வெட்டு கூறுகிறது. இதனையே,

நன்ன னேற்றை நறும் பூ ணத்தி

துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி[9]

என்று கூறுகிறது.

கடைக்கழகக் காலத்தில் மைசூர்த் துவரை நகரை ஆண்டவன் இருங்கோவேள் என்னும் தமிழ்ச் சிற்றரசன். அவன் வடபக்கத்தில் ஒரு முனிவரின் ஓம குண்டத்தில் தோன்றித் துவரை நகரை நாற்பத்தொன்பது தலைமுறையாகத் தொன்றுதொட்டு ஆண்டு வந்த வேளிர்களுள் ஒருவன் என்றும், ஒரு முனிவர் தவஞ் செய்து கொண்டிருக்கையில் அவருக்கு இடையூறு செய்ய வந்த ஒரு புலியை அவர் ஏவற்படி கொன்றமையால் புலிகடிமால் எனப்பட்டனென்றும் கூறப்படுகிறது.

நீயும், வடபான் முனிவன் தடவினுட் டோன்றிச்

செம்பு புனைந்தியற்றிய சேணெடும் புரிசை

உவரா வீகைத் துவரை யாண்டு

நாற்பத் தொன்பது வழிமுறை வந்த

வேளிருள் வேளே விறற்போ ரண்ணல

தாரணி யானைச் சேட்டிருங் கோவே

ஆண்ட னுடைமையிற் பாண்கட னாற்றிய

ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்[10]

என்று கபிலர் பாடுகிறார்.

இப்பாட்டின் அடிக்குறிப்பில், தபங்கரென்னும் முனிவர் ஒரு காட்டில் தவஞ்செய்கையில் ஒரு புலி அவர்மேற் பாய்தற்கு நெருங்க, அதுகண்ட அம்முனிவர் அங்கு வேட்டையாடி வந்த சளனென்னும் யாதவ அரசனை நோக்கி 'ஹொய் ஸள' என்று கூற, அவன் அப்புலியைத் தன் அம்பால் எய்து கடிந்தமையால் ஹொய் ஸள னென்றும் புலிகடிமாலென்றும் வழங்கப்பட்டானென்று சிலர் கூறுவர். சசகபுரத்தையடுத்த காட்டிலுள்ள தன்குல தேவதையான வாஸந்திகா தேவியைச் சளனென்னும் அரசன் வணங்கச் சென்ற போது புலியால் தடுக்கப்பட்டு வருந்துகையில், அக்கோயிலிலிருந்து

பெரியவர் அவனை நோக்கி 'ஹொாஸ் ஸள' என்று கூறி ஓர் இரும்புத் தடியை அருள, அவன் அது கொண்டு அதனைக் கொன்றமை பற்றி, 'ஹொய் ஸளன்' என்றும் 'புலிகடிமால்' என்றும் பெயர் பெற்றனனென்று வேறு சிலர் கூறுவர்.

புலிகடிமால் என்பது 'ஹொய்சன்' மன்னர் மரபினைக் குறிக்கிறது என்று ஆராய்ச்சியாளர் கூறுவதால் கன்னட நாட்டின் தொடர்பு சங்க இலக்கியத்திலே புறநானூற்றிலேயே காணக் கிடைக்கிறது. அது இப்போது மஹிஷபுரம் ஆகிய மைசூரினைப் பற்றி தமிழ் இலக்கியம் கூறுகிறது. எருமை நாட்டினைப் பற்றிய குறிப்பு அகநானூற்றில்,

நேரா வன்றோள் வடுகர் பெருமகன்
பேரிசை யெருமை நன்னாட் டுள்ளதை[11]

என்று கூறுகிறது.

நள்ளாதார் மிடல் சாய்த்த
வல்லாள நின் மகிழிருக்கையே[12]

எனத் தேர்வண் மலையனும்

விசைத்தெறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் லன்ன வல்லா ளன்னே[13]

எனப் பாட்டாங்கொற்றனும்

அடி பொலியக் கழறை இய
வல்லாளனை வயவேந்தே[14]

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனும் பாடப்பட்டனர். இதன் மூலம் சங்க இலக்கியத்தில் கன்னடத்தின் தொடர்பு பற்றி அறிந்து கொள்ளமுடிகிறது.

**தொன்மம்**

தொன்மம் என்பது உரையொடு, பொருந்தி பழைமைத்தாகிய பொருண்மேல் வருவதாகும். தொன்மம் இலக்கியத்திற்கு ஆதியாய் அமைகின்றது. இது பற்றித் தொல்காப்பியம்,

தொன்மை தானே சொல்லுங் காலை

உரையொடு புணர்ந்த பழமை மேற்றே[15]

என்று இத்தொன்மம் பற்றிய இலக்கணம் சுட்டியுள்ளது. இந்நூற்பாவிற்கு விளக்கம் தரும் இளம்பூரணர், இராம சரிதமும் பாண்டவ சரிதமும் முதலாகியவற்றின் மேல் வரும் செய்யுள் என்று கூறியுள்ளார். இவ்வகையில் தொன்ம உத்தி இலக்கியத்தில் முக்கிய இடம் பெறுகிறது என்பதை உணரமுடிகின்றது. இந்நோக்கம் நிறைவேறும் வகையில்,

நனந்தலை உலகம் வளைஇ, நேமியொடு

வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை

நீர்செல நிமிர்ந்த மாஅல் போல

பாடு இமிழ் பனிக்கடல் பருகி வலன்ஏர்பு

கோடு கொண்டு எழுந்த கொடுஞ் செலவு எழிலி[16]

என்று முல்லைப்பாட்டு செப்புகின்றது. இப்பாடலில் முல்லை நிலம் மற்றும் கருத்தும் திருமாலின் தோற்றமும் சொல்லப்பட்டுள்ளன.

### கன்னட இலக்கியத்திலும் தொன்மம்

நினேயா திரன்னா பாரத தொலின் பெரராரு ரோந்தே சித்ததின்

நினை ஓடை கண்ணனும் நினையே கண்ணனோல்லார் துரை

கண்ணேருக்

கண்ணகரு நன்னி கர்ணநலா வசம்சதா கர்ணனா ஜாததெமந்து

கர்ணனா படே மாத்தினோல் புதிது கர்ண இரசாயணப் மல்தே

பாரதம்[17]

பம்பன் வேறு யாரையும் நினைக்காதீர்கள் அவனுக்கு நிகர் வேறு யாருமில்லை, கர்ணன் என்றால் தான தர்மங்கள் செய்பவன். எப்போதும் உண்மையையே பேசுபவன், கர்ணன் என்ற பெயரைச் சொன்னாலே உங்கள் குறைகள் அகலும் என்று உதவி செய்பவர்களுக்கு உதாரணமாக மகாபாரத கர்ணனை எடுத்துக்காட்டியுள்ளார்.

**அழுகை**

*மிகுந்த துன்பத்தினால் அழுகை தோன்றும். சங்க இலக்கியத்தில் பாரிமன்னன் இறந்தமையால் புலவர் கபிலர் உற்ற துயரத்தினை அழுகையுடன் வெளிப்படுத்தியுள்ளதைப் போல கன்னட இலக்கியத்தில் உள்ள இப்பாடலுடன் ஒப்பிடலாம்.*

**எவனோ எவனோ மகனே மகனே**
**சாவேகாய்த்தலே சென்னிசனே**
**இருதயலா என்னனோ குகுமாற**
**குரொதியல குரலனு ஜிதமாரா**
**வனிதேயா நாரடி ஒன்டைய மதியே**
**எனகி பரியலி மடிவு தவதியே**
**சிறதலி சிவலக்கிதவதி பறியே**[18]

*அரிச்சந்திர காவியத்தில் சந்திரமதி தன்னுடைய மகனைக் காட்டிற்கு தெர்ப்பைப் புல் அறுக்கப் போகச் சொன்னாள். அவன் புல் அறுக்கும்போது நாகப்பாம்பு கடித்து இறந்து விடுகிறான். அவனுடன் சென்ற அனைவரும் வந்து விட்டனர். ஆனால் தன்னுடைய மகன் லோகிதாசன் வரவில்லை என்றவுடன் என்னுடைய ஆசை மகன் இன்னும் வரவில்லையே, அவன் ஒன்றும் அறியா பாலகன் என்னுடைய நெஞ்சிலேயே பொத்திப் பொத்தி வளர்த்த மகன் இன்னும் வரவில்லையே. அவனைப் பாம்பு கடித்து இறந்து விட்ட செய்தியை மற்றவர்கள் கூற அவள் கீழே விழுந்து மார்பில் அடித்துக் கொண்டு அழுது புலம்புகின்றாள்.*

**மருட்கை**

*வியப்புடைய எல்லாம் மருட்கை என்னும் உணர்ச்சிக் குறிப்பை உணர்த்தும். இவ்வகை உணர்ச்சியைக் கன்னட இலக்கியத்தில் காணலாம்.*

**கேளிரே கங்கப்பட்டனே எதிஷ்ட்டரன் ஆ வளலம் ருக்கோதரம்**
**பாலையரம் தல் ஆடிப்பா புகுந்தலே பல்குனன் அங்கத அஸ்வ**
**கோபாலரெம்பர் நக்குடனும் சகாதேவனும் ஆதர் எம்மகி**
**பாலரொலாத கார்கெகதிகள் பகையெர்கே பவுபிரகாரமோ**[19]

கேட்டிங்களா அந்த கங்கப்பட்டா இருக்காங்களே அவன்தான் யுதிஷ்டரன். அதோ அங்கு சமைப்பவர்தான் பீமன். அதோ அந்த நடன அரசாங்கத்தில் பெண்களுக்கு நடனம் சொல்லிக் கொடுக்கிறான்னல்ல புரகன் அவன்தான் அர்ஜுனன். அதோ குதிரையை மேய்ப்பவன் தான் சகாதேவன் இவர்களுக்கு என்ன வேலையோ! எந்த யோசனையோ! எந்தெந்த கதையோ! என்று மற்றவர் காட்டுகின்றனர் பார்வையாளர்கள் அனைவரும் இவர்களை வியப்புடன் பார்க்கின்றனர்.

**அச்சம்**

அணங்கு, விலங்கு, கள்வர், இறை என்னும் நான்கும் அச்சத்தின் நிலைக்களன்கள் என்றார் தொல்காப்பியர். இவ்வகையில் கன்னட இலக்கியத்தில்,

அ ரவவம் நிர்ஜித்தா க
ஊரவரவவம் நிர்ஸ்த கணரவ வம் கோ
பாருனனேத்ரம் கேள்தா
நீர்ரொலத்தும் பெமர்தா நுரகபத்தாகம்[20]

என்பதை அச்ச உணர்வு வெளிப்படுவதற்குச் சான்றாகக் கூறலாம்.

மகாபாரதத்தில் பீமனுக்குப் பயந்து கொண்டு சிங்கம் மாதிரி இருந்த துரியோதனன் குளத்தில் தண்ணீரில் மூழ்கி இருக்கும் போது பீமன் பேசிய வார்த்தைகளைக் கேட்டு பாம்பு கொடியையே வைத்திருந்த துரியோதனுக்கே தண்ணீரில் இருக்கும் போது வேர்த்து இருந்ததாம் இது பயம் காரணமாக ஏற்பட்ட உணர்ச்சியாகும்.

**இயைபுக் கற்பனை**

நேரில் பார்த்த காட்சியையும் இதனை ஒட்டி உள்ளத்தில் தோன்றும் உள்ள உணர்வுகளையும் பொருத்திக் கற்பனை தோன்றப் பாடுவது இயைபுக் கற்பனை எனப்படும். நடப்பியல் பாங்கிலும் எதிர்காலம் பற்றிய கவிஞனின்

எண்ணங்களிலும் இது போன்ற கற்பனை அமைவு மிகுதியாகக் காணப்படுகிறது. சங்க இலக்கியங்களில் சமுதாயம் பற்றிய செய்திகள் அதிகம் காணப்பட்டாலும் பிற்காலத்தில் முழுமையாகச் சமுதாயம் குறித்தே இலக்கியப் படைப்புக்கள் அமைந்துள்ளன.

கழனியில் வேலை செய்யும் தொழிலாளர்கள், மீன் பிடித்து வாழ்வோரும் குடிசைகள் அமைத்து வாழ்ந்து வந்தனர் என்பதை,

குவிந்த குரம்பை அங்குடிச் சிறூர்ப்
படுமணி யியம்பப் பகலியைந்து உமணர்[21]
சிறுகுடிப் பரதவர்[22]

என்ற அகநானூற்றுப் பாடல்களின் வழி அறிய முடிகின்றது. நெய்தல் நிலத்து வாழும் மக்கள் குடிசைகளில் வாழ்ந்தனர் என்னும் இக்குறிப்பு இவர்களது ஏழ்மையான வாழ்க்கையைக் காட்டுகின்றது. கன்னட இலக்கியத்தில்,

புதிது புதிது கவிதெடிதா தமோது
டபிர்வண மொர்மதிலெர்தா கலி வெயா
கதிர் கலலோலே சுருக்கி மூடிதா
நுதையர்த்திரி யார் லோரும் ரன ரொன்னா[23]

தினந்தோறும் அந்த சூரியன் நிலத்திலிருந்து முளைக்கும் பயிர்போல கதிரவன் மெல்ல மெல்ல உதயமானான். அந்த வெளிச்சம் இருள் மறைவிலிருந்து வெளிப்பட்ட மாதிரி மனிதர்கள் தங்கள் வாழ்க்கையில் இருக்கும் மூடப்பழக்க வழக்கங்களிலிருந்து வெளியே வரவேண்டும் என்று கூறுகின்றார். இதைப் போன்று சங்க இலக்கியப் பாடலொன்றில்

சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்
மடத்தகை ஆயம் கை தொழுதா அங்கு
உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல்
தாமரைக்கு இறைஞ்சும் தண்துறை[24]

அரண்மனையில் அரசிக்குக் கோபம் வந்தது. இளநங்கையராக இருந்த அவருடைய தோழிமார் வணங்கிக் கை கூப்பி நின்றார்கள். இந்தக் காட்சியைக் கண்ட புலவர் இதை மறக்கவில்லை. சில வாரம் கழிந்த பிறகு

ஒரு தாமரைப் பூ ஒன்று நடுவே மலர்ந்து விளங்க அதைச் சூழ்ந்து ஆம்பல் மலர்கள் குவிந்து கிடந்தன. காற்று வீசிய காரணத்தால் அவை அசைந்து தளர்ந்தன. புலவர் உள்ளத்திற்குக் குவிந்த ஆம்பல்களின் வாட்டமும் மலர்ந்த தாமரையின் பெருமிதமும் அரண்மனைக் காட்சியை நினைவூட்டின. ஆம்பல்கள் கை குவித்துத் தொழும் இளந்தோழிமார் போல் குவிந்து வாட அவற்றால் சூழப்பட்டு நிற்கும் தாமரை மலர் அரசி போல் விளங்குவதாக நினைத்தார்.

அரண்மனையில் அவர் கண்ட காட்சி ஒரு வகை உணர்ச்சியை விளைவித்தது. ஆம்பல் சூழ்ந்த தாமரையும் அதே உணர்ச்சியை விளைவித்தது. ஆகவே அது போன்றது இது என்று இரண்டையும் இயைபுபடுத்திக் கூறினார். இவ்வாறு உணர்ச்சி ஒற்றுமையால் இயைந்து அமைக்கப்படும் கற்பனை இயைபுக் கற்பனை எனப்படும்.

எழுத்து (உயிர்மெய் (அ) மெய்) ஒன்றி வருதலே எதுகை எனப்படும் (உலகெலாம் - நிலவுலாவிய) இரண்டாம் எழுத்து ஒன்றி வராமல் அதன் இனம் முதலியவை ஒன்றி வருதல் கடையாகு எதுகை (தக்கார்-எச்சத்தால்) என்றும் இரண்டாம் எழுத்து முழுவதும் ஒன்றி வருதல் (அகர பகவன்) இடையாகு எதுகை என்றும் இரண்டாம் எழுத்தும் அடுத்த எழுத்துக்களும் ஒன்றி வருதல் (அறவாழி - பிறவாழி) தலையாகு எதுகை என்றும் வேறுபடுத்துவர். கன்னட இலக்கியத்தில்,

கட்டுகே கட்டதிர்க்கே கடலம் கபிசந்ததி வாமனக்கவம்
முட்டுகே முட்டதிர்கே நவமம் அரணம் நரனொத்தி கண்டலம்
முட்டுகே முட்டதிர்கே கவிகள் குருதிபந்தலொலித்தி கட்டினார்
முட்டதர்க்கே மெட்டிதர்ரி தேன்னக்கலமோ கவிந்தரரர்[25]

இப்பாடலின் ஒவ்வொரு அடியின் இரண்டாம் எழுத்து ஒன்றி வருவதால் இதனை எதுகை என்று கூறலாம். காவியங்களிலும், கம்பராமாயணத்திலும் வாரனங்கள் பாலங்களைக் கட்டியதோ இல்லையோ வாமன அவதாரத்தில்

வாமனர்கள் வானத்தையும் பூமியையும் அளந்தார்களோ இல்லையோ அப்படிப்பட்ட அற்புதங்கள் நடந்ததோ இல்லையோ என்பது முக்கியம் அல்ல. ஆனால் இந்த கவிஞர் அப்படிப்பட்ட அற்புதங்களை (கற்பனைகளை) காப்பியங்களில் செய்தார் என்பதே உண்மை என்று கூறலாம்.

**எதுகை**

ஒலி நயம் வேறு; எதுகை மோனை முதலியன வேறு. உணர்ச்சி மிகும் போதெல்லாம், அதற்கேற்றவாறு ஒலிநயம் அமையும். அது தானாகவே வந்தமையும், எதுகை மோனை முதலியன தாமே வந்தமைதல் குறைவு. இயற்றுவோர் விரும்பி அமைத்தலே மிகுதி.

ஆயினும், பாட்டில் எதுகை நன்கு அமைதலால் ஒலிநயம் சிறந்து விளங்கும் என்பர். வந்த ஒலியமைப்பே திரும்பத் திரும்ப வருதல் ஒலிநயம். குறிப்பிட்ட இடத்தில் வந்த ஒலியே திரும்பத் திரும்ப வருதல் எதுகையாகும். அது குறிப்பிட்ட இடத்தில் அடியின் முதலிலோ, இறுதியிலோ வந்தமையும் போது, ஒலிநயத்தின் வாய்ப்பாடு தொடங்கும் இடம் அல்லது முடியும் இடம் என்று அறிவிப்பதாக உதவுவதால் ஒலிநயம் சிறந்து விளங்கும் என்று கருதுவர். சங்க இலக்கியப் பாடலொன்றில்

உறைபதி அன்றித் துறைகெழு சிறுகுடி
கானலஞ் சேர்ப்பன் கொடுமை எற்றி
ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்
துஞ்சா துறைநரொ டுசாவாத்
துயில்கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே[26]

இவ்வாறு ஒரே அடியில் முதல் சீர்க்கும் மூன்றாம் சீர்க்குமாக (உறைதுறை), அல்லது முதல் சீர்க்கும் நான்காம் சீர்க்குமாக (ஆனாபானாள்) எதுகை அமைதலும் உண்டு. அவை பொழிப்பெதுகை, ஒரூஉ எதுகை எனப்படும்.

**மோனை**

*முதலெழுத்து ஒன்றி வருவதாகிய மோனையைப் பொறுத்த வரையில் மேற்சொன்னகருத்து முற்றிலும் பொருந்துவதாக உள்ளது. மோனை ஆங்கிலப் பாட்டுக்களில் பலவற்றில் இல்லை. தமிழிலோ மோனை இல்லாப் பாட்டே இல்லை எனலாம். ஆங்கிலத்தின் எதுகை இல்லாப் பாட்டுக்கு ஒரு வகையில் நிகரானதாக உள்ள தமிழ் அகவலிலும் மோனை இல்லாமல் பாட்டு இயற்றப்பட்டதில்லை.*

நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன்றால் முறையே[27]

*என்னும் பெருந்தேவனாரின் பாட்டில் முதலிரண்டு அடிகளில் எதுகை மட்டும் அமைந்து மோனை இல்லாமல் இருக்க, மூன்றாம் அடியில் அந்தக் குறையைப் போக்கும் வகையில் மூன்று சீர்களில் மோனை அமைந்துவிட்டது.*

மோனை செய்யுளுக்கு இரண்டாம் தரமானது என்றும் எதிர்பாராமல் வந்து சேர்ந்திடும் கவர்ச்சியே தவிர இன்றியமையாதது அன்று என்றும், வேண்டும் அன்றே முயன்று அமைக்கும் மோனை செயற்கையானதாக வெறுப்புத் தரக் கூடும் என்றும், தானாகவே அமைந்து வெளிப்படையாகத் தெரியாமல் வரும் மோனை ஒரு வகையில் அழகு தருகிறது என்றும் வின்செஸ்டர் கூறுகிறார்.[28]

*கன்னட இலக்கியத்தில் பெரும்பாலான பாட்டுக்களில் மோனை அமைவது இல்லை. காரணம் அவர்கள் அதனை அதிகம் விரும்புவது இல்லை என்றே கூறலாம். இருந்தாலும் ஒரு சில பாடல்களில் மோனை இடம்பெறுகிறது.*

*கன்னட இலக்கியத்தில்,*

வெதிரினால் தண்டிகையாம், வெதிரிலே குடையாம்
வெதிரினால் கோவில் குடிசையாம்

வெதிரினா லனைத்துச் செல்வமுமாம்

வெதிரதவரை நயவான் கூடலசங்கம தேவன்[29]

இப்பாடலில் முதலடியில் முதலெழுத்து ஒன்றி வருவதால் மோனை பயன்படுத்தப்பட்டுள்ளது.

சிவனை முழுமையாக நம்பி, ஏற்றுக் கொண்டு, சிவ நெறியிலே நிலைத்திருப்பவர்களைக் கண்டால், முற்றிய நெல் வணங்கிய நிலையிலிருப்பதைப் போல், அத்தகைய பணிவுடன் அவர்களுக்குத் தலைவணங்குவதாகக் கூறுகிறார். அவ்விதமின்றி, எல்லோரையும் விட தாங்களே உயர்ந்தவர்கள் எனச் செருக்குற்று, சிவனடியார்களைக் கண்டு தலைவணங்காது விறைத்துக் கொண்டு சென்றால், அவர்களின் நிலை, சூலத்தின் மீது வைப்பதற்குத் தக்க, தகுதியான தலைகள் என்று கூறுகிறார்.

எந்த நிலையிலிருந்தாலும், எந்தப் பதவியில் இருந்தாலும் யாராக இருந்தாலும் பணிவு என்பது இருக்க வேண்டும். அத்தகைய பணிவு பல விதங்களிலும் நன்மையைச் செய்யும்.

உவமை அணி

கன்னட இலக்கியத்தில் உவமைகள் அதிகம் பயன்படுத்தப்பட்டு உள்ளன.

இனனொடே நவில்லாடே விறகிகளுகூடே பூ
ஜன ஆடே துர்ளமுடே அம்சகளு பாடே கட
வினகூவடு திடே சாகதே னோடே கணநாடே தேரகம்பு சீடே சிடிலு
தனிமாடே தரேக்கொடோ பெளேகளம் சூடே னெனே
எனோ நதிகள் ஈடாடே பர்பா கார்காலவூ
வியென மளத்தூ தனித்தோரே மொளகளம் ஏரி த்தோரித்து
துர்த்தினவனம்[30]

என்பதைச் சான்றாகச் சுட்டலாம்.

வசந்த காலத்தில் மரங்கள் அனைத்தும் பழைய இலைகளை உதிர்த்துவிட்டு புதிய கொழுந்து இலைகளைப் பெற்று மிகவும் பசுமையாக இருப்பதைப் போல மயில்கள் தோகையை விரித்து ஆடுகின்றன. வாத்துக்கள் நீர் நிலைகளில் துள்ளித் திரிகின்றன. பிரிந்த காதலர்கள் ஒன்று சேருகின்றனர். நதிகளில் நீர் நிரம்பி வழிகின்றன. வயல் வெளிகளில் புற்கள் பச்சையாகக் காட்சியளிக்கின்றன. இக்காலத்தில் ஊரில் உள்ள அனைவரும் வசந்த காலத்தில் பசுமையாக இருக்கும் மரத்தைப் போல இவர்களின் வாழ்வும் செம்மையாக விளங்கியதாம். இப்பாடல் சங்க இலக்கியத்தில் தலைவி தலைவனை விட்டுப் பிரிந்து இருக்கும்போது தலைவன் கார்காலத்தில் திரும்பி வருகிறேன் என்றான். ஆனால் இன்னும் வரவில்லை, முல்லை அரும்புகள் பூத்திருப்பது கார்காலம் வந்துவிட்டதை அறிவிப்பது போல வசந்த காலத்தின் வரவை மேலே உள்ள பாடல் அறிவிக்கிறது.

**உருவகம்**

சங்க இலக்கியங்களில் உருவகம் காணப்படுவது போலவே கன்னட இலக்கியத்திலும் உருவகம் அதிக அளவில் காணப்படுகிறது.

பிசிலிகம் / காலிகம்
நசுபாடே / தனுலெத்தே
குசுமக்கொ / மளவசதா / உவினந்தே
குசுமகரனொடனே ரதி
யோசேது பர்பந்தே ரம்
ஜிசி ராமனுடனே ஜானகி நடை தலு[31]

சீதையைப் பூவுக்கு இணையாக இவ்வாசிரியர் உருவகப்படுத்துகின்றார். பூக்கள் வெய்யில், காற்றால் வாடுவது போல் பூ மாதிரி இருந்த சீதை இராமனுடன் காட்டிற்குச் செல்லும்போது ஒரு மரத்திற்குக் கீழே உள்ள செடி மரத்தில் வளைந்து நெலிந்து உயரே ஏறுவது போல சீதை இராமனுடைய இன்ப துன்பங்களில் பங்கு கொண்டு மறுப்பு ஏதும் சொல்லாமல் காட்டிற்கு நடந்து சென்றாள்.

**பொருண்மை உணர்வு**

*கன்னட இலக்கியத்தில் காதல், அரசியல், பக்தி, தத்துவம் ஆகியனவும் பாடுபொருளாக அமைந்துள்ளன.*

**பக்தி**

பக்திக்கோலம் பூண்டு, சான்றோர் கடவுள்
தியானத்தில் இருக்க வேண்டும்
வேடம்பூண்டு, உணவை நயந்து
சிவநெறியற்றோர் வீட்டைக்காத்து
உணவைப் பெற்று வயிற்றைப் பேணும் வேடம்
பரத்தையை விடக் கீழானது காணாய் ராமநாதனே[32]

*உண்மையான உயர்ந்த மேன்மையான பக்தர்கள், நல்ல பக்திக் கோலத்துடன் எப்பொழுதும் உலக மக்களின் நன்மைக்காகப் பரம்பொருளாம் சிவனைத் தியானிக்க வேண்டும். இவ்விதமின்றி, பல வீட்டில் உணவு உண்ணும் ஆசைக்காக, வெளியிலே நல்ல பக்திமான்கள் போலத் தோற்றம் கொண்டு, சிவநெறியற்றவர்களின் வீட்டைக் காத்துப் பணிவிடைகள் செய்து உணவுண்டு வயிற்றைப் பேணுவோர். அல்லது அந்த வேடம் பரத்தையின் வாழ்வை விட மிகவும் இழிந்தது என வன்மையாகக் கண்டித்துள்ளார்.*

**தத்துவம்**

*உயர்ந்த தத்துவங்கள் எளிய சான்றுகளின் மூலம் விளக்கப்பட்டுள்ளன. சான்றாக,*

குடத்தை உடைத்து ஆகாயத்தை காண்பதேனோ?
குடத்திலுளதே ஆகாயமென அறியலாகாதோ?
துணியைக் கிழித்து நூலைக் காண்பதேனோ?
அத்துணியே நூலென அறியலாகாதோ?
வளையலை உடைத்துப் பொன்னைக் காண்பதேனோ?
அவ்வளையலே பொன்னென அறியலாகாதோ?
தன்னை வருத்தி முழுமையைக் காண்பதே னோ?

தானே முழுமையென அறியலாகாதோ?

காணாய், ராமநாதனே[33]

என்பதைக் குறிப்பிடலாம். குடத்திலே நிறைந்துள்ள நீரிலே ஆகாயம் தெரியும். அந்த ஆகாயத்தைக் காண வேண்டுமென்றால் குடத்தை உடைக்கத் தேவையில்லை. குடத்திலுள்ளதுதான் ஆகாயம் என உணர்ந்தாலே போதுமானதாகும். ஒரு துணியைக் கிழித்து அதிலுள்ள நூலைக் காணத் தேவையில்லை. நூலாலேயே அந்தத் துணி நெய்யப்பட்டுள்ளது என அறிந்தால் போதும். வளையலை உடைத்துப் பொன்னைக் காண வேண்டும் என்னும் கருத்து பொருத்தமானதன்று. அவ்வளையலே பொன்னால் செய்யப்பட்டுள்ளது எனத் தெளிந்தால் போதும். அதைப்போல், உலகெங்கிலும் நீக்கமற நிறைந்துள்ள பரம், லிங்க தத்துவமாக ஆன்ம தத்துவமாக உடலிலே வீற்றுள்ளது. அந்த முழுமையைக் காண வேண்டும் என்பதற்காக யாரும் தன்னை வருத்தி, அழித்துக் கொள்ளத் தேவையில்லை. தானே முழுமையானவன் என உணர்ந்து கொண்டால் போதுமானது எனக் கூறியுள்ளார்.

## ஒலிக்குறிப்பு நிலை

ஒலிக்குறிப்புச் சொற்கள் கதைச் சூழலோடு வாசகனை ஒன்ற வைக்கின்றன. சூழலுக்கும் பின்னணிக்கும் உணர்ச்சிக்கும் ஏற்றவாறு கவிஞன் எடுத்தாள்கின்றான். இவ்வகையில் நற்றிணைப் பாடல் ஒன்றில்,

இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்

ஆம் பலங் குழலின் ஏங்கிக்

கலங்கு அஞர் உறுவோள்[34]

என்று ஒலிக்குறிப்புப் பற்றி அமைந்துள்ளது. போர்க்களத்தின் கண்ணே களம்பாடுநருடன் வாச்சியம் வாசிப்போர் விரைவாக ஊதுகின்ற ஆம்பல் என்னும் பண்ணையுடைய இனிய புல்லாங்குழலின் ஓசையை, தலைவியின் அழுகைக்கு ஒப்புக்காட்டப்பட்டுள்ளது. இதில் அமையும் ஒலிக்குறிப்பு விரைவு பற்றி வந்ததாகும்.

துன்ப உணர்வின் வெளிப்பாட்டிலும் ஒலிக்குறிப்புத் தோன்றும் என்பதைக்

கடல் கொண்டன்றெனப் புனலொளித் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணன் காதலற் கெடுத்த
ஆதிமந்தி[35]

என்னும் பாடலில் ஆட்டனத்தியைக் காணாது வருந்தும் இடத்து அழுகையுடன் பேச்சும் அமைந்து மிகுந்த துன்பத்தை வெளிப்படுத்துமாறு அமைந்துள்ளது.

ஒலியில்லாத உணர்வு நிலையை ஒலிப்படுத்தியும் சொற்படுத்தியும் பாடும் பாங்கு பண்டைய இலக்கியத்தில் காணப்படும் உத்தியாகும்.

குக்கூ வென்றது கோழி அதன் எதிர்
துட் கென்றன்றென தூய நெஞ்சம்

என்னும் குறுந்தொகைப் பாடலில் கோழி கூவியதைக் கேட்டதும், காதலரைப் பிரிக்கும் வாள்போன்ற அந்நாள் வந்ததே என்று என்நெஞ்சம் துட்கென்றது எனத் தலைவி தன்னுட் கூறிக் கொள்கின்றாள். இவ்விடத்து அச்சம் தோன்றுமாறு ஒலிக்குறிப்புச்சொற்கள் அமைந்திருப்பதைக் காண முடிகின்றது.

## அடுக்குத் தொடர்

யாப்பு உத்திகளுள் ஒன்றான இரட்டை யாப்புடன் இது ஒத்துச் சொல்லினும் மொழிநடை உத்தி என்ற நிலையில் தனித்து எண்ணத்தகும் பான்மை கொள்கின்றது. அடுக்குத் தொடர் என்பது பொருளுடையதாக அமைந்து விரைவு, வெகுளி, உவமை, அச்சம், அவலம் போன்ற செயல் வெளியீட்டில் இது அமைவதாக உரையாசிரியர் கூறியுள்ளார். பல்சுவை நயமுடைய சங்கப்பாடல்

நோம்என் நெஞ்சே நோம் என் நெஞ்சே[37]

என்னும் சொல் ஆற்றாமை மிகுதி தோன்ற அடுக்கி வந்துள்ளது. தலைவனைத் தோழி அமைவிலர் என இயற்பழித்தாளாக அது பொறாது நின்னால் அமைவிலர் என்று கூறப்படுதற்கே என் நெஞ்சு நோமென்பாள் என்னும்

பொருளமைவு வெளிப்படும் நிலையில் மிகுதி பற்றி இருமுறை அடுக்குதலைக் காண முடிகிறது. கன்னட இலக்கியத்தில்,

அல்லி கல்லிக பெலேதா பெலேகளிம் மெலேகளிம்
தல்லி கல்லிக வனஸ்தகளகளிம் கோளகளிம்
தல்லி கல்லிக ரன்னதரகளிம் கேரகளிம் பரிவா பரிகால்களிந்தே
அல்லி கல்லிக தோற்பா கிரிகளிம் கரிகளிம்
தல்லி கல்லிக நிறரா சுக்களிம் பிக்களிம்
தல்லி கல்லிக கவாஸ்ப தளகளிம் நதகளிம்தாத ஆதேசா
மொர்ப்பிதிது[38]

என்று பயின்று வந்துள்ளது.

அங்கங்கே விளைந்த பயிர்களைக் காணுதல், அங்கங்கே இருந்த அவிஞ்சி தோப்புகள், பக்கத்து பக்கத்து இருந்த காடுகள், குளங்கள், பக்கத்து பக்கத்து இருந்த மலைகள், கம்மாய் அங்கங்கே தெரிந்த பெரிய பெரிய மலைகள் மற்றும் யானைகள் அங்கங்கே தெரிந்த கிளிகள், மயில்கள் இப்படி அமைந்த ஒரு நாடு என்று விரைவு காரணமாக இப்பாட்டு அமைந்துள்ளது.

**வஞ்சினம் கூறுதல்**

எதிர்வரும் தீமைகளைக் கூறி அவற்றைத் தடுக்காது விட்டால் யான் இது போன்று ஆவேன் என்றுரைப்பது வஞ்சினம் எனப்படும் புறநானூற்றுப் பாடலொன்றால்,

சிறு சொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமற் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்கு அகப்படே என் ஆயின் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியன்எம் இறை எனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலேனாகுக[39]

என்று அறியமுடிகின்றது. அஞ்சாது சினம் பெருகிப் புல்லிய வார்த்தைகளைக் கூறிய வேற்றரசனை எண்ணிக் கூறியது. வஞ்சினம் ஏற்று என் நிழலின்கீழ்

வாழ்வோர்க்கு நன்மை செய்யாது கொடியவன் எங்கள் மன்னன் என்று பேசட்டும் என்று கூறுகிறது.

இதனைப் போலவே கன்னடத்தில் ரன்னனுடைய இலக்கியத்தில் வஞ்சினம் கூறுதல் என்ற கூறு இடம் பெற்றுள்ளது. துரியோதனன் மற்றும் அவனுடைய நண்பர்களால் நமக்கு எதிர்காலத்தில் பல்வேறு தீமைகள் வந்து சேரும். அதனால் அதனை தடுத்து நிறுத்த வேண்டும் என்று கூறுகிறான்.

துரியோதனன் வீடுமன் பேச்சைக் கேட்டு வைசம்பாயன குளத்தில் ஒளிந்திருக்கிறான். அவனைத் தேடிக் காணாத வீமன் சினமிகுந்து மீசை துடிக்க,

> மிஞ்சின எதிரியின் முடியை அழிப்பேனோ? முன் தேவர் உண்ட அமிழ்தைக் கவிழ்ப்பேனோ? என ஆர்ப்பரிக்கின்றான். அவன் பாதாளம் இறங்கினானோ? திசைதாண்டி ஓடினானோ? ஒளிந்தானோ? தாய் காந்தாரியின் வயிற்றைச் சார்ந்திருந்தனனோ? சராசர உலகில் ஹரி ஹராதியரின் புஜக் கூண்டினுள் இருந்தாலும் கொல்லாது விடேன்[40]

என்று வீமன் ஐம்பூத சாட்சியாய்ச் கூறியது வஞ்சினம் கூறுவது போல் இருக்கிறது.

நான் இவ்வாறு செய்வதால் என்னை கொடியவன் என்று பேசினாலும் சரி அவனை அப்படியே வளரவிட்டால் நமக்குத்தான் ஆபத்து என்று வீமன் கூறுகிறான்.

**கன்னடம் திரிந்த முறைகள்**

மூலத்திராவிடமான தமிழிலிருந்து கன்னடம் பல்வேறு வகைகளாகத் திரிந்து உள்ளது. அதாவது

> ஒலித்திரிபு, உயிரீற்றுப் பேறு, தொகுத்தல் திரிபு, புணர்ச்சியின்மை, சொற்திரிபு, வேற்றுமையுருபு மாற்றம், போலி, எதிர்மறையிடை நிலைக்கு குறுக்கம், பொருட் பொதுப்பித்தல், இனப்பொருள் வழக்கு,

வழக்கற்ற சொல் வழக்கு, நெடுஞ்சுட்டு வழக்கு விழாமை, இயற்கைத் தெரிப்பு, புதுச்சொல் புனைவு, பெயரீற்றுப் பால் விகுதிக் கேடு, ஓசைப்பேறு போன்ற வகைகளில் சொற்கள் திரிந்துள்ளது. இது தவிர, கன்னடம் திரிந்ததற்கு பல காரணங்களும் இருக்கின்றன[41]

என்பதைக் காணலாம்.

## தமிழ், கன்னட இலக்கணச் சொற்களுக்கு உள்ள ஒற்றுமை வேற்றுமைகள்

தமிழ் இலக்கணச் சொற்களும் கன்னட இலக்கணச் சொற்களும் சில இடங்களில் ஒன்று போல் அமைந்துள்ளன. இது தமிழின் தாக்கம் கன்னடத்தில் இடம் பெற்றுள்ளதைக் காட்டுகிறது.

முறைப் பெயர்கள் மூவிடப் பெயர்கள், வினாப் பெயர்கள், திசைச் சொற்கள், மக்கட் பெயர்கள், உலோகப் பெயர்கள், ஊர்திப் பெயர்கள், உணவுப் பெயர்கள், ஆடையணிப் பெயர்கள், தட்டுமுட்டுப் பெயர்கள், இடப் பெயர்கள், காலப் பெயர்கள், சினைப் பெயர்கள், பண்புப் பெயர்கள், எண்ணுப் பெயர்கள், தொழிற் பெயர்கள் போன்றவற்றில் இரண்டு இலக்கணச் சொற்களுக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதைக் காணலாம்.[42]

## சங்க இலக்கியங்களும் கன்னட ஆதி இலக்கியங்களும்

சங்க இலக்கியத்தின் அடிப்படைக் கட்டுமானத்திற்கு அமைந்த நெறிமுறைகள் யாவும் கன்னட இலக்கியத்திற்கு இல்லை என்றாலும் இரண்டிற்கும் பல்வேறு ஒற்றுமைகள் உள்ளன. சங்க இலக்கியத்தில் காணப்படும் பூ, புல், புலி, பல்லி, பத்து போன்ற சொற்கள் கன்னட ஆதி இலக்கியங்களிலும் அப்படியே காணப்படுகின்றன.

கன்னட இலக்கியம் படைத்த கவிஞர்கள் தங்களுக்கென்று ஒரு நெறிமுறையை வகுத்துக்கொள்ளவில்லை என்றாலும் சங்க இலக்கியங்களில்

இருக்கும் அகம், புறம் போன்ற அமைப்பு கன்னடத்தில் செய்திகள் வடிவிலும், கதைகள் வடிவிலும் இடம் பெற்றுள்ளன.

கன்னட இலக்கியத்தில் காணப்படும் உத்திகள், கற்பனை, வடிவம், தொன்மம், சொல்லாட்சி, உணர்ச்சி போன்றவை சங்க இலக்கியங்களில் காணப்படுவதைப் போலவே அமைந்துள்ளன.

கன்னட இலக்கியத்தில் ஜன்னன், நேமியின் லீலாவதி பிரபந்தம், ரத்னாகரர்ணி, பம்பன் போன்றோரின் படைப்புக்களில் காதல் பற்றிய பாடல்கள் அதிகம் இடம் பெற்றுள்ளன.

குமாரவியாசன், ரன்னன் படைப்புக்களில் வீரம், போர் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவற்றைத் தவிர 'வீரப் பாடல்' என்ற பாட்டு வகையும் கன்னட இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. சங்க இலக்கியம் பெரும்பாலும் அகவற்பா வகையால் பாடப்பட்டது போல கன்னடத்தில் சம்பு என்ற ஒரு வகையால் பாடப்பட்டிருக்கிறது.

தமிழில் உள்ள எதுகை மோனை நயங்களில் கன்னடத்தில் எதுகையை மட்டும் அதிகம் பயன்படுத்தி உள்ளனர். மோனையை அதிகமாகப் பயன்படுத்தவில்லை. தமிழில் இருப்பது போல் முதல், கரு, உரிப் பொருள் போன்றவற்றை கன்னட இலக்கியப் பாடல்களில் வைத்துப் பாடியுள்ளனர். சங்கக் கவிஞர்களைப் போல் இயற்கையை வருணிப்பதில் அவர்களும் வல்லவர்களாக விளங்கி வந்துள்ளனர்.

சங்க இலக்கியப் பாடல்களில் இடம்பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்புகள், அக்கால மக்களின் வாழ்வியல் கூறுகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்வதைப் போல் கன்னட இலக்கியத்திலும் அவர்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, பழக்க வழக்கங்கள் போன்றவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

இன்று தமிழில் கற்றோர்க்கு மட்டுமே விளங்கும் இலக்கியப் பதங்கள் பல. கன்னடத்தில் யாவரும் எளிதில் உணரும் தேசியச் சொற்களாக இருக்கின்றன. திங்கள் என்ற சொல்லை தமிழில் திங்கள் என்பது சந்திரனையும், மாதத்தையும் குறிக்கும். இச்சொல்லை இலக்கியத்திலும் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறு இலக்கியத்தில் பயில்கின்ற சொல் கன்னடத்தில் கற்றோரும் மற்றோரும் வழங்குகின்ற பதமாக இருக்கின்றது. நிலவின் ஒளியைத் 'திங்கள் விளக்கு' என்பார்கள் கன்னடியர்.

கன்னட இலக்கியங்களில் சங்க இலக்கியக் கூறுகளாகிய உத்திகள், உணர்ச்சிகள், கற்பனை, வடிவம், மொழிநடை போன்றவை இடம் பெற்றுள்ளன.

கன்னட நாடு சங்க இலக்கியங்களோடு மிகவும் நெருங்கிய தொடர்பினைக் கொண்டுள்ளது. கன்னட இலக்கணங்களுக்கும் தமிழில் தொல்காப்பியத்திற்கும் பல ஒப்புமைகள் இருப்பதை அறியமுடிகின்றது.

சங்க இலக்கிய நெறியை முழுவதும் பயன்படுத்தாவிட்டாலும், அகம், புறம் தவிர பல்வேறு இலக்கிய உத்திகளைப் பயன்படுத்தி இருக்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

சங்க இலக்கியப் பாடல்களில் கன்னடநாட்டைப் பற்றியக் குறிப்புகள் பல காணப்படுகின்றன. இயற்கையைப் பாடும் முறையில் இருமொழிப் படைப்பாளரிடையே பல ஒற்றுமைகளைக் காண முடிகின்றன.

## குறிப்புகள்

1. தண்.கி.வேங்கடாசலம், கன்னட இலக்கிய வரலாறு, ப.5.
2. மேலது., ப.4.
3. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 10, ப.705.
4. ரா.பி.சேதுபிள்ளை, தமிழ் விருந்து (கட்டுரை), ப.93.
5. தண்.கி.வேங்கடாசலம், கன்னட இலக்கிய வரலாறு, ப.6.
6. கலித்., பா. 65:29.
7. பரிபா., பா.22:42.
8. ஞா.தேவநேயப்பாவாணர், திரவிடத்தாய், ப.60.
9. அகம்., பா.44.
10. புறம்., பா.201.
11. அகம்., பா.253.
12. புறம்., பா.125.
13. மேலது., பா.170.
14. மேலது., பா.40.
15. தொல்.பொருள்., நூ.538.
16. முல்லை., பா.1-5.
17. சி.பாட்டிலா, கன்னட ஐந்த சாஸ்திர பரிச்சயா, ப.29.
18. என்.பசவராத்தியா, அரிச்சந்திர காவியம், ப.175.
19. G.S.சிவலுத்ரபா, மக்கிர கத்தியா 3 ஆவது தொகுதி, ப.73.
20. R.S.முகளி, கன்னட காவிய சஞ்சையா, ப.74.
21. அகம்., பா.329.
22. மேலது., பா.330.
23. T.L.ஸ்ரீ நரசிம்ம ஆச்சார், P.T.K.க்களு லேக்கனகளு, ப.567.
24. நற்., பா.300.
25. தி.நம்.ஸ்ரீகண்டயர், பாரதிய காவிய மீமாம்சே, ப.149.
26. குறுந்., பா.145.

27. ஐங்., கடவுள் வாழ்த்துப்பாடல்.

28. மு.வரதராசன், இலக்கியத் திறன், ப.178.

29. கல்யாணி வெங்கடராமன், தாசிமய்யாவின் அருள்மொழிகள், ப.84.

30. T.L.ஸ்ரீ நரசிம்ம ஆச்சார், P.T.K.க்களு லேக்கனகளு, ப.559.

31. சி.பாட்டிலா, கன்னட ஐந்த சாஸ்திர பரிச்சயா, ப.29.

32. கல்யாணி வெங்கடராமன், தாசிமய்யாவின் அருள்மொழிகள், ப.158.

33. மேலது., ப.97.

34. நற்றி., பா.113.

35. அகம்., பா.236.

36. குறுந்., பா.157.

37. மேலது., பா.4.

38. R.S.முகளி, கன்னட காவிய சஞ்சையா, ப.334.

39. T.L.ஸ்ரீ நர்சிம்ம ஆர்சார், P.T.K.க்களு லேக்கனகளு, ப.531.

40. தண்.கி.வேங்கடாசலம், கன்னட இலக்கிய வரலாறு, ப.58.

41. காண்க பின்னிணைப்பு, 6.அ.

42. மேலது., 6.ஆ.

## இயல் 5

# இலக்கியங்கள் காட்டும் வாழ்வியல் கூறுகள்

**திராவிடர்களின் பிறப்பு**

*இந்திய மக்கள் வரலாற்றில் திராவிட மக்கள் வரலாறு மிகவும் முதன்மையுடையது. இன்று இந்திய நாகரிகம் எனப் பெயர் பெறுவது ஆரிய திராவிட நாகரிகங்களின் கலப்பினால் தோன்றியது. ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்டது திராவிட நாகரிகம்.*

> திராவிட மக்கள் அயல்நாடுகளிலிருந்து இந்தியாவின் வடக்குப் பகுதிகளை அடைந்தார்கள். பின்பு ஆரியர் என்றும் புதிய சாதியினர் அங்கு வந்தனர். அவர்கள் திராவிடரை வென்று தெற்கே துரத்தினர். அவர்கள் தெற்கே வந்து வாழ்ந்தார்கள் அவர்களே தமிழர் எனப்படுவோர்.[1]

*திராவிட மக்கள் வெளிநாடுகளிலிருந்து வந்து இந்திய நாட்டை அடைந்தார்கள் என்று கூறுவதற்கேற்ற ஆதாரம் ஒன்றேனும் காணப்படவில்லை. பழைய கற்காலம் முதல் இரும்புக் காலம் வரையில் மக்கள் தொடர்பாகச் செய்து பயன்படுத்திய ஆயுதங்களும் பிறபொருள்களும் இந்திய நாட்டின் பல்வேறு இடங்களில் கண்டு எடுக்கப்பட்டுள்ளன.*

*திராவிட மக்கள் அயல்நாடுகளிலிருந்து வந்தார்கள் என்று கூறுவோர்க்குத் துணையாக இருப்பது ஆப்கானிஸ்தானத்தின் ஒரு பகுதியில் தமிழுக்கு இனமுடைய பிராகூய் மொழி வழங்குவது. இன்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் சிந்து ஆற்றுவெளிகளில் திராவிட நாகரிகம் பரவியிருந்தது. அங்கு தமிழ் வழங்கிற்று. இம்மக்களின் தொடர்புடையவர்களே ஆப்கானிஸ்தானத்தில் தங்கி வாழ்ந்தனர். அவர்களின்*

சந்ததியினரே திராவிடத்தின் பிராகூய் மொழியை இன்றும் பேசி வருகின்றனர்.

திராவிட மக்கள் பழைமை தொட்டே இந்திய நாட்டில் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களின் பழைய நாடு குமரிமுனைக்குத் தெற்கிலும் பரவிக்கிடந்தது.

**திராவிட நாகரிகத்தின் பழைமை**

மேற்கு ஆசிய, எகிப்து முதலிய நாடுகளில் பழைய இடிபாட்டு மேடுகள் தோண்டி ஆராயப்பட்டுள்ளன. அங்கு கிடைத்த பழம் பொருட்களைக் கொண்டு அந்நாடுகளின் நாகரிகம் ஏறத்தாழ எட்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென ஆராய்ச்சியாளர் துணிந்து கூறியுள்ளனர். மைசூரிலே சித்திரதுருக்கம் என்னும் இடத்திலும் சிந்துவெளியிலும் செய்யப்பட்ட அகழ்வாராய்ச்சிகளால் இந்திய நாட்டின் நாகரிகமும் அயல்நாட்டு நாகரிகங்களை ஒத்த பழைமை உடையது என அறியப்படுகின்றது.

இதுவரையிலும் அகழ்வாராய்ச்சியினால் அறியப்பட்ட பழைய நாகரிகங்களுள் இந்திய நாகரிகமே மிகப் பழமை உடையது. சிந்துவெளி நாகரிகத்தின் காலம் கி.மு.3500 என்று சொல்லப்படுகின்றது. சிந்துவெளி நாகரிக காலத்தில் இந்தியா முழுமையிலும் ஒரே மொழியை வழங்கிய ஒரே இன மக்கள் வாழ்ந்தார்கள். அம்மக்கள் திராவிடர் எனப்படுவர். ஆரிய மக்கள் கி.மு. இரண்டாயிரத்தில் அல்லது அதற்குப்பின் இந்திய நாட்டை அடைந்தார்கள். அக்காலத்தில் வடநாடு முழுமையிலும் திராவிடமொழி வழங்கியதென்பதற்குச் சான்று ஆரிய மக்களிடம் பல இருக்கிறது என ஆராய்ச்சியாளர் நன்கு ஆராய்ந்து நிறுவியுள்ளனர்.

ஆரியர் வருகைக்குப் பின்பே இந்திய நாட்டில் வெவ்வேறு இன மக்கள் கலப்பும் மொழிக்கலப்பும் உண்டாயிற்று. கி.மு. இரண்டாயிரத்தில்

வடக்கே இமயத்துக்கும் தெற்கே குமரிக்கும் இடைப்பட்ட பெருநிலப்பரப்பு திராவிட நாடாக விளங்கியது என அறியக் கிடக்கின்றது. அன்றைய இந்தியா திராவிட நாடாகவே இருந்தது. தமிழும் திரிந்த தமிழுமே இந்தியாவில் பேசப்பட்டன.[2]

புதிய மக்களுக்கும் வடக்கே வாழ்ந்து கொண்டிருந்த திராவிட மக்களுக்கும் இடையில் போர்கள் நிகழ்ந்தன. ஆரியருடைய தேவபாடல்களால் அக்காலத்தில் திராவிடர் உயர்ந்த நாகரிகம் பெற்று விளங்கினார்கள் எனத் தெரிகின்றது. நாகரிகத்தில் உயர்நிலை அடைந்திருந்த திராவிடரை வெல்வது ஆரிய மக்களுக்கு இயலாததாக இருந்தது. நாளடைவில் இரு சாதியினருக்கிடையில் திருமணக்கலப்புகளால் தொடர்புகள் உண்டாயின.

திராவிடப் பெண்களை ஆரிய ஆடவரும் ஆரியப் பெண்களைத் திராவிட ஆடவரும் மணந்தனர். திராவிடருடைய சமூகம் தாயாட்சி முறையினது. ஆரியருடைய சமூகம் தந்தை ஆட்சி முறையினது. திராவிடப் பெண்கள் மூலம் ஆரிய ஆடவருக்குப் பிறந்தவர்கள் தந்தை ஆட்சி முறைப்படி ஆரியர் எனப்பட்டனர். ஆரியப் பெண்கள் மூலம் திராவிடத் தந்தையாருக்குப் பிறந்தவர்கள் திராவிடர் தாயாட்சி முறைப்படி ஆரியர் எனப்பட்டனர். இவ்வகையான கலப்புப் பல நூற்றாண்டுகளாக நிகழ்ந்தது. விந்தியமலைக்கு வடக்கே உள்ள மக்கள் ஆரியர் எனக் கூறிக்கொண்டனர். ஆனால் அவர்களிடத்தில் ஆரியக் குலத்தினருக்குரிய குணாதிசயங்கள் மிகச் சிறிதே காணப்பட்டன.

மக்களிடையே கலப்பு உண்டானபோது மொழிகளும் கொள்கைகளும் கலப்பவாயின. திராவிட மொழிச்சொற்கள் பல திரிந்து வழங்கப்பட்டன. இவ்வாறு வழங்கப்பட்ட மிகப்பல சொற்கள் இன்று வடமொழியிற் காணப்படுகின்றன. அச்சொற்களுக்கு மூலம் அறிய முடியாமல் இருக்கிறது. இந்து ஆரியமொழிக்கு இனமுடையதாக

ஐரோப்பிய நாடுகளில் வழங்கும் ஆரிய மொழிகளில் இச்சொற்கள் காணப்படவில்லை.

புதிதாக வந்த மக்களைவிட வடக்கே வாழ்ந்து கொண்டிருந்த திராவிட மக்கள் பலர். மக்கள் கலப்பினால் சில மாற்றங்கள் உண்டாகி மொழி மாறுப்பட்டபோதும் வாழ்க்கை முறையில் அவர்கள் திராவிட சமூகத்தினர் போலவே காணப்பட்டனர்.

**பண்பாடு விளக்கம்**

அன்று முதல் இன்று வரை பண்பாடு உள்ளமையால்தான் இந்த உலகம் நிலைத்து நிற்கிறது என்பதை உணர முடிகிறது. தனி மனிதன் சமூகத்துடன் ஒட்டியிருப்பதும் சமூகம் தனி மனிதனுக்கு உணர்த்துவதும் பண்பாட்டின் அடிப்படையிலே ஆகும். அத்தகைய பண்பாடு ஒன்று இல்லையெனில் உலகம் இல்லை. உயிர்கள் இல்லை என்று கூறலாம்.

மனிதனை விலங்கினின்று வேறுபடுத்துவது பண்பாடு ஆகும். இப்பாண்பாடு காலத்திற்குக்காலம், நாட்டுக்கு நாடு, இனத்திற்கு இனம் வேறுபடும். ஒரு நாட்டின் பெருமைக்கும் சிறப்புக்கும் காரணம் அங்கு வாழும் மக்களின் பண்பாடுதான் என்பதை,

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே[3]

என்ற ஔவையாரின் பாடல் எடுத்துரைக்கின்றது.

'Culture' என்ற ஆங்கிலச் சொல்லுக்குப் பழக்கம் என்ற ஒரு பொருள் உண்டு. செயற்கையாக உண்டு பண்ணுதல் என்ற பொருளும் உண்டு.[4]

பண்பாடு என்னும் சொல் வழக்கு அண்மைக்காலத்து எனினும், அச்சொல் குறிக்கும் பொருள்கள் சங்க இலக்கியப் பாடல்களில் பெருகி வந்துள்ளன.

"பண்பெனப்படுவது பாடறிந் தொழுகுதல்"[5]

என்ற பாடலுக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர், மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலக வழக்கம் அறிந்தொழுகுதல் என்று விளக்கந்தருகின்றார்.

திராவிடப் பண்பாடு மிகவும் தொன்மையான ஒன்றாகும். இந்திய வரலாற்றில் ஆரியர்களின் வருகைக்கு முன்னரே வளமானதொரு பண்பாட்டினைத் திராவிடர்கள் பெற்றிருந்தனர். இந்திய வரலாறு முறைப்படி எழுதப்படுமானால் திராவிடர் நாகரிகத்திலிருந்தே தொடங்கப்பட வேண்டும் என்பது சில வரலாற்றாசிரியர்களின் வாதமாகும். இவ்வாறு மிகவும் முற்காலத்திலேயே திராவிடருடைய நாகரிகம் மிகவும் உயர்வடைந்திருந்தது.

நாட்டின் செழிப்பும் வாணிகமும் செல்வத்தை வளர்க்கின்றன. மக்களின் குழப்பமில்லாத வாழ்க்கையும் செல்வம் வளர்வதற்கு மற்றொரு காரணம். வடநாட்டு மக்கள் அடிக்கடி அன்னியப் படை எடுப்புக்களால் கலக்குண்டார்கள். அவர்கள் கையில் வாளைப் பிடித்துக்கொண்டு வீட்டையும், உறவினரையும் காக்க வேண்டியிருந்தது. அங்கு மக்களுக்கும் சொத்துக்கும் பாதுகாப்பு இருக்கவில்லை. தென்னாட்டு மக்களுக்கு இவ்வகைத் தொல்லை இருக்கவில்லை. நாட்டின் செல்வத்தை வற்றச் செய்யும் பெரிய போர்கள் தென்னாட்டில் நிகழவில்லை. தென்கடல்களில் கடற்கொள்ளைக்காரரும் காணப்படவில்லை. தரையில் அமைதி நிலவிற்று.

அக்காலத்தில் அறியப்பட்டிருந்த கடலை அடுத்த நாடுகளோடு தமிழர் வாணிகம் புரிந்தனர். நாடு செழித்தது. வடக்கே வாழ்ந்த

> மக்களைவிடத் தெற்கே வாழ்ந்த மக்கள் செல்வம் படைத்திருந்தனர். கடற்பயணங்கள் தென்மேற்கு இந்தியாவுக்கும் பாபிலோனுக்கும் இடையில் ஒழுங்காக நடைபெற்றது. மரக்கலம் ஓட்டும் மாலுமிகள் திராவிட மக்களாக இருந்தனர்.[6]

*தந்தம், குரங்கு, மயில் போன்றவைகளின் தமிழ்ப் பெயர்கள் மேற்கு தேசங்களில் வழங்கின. நிலம் செழிப்புற்றிருந்தது. கனிகளில் பொன் அரிக்கப்பட்டது. வைரம், முத்து, பவளம் முதலியனவும் அதிகம் கிடைத்தன. தேக்கு, சந்தனம் முதலிய மரங்கள் மேற்குத் தேசங்களுக்கு ஏற்றப்பட்டன.*

*தமிழில் காணப்படும் நாடு ஊர் என்னும் சொற்கள் தமிழரின் பழைய பண்பாட்டை உணர்த்துவன. நாடு என்னும் சொல் நடு என்னும் அடியாகப் பிறந்தது. பலவகை மரஞ்செடிகளை நட்டு உண்டாக்கும் இடம் நாடு எனப்பட்டது. ஊர் என்பதற்கு வயல் சூழ்ந்த இடம் என்பது பொருள். ஊர் என்பது உழு என்னும் அடியாகப் பிறந்தது. ஊர் என்பது உழுதலை உணர்த்தும் முற்காலத்தில் நாட்டைப் பற்றியும் ஊரைப்பற்றியும் உள்ள தமிழருடைய கருத்து இதுவாகும்.*

> தக்காண பீடபூமியைச் சேர்ந்த வேட்டுவர் (கிராதர்) என்ற குறிஞ்சி நில மக்கள் யவன தேசத்திற்குச் சென்று தங்கள் அரசை நிலைநிறுத்தி தங்கள் பெயரையும் அந்நாட்டிற்குக் கொடுத்தார்கள். இதுவே கிரீட் தேசம். இதன் நாகரிகத்துக்கும் தமிழர் நாகரிகத்துக்கும் ஒப்புமை மிகுதியாக உள்ளது[7]

*என்ற கருத்து சிந்தனைக்குரியது.*

*வில்லவர், வேட்டுவர் எனப்பட்ட குறிஞ்சி நில மக்கள் சேரரே எனலாம். பதிற்றுப்பத்தில் காணப்படும் சேரர் மெய்க்கீர்த்தி இக்கருத்தை நிலை நிறுத்துகின்றது. சேர நாடு கேரளம் எனத்திரிவுபட்டது போலச் சேரர்தீவு 'க்ரீத்' ஆயிருக்கலாம். தமிழ்நாட்டு வேந்தர் யவனர்களைத் தமது கோட்டை வாயில்களிலே காவலர்களாக வைத்திருந்த செய்தியும் உரோமாபுரி*

வேந்தனாகிய அகஸ்டஸ் மன்னனுக்குப் பாண்டியன் தூதனுப்பிய செய்தியும் ஆதாரமாகக் கொண்டு

மத்தியதரை நாகரிகமென்று இப்போது வழங்கப்படுவது தென்னிந்திய நாகரிகம்[8]

என்ற முடிவை முன்வைப்பது குறிப்பிடத்தக்கது.

சங்க இலக்கியப் பண்பாடுகள் பல திராவிடர்களிடம் சென்றுள்ளது. ஆற்றுப்படைகள், பாணர்கள், புலவர்கள் மதிக்கப்பட்டவை. இறைவழிபாடு, நம்பிக்கை, தொழில்கள், திருமணம் நடத்தும் முறை, உணவு, உடை, பழக்கவழக்கம், போன்ற பண்பாடு சார்ந்த பல்வேறு கூறுகள் திராவிடர்களிடையே இன்றும் மாறாமல் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

**உணவு**

சங்க இலக்கியங்களில் ஐந்து வகை நில பாகுப்பாட்டின் அடிப்படையில் உணவு முறை வேறுபடுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நிலத்தில் உள்ள அனைவரும் இருவகையான உணவை உட்கொண்டுள்ளனர். 1. சைவ உணவு, 2. அசைவ உணவு, இரண்டிற்கும் தேவைப்படுவது அரிசி. இதனை பட்டினப்பாலை

சோறு வாக்கிய கொழுங்கஞ்சி
யாறு போலப் பரந்தொழுகி[9]

என்று அரிசி உணவைப்பற்றிப் பேசுகிறது. இந்த அரிசி உணவை தெலுங்கு மக்களும் பயன்படுத்தினர் என்பதை வேமனர் படைப்புகளில் காணலாம். மலையாளத்தில்

நெல் குத்துமாறும் அரிகே யொரு கோலொடிச்சி[10]

என்ற வரிகள் மூலம் அறியப் பெறுகிறது. கன்னடத்தில் நயசேனன் படைப்புகளில் இவ்வரிசி உணவு பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

இதனைத் தவிர முல்லைநில மக்கள் வரகு, சாமை, எள், கொள், பயறு, போன்றவற்றை உணவுப் பொருளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

குறிஞ்சி நில மக்கள் நெல், தினை, மூங்கில் அரிசி, போன்றவற்றை உணவுப் பொருளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

பாலை நில மக்கள் வழிப்பறி, கொள்ளை இவற்றால் கிடைக்கும் பொருட்களையே உணவாகப் பயன்படுத்தியுள்ளனர்.

மருத நிலமக்கள் நெல்லிலிருந்து கிடைக்கும் அரிசியை மட்டும் உணவுப் பொருளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

நெய்தல் நிலமக்கள் மீன், உப்பு விற்பது மூலம் கிடைக்கும் வருமானத்தில் உணவுப் பொருளை வாங்கி பயன்படுத்தியுள்ளனர்.

காய்கறிகளாக வாழைக்காய், மாங்காய், வள்ளிக்கிழங்கு, ஆம்பற்கிழங்கு, சேப்பங்கிழங்கு, நாணற் கிழங்கு, புன்னைக்காய், வழுதுணங்காய் போன்ற காய்கறிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

................... வாழை
கொடுங்காய் குலை தொறு உத்தூங்கும்[11]

என்ற பாடலால் அறியப்பெறுகிறது.

பழங்களாக மா, பலா, வாழை, நுங்கு, நெல்லிக்கனி, நாவல் பழம், அத்திப்பழம், விளாம்பழம், போன்ற பழங்களையும் உணவாகப் பயன்படுத்தினர் என்பதை,

சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க வெமக்கீத் தனையே[12]

என்ற பாடலில் காணலாம். மலையாள இலக்கியத்தில்

"வாழைப் பழத்தினைக் தானுண்ணும் போதினில்"[13]

என்ற பாடலில் காணலாம்.

பால், தயிர், வெண்ணெய் போன்றவற்றையும் சங்க கால மக்கள் உணவில் சேர்த்துக் கொண்டுள்ளனர். இதனை,

வெண்ணெய் யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய்[14]

என்ற பாடலால் அறியப்பெறுகிறது.

கீரை வகைகளில் முருங்கைக் கீரை, வேலைக்கீரை, குப்பைக்கீரை போன்ற கீரை வகைகளையும் அவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**அசைவ உணவு**

மீன், மான் கொழுப்பு, பன்றி இறைச்சி, கொழுப்பு, ஆமை இறைச்சி, ஆரல் மீன், பறவை இறைச்சி, அயிரைமீன், சுறாமீன், இறால்மீன், கயல் மீன், கெண்டை மீன், ஆவின் இறைச்சி, நண்டின் இறைச்சி, செம்மறியாட்டின் இறைச்சி, கவுதாரி பறவையின் இறைச்சி, உடும்புக்கறி, ஆட்டுக்கறி, கானக்கோழி போன்ற கறிகளை அசைவ உணவாக பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

நெய்யுலை சொரிந்த மையூன் ஓசை
புதுக்கண் மாக்கள் செதுக்க னார்[15]

என்பதில் ஆட்டிறைச்சியை நெய்யுலையில் பொரித்து சாப்பிட்டுள்ளனர் என்பது தெரிகிறது.

முள்ளம் பன்றியின் ஊனையும் பக்குவப்படுத்தி உண்டனர் என்பதை,

முள மா வல்சி எய்னர் தம்கை[16]

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

சங்க இலக்கியத்தில் காணப்பட்ட அசைவ உணவு முறைகளை எல்லாம் தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக்கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் யான் தேடியவரை எங்கும் காணப்பெறவில்லை.

**உடை**

சங்க இலக்கியத்தில் உடைகள் பற்றி பல்வேறு இடங்களில் பேசப்படுகின்றன. அக்காலத்தில் உடையை தழை, துகில், கலிங்கம், அறுவை சிதார், ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரை நீலம், உத்தரீயம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர்வை, சிதவல், வார், மெய்ப்பை, துகின்முடி, மெய்ம்மறை, மெய்யாப்பு, வாலிது, வெளிது, புட்டகம், நூல், பக்குடுக்கைப் போன்ற பெயர்களில் அணிந்துள்ளனர்.

பருத்தி இந்திய நாட்டில் உண்டாகும் செடி மற்றைய நாட்டு மக்கள் தோலை உடையாகக் கொண்டிருந்த காலத்தில் இந்திய மக்கள் பஞ்சை நூலாக்கவும், நூலால் ஆடை நெய்யவும் ஆடைக்குப் பலவகைச் சாயங்கள் ஊட்டவும் அறிந்திருந்தனர். இதற்குச் சான்று பழைய சிந்துவெளி நகரங்களிற் கிடைத்துள்ளது. திராவிடர்கள் வெப்பநிலைக்கேற்ப மக்கள் உடைகளை அணிந்தனர். தமிழகத்திற்கு வந்த வேற்று நாட்டாராகிய யவனர்கள்தான் மெய்ப்பை என வழங்கும் ஒரு வகைச் சட்டை அணிந்து கொண்டனர்.

> மத்திகை வளைஇய மறித்துவங்கு செறிவு உடை
> மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து
> வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்[17]

என முல்லைப்பாட்டு கூறுகிறது. முதலில் அவர்கள் சட்டையை அணிந்தனர். பின்னர்தான் திராவிடர்கள் சட்டை அணியும் பழக்கத்தைக் கொண்டனர். ஆடவர் முழங்கால் வரையும் உடை உடுத்தி அரையில் கச்சுக் கட்டியிருந்தனர். பின்பு நாடா பாகையாக மாறியது. பெண்கள் அரையில் மாத்திரம் உடை அணிந்தனர். பெண்களில் சிலர் மார்பைக் கச்சுக்கட்டி மறைத்தனர். பெரும்பாலும் அரைக்கு மேல் உடை அணியவில்லை. இதனை சான்சி, அமராவதி பிற்காலச் சிற்பங்களிலும் காணப்படும் உருவங்களையும் கொண்டு அறியமுடிகின்றது.

மக்கள் ஆடை செய்ய அறியும்முன் மரப்பட்டைகளையும் தழைகளையும் உடுத்தினார்கள். பஞ்சு உடைக்குமுன் மரவுரி தோன்றியதாதலின் அது துறவிகள் அணியும் உடையாகப் பிற்கால மக்களால் கருதப்பட்டது. ஆடையைக் குறிக்க 40க்கும் மேற்பட்ட பெயர்கள் தமிழில் காணப்படுகின்றன. ஒவ்வொரு பெயரும் அக்காலத்தில் வழங்கிய வெவ்வேறு வகை ஆடையைக் குறிக்க வழங்கியிருத்தல் வேண்டும்.

ஈரணி என்ற பெயரில்

ஈர்ந்தணி ஆடையை எல்லி மாலையை[18]

உடை என்ற பெயரில்

பாவை தண்நறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூஉடைப் பொலிந்து[19]

பட்டு என்ற பெயரில்,

கொட்டைக் கரைய பட்டுடை நல்கி[20]

அறுவை என்ற பெயரில்

நோக்கு நுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரி யன்ன அறுவை[21]

இதனைத் தவிர இழை சென்ற இடம் அறிய முடியாத நுண்ணிய நூலால் ஆன ஆடையையும் அணிந்தனர்.

புறநூல்களில் கவசம் என்ற பெயரில் உடைகளை அணிந்துள்ளனர். போர் செய்யத் தடையாகாமல் இருக்கவும், எதிரியின் படைக்கலங்களில் இருந்து தங்களைப் பாதுகாக்கவும் அதற்கேற்ற உடைகளை அணிகின்றனர். போர் வீரர்களுக்குரிய ஆடைகளுள் முதலிடம் வகிப்பது கவசமாகும். இதனை,

புலிநிறக் கவசம் பூம்பொறிச் சிதைய
எய் கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலியன்ன களிற்று மிசை யோனைக்[22]

என்கிறது. அதாவது புலியினது தோலாற் செய்யப்பட்ட மெய்புகு கருவி என்று பெயர்.

உடை பற்றிய செய்தி தெலுங்கு, கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக்கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் எங்கும் காணப்பெறவில்லை.

உடை பற்றிய செய்தியை மலையாள இலக்கியம்

வளையிருந்தது காணோம், கூப்பிடு பெண்ணோ!

பாப்பி புடவை இது தானே[23]

என்று குறிப்பிடுகின்றது. கேரள நாட்டில் உள்ள அக்கால மகளிர் பாப்பி புடவை என்ற ஒரு வகை ஆடையை அணிந்துள்ளனர் என்ற செய்தியை அறிய முடிகின்றது.

**திருமணம் செய்தல்**

திருமணம் சங்ககாலத்தில் பெரும்பாலும் காதல் திருமண முறையே கடைப்பிடிக்கப்பட்டிருக்கின்றது. பருவம் அடைந்த ஆடவரும் மகளிரும் ஒருவரை ஒருவர் காதலித்துச் சிறிதுகாலம் பிறர் அறியாது சேர்ந்து ஒழுகுவார்கள் என்றும், பின்னர் ஆடவன் தனது காதலியைத் தனது ஊருக்கு யாரும் அறியாது கொண்டு சென்று அங்கு மணந்து கொள்வான் அல்லது மணமகளது பெற்றோரின் இசைவைப் பெற்று அவர் இல்லத்திலேயே அவளை மணந்து கொள்வான்.

அக்காலத்தில் ஆடவன் ஒருவன் மணஞ் செய்ய வேண்டியிருந்தால் அவன் சில முதியோரைப் பெண் கேட்கும்படி பெண் வீட்டுக்கு அனுப்புவான். பெண்ணின் பெற்றோர் பெண்கொடுக்க இசைந்தனராயின், கணி எனப்பட்ட சோதிடனால் குறிக்கப்பட்ட நல்ல நாளிலே மணமகன் தனது சுற்றத்தாருடன் மணமகள் வீட்டுக்கு வந்து பெண்ணை மணந்து தனது வீட்டுக்கு அழைத்துச் செல்வான். திருமணத்துக்கு முன்னர் பெண்ணுக்கு விலையாக மணமகன் பரிசம் எனப் பொருள் வழங்குவான். இவ்வாறு கொடுக்கப்படும் பொருளைச் சில இடங்களில் வளர்ப்புக் கூலி எனவும் வழங்குவர். பெண்களை விலைகொடுத்து வாங்கி மணத்தலாகிய வழக்கத்தின் நிழலே பரிசம் என்பர். இதனை,

திராவிட மக்களுள் சில கூட்டத்தினர் பெண்களை விலை கொடுத்து வாங்கி மணந்து கொள்ளும் வழக்கம் முன்பும் நடந்துள்ளன. இன்றும் நடைபெறுகின்றன. முற்காலத்தில் புரோகிதரின் உதவியின்றியே திருமணங்கள் நடந்தன.[24]

*என்ற கூற்றின் வழி அறியமுடிகின்றது. சங்க இலக்கியமாகிய அகநானூற்றில்,*

உழுந்து தலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப, நிரைகாற்
றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி,
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கட்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொது செய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூடிய உடன்புணர் கங்குல்[25]

*என்று திருமண முறை விளக்கப்பட்டுள்ளது.*

*சோறு பருப்பிட்டுச் சமைக்கப்பட்டது. பலர் கூடி உண்ட பின்னரும் சோறு குவிந்து கிடந்தது. தரையில் வெண்மணல் பரப்பப்பட்டிருந்தது. விளக்குகள் கொளுத்தி வைக்கப்பட்டன.*

பூரண நாளின் விடியற்காலையில் தீய கோள்கள் அகன்ற நல்ல நேரமாக இருந்தது. தலையிலே குடத்தையும் கையிலே மட்பாத்திரத்தையும் வைத்துக்கொண்டு பெண்கள் வந்தனர். அவர்கள் கையில் வைத்திருந்த பாத்திரத்தை ஒருவர் கையிலிருந்து ஒருவர் கைக்கு மாற்றினார்கள். அப்பொழுது முதிய பெண்கள் பெரிய ஆரவாரஞ் செய்தனர். பின்பு ஆண் மகனை பெற்றவர்களும், வயிற்றில் அழகு தேமல் உடையவர்களும், அழகிய நகைகள் அணிந்தவர்களுமாகிய பெண்கள் முன்னே வந்தனர். மணமக்களின் தலையில் நீரை ஊற்றினர். அப்பொழுது நீரில் கடந்த பூவும் நெல்லும் கூந்தலில் கிடந்து விளங்கின. அப்பொழுது அவர்கள் 'நீ கற்பில் வழுவாது கணவனுக்கு இனியவளாக இருந்து நெடுங்காலம் வாழ்வாயாக' என வாழ்த்தினார்கள். அன்று மாலைக்காலம் வந்தது. பெண்கள் அனைவரும் வந்து கூடி, 'நீ வீட்டுக்குப் பெருந்தலைவியாகுக' என்று வாழ்த்தினர். சுற்றத்தவர் அவள் கையைப் பிடித்து மணமகனிடம் கொடுத்தனர்.

நல்ல அரிசியைச் சமைத்த நெய்கலந்த சோற்றைச் சுற்றத்தவர் முதியவர்களுக்குக் கொடுத்தனர். நற்சகுனம் காட்டும் பறவைகள் தெளிந்த வானத்தே பறந்தன. திங்கள் உரோகினியோடு சேருகின்ற குற்றமில்லாத நல்ல நேரம் வந்தது. பெருக்கிச் சுத்தஞ்செய்த வீடு அலங்கரிக்கப்பட்டது. எல்லோரும் கடவுளைத் தொழுதார்கள். பெரிய மேளமும் மணமுரசும் ஒலித்து, மணவினையைக் காண விரும்பிய பெண்கள் விரைந்து வந்து கூடினார்கள். அறுகங்கிழங்கை வெள்ளிய நூலாற்கட்டி வாகைப் பூவின் மேல் வைக்கப்பட்டதும், மணல் பரப்பப்பட்டதுமாகிய பந்தலின் கீழ் தமர் அவளை மணமகனிடம் கொடுத்தார்கள்.

> தலைவன் தலைவியை மணம் செய்வதற்கு அவளின் பெற்றோருக்கு தலைவியின் தந்தையின் துறையைச் சார்ந்து அவனொரு கடற்கரையில் உப்புத்தொழில் செய்தும், அவனுக்கு உதவி செய்தும், கடலில் மீன் பிடித்தும், இவ்வாறு தொண்டும் தொழிலும் செய்தும்

அவனை வணங்கியும் வாழ்வோம். அப்போதுதான் மகளைத் தருவான் என்று எண்ணுகிறான் தலைவன்.[26]

ஆனால் தற்காலத்தில் இந்நிலை மாற்றம் பெற்றுவிட்டது.

தெலுங்கில் திருமணச் சடங்கில் பெண்ணும் மாப்பிள்ளையும் ஒருவர் தலையில் ஒருவர் அரிசியை போட்டுக்கொள்ளுதல் அவர்களின் பழக்கமாக இருந்துள்ளது. இதனை,

ஜானக்யா: கமலா மலாஞ்ஜலி புடேயா: பத்$^{3}$மராகா$^{3}$யிதா:
ஸ்யஸ்தாராக$^{2}$வ மஸ்தகேச விலஸத்குண்த ப்ரஸூநாயிதா:
ஸ்ரஸ்தா ச்யாமல காயகாந்தி கலிதா யாயிந்த்தர நீலாயிதா:
முக்தாஸ்தா ச்சிப$^{4}$தா$^{4}$ ப$^{4}$வந்து ப$^{4}$ வதாம் ஸ்ரீராம வைவாஹிகா:[27]

என்பதன் வழி அறியலாம்.

சீதா ராம திருமண சமயத்தில் ஜானகிதேவி இரண்டு கைகளிலும் பத்மராம் என்ற உயர்தர கற்களைப் போலப் பிரகாசித்து இருந்தனர். ஸ்ரீராமச்சந்திரனின் தலைமீது விழுகின்ற மல்லிகைப் பூக்களைப்போல அழகு மேலும் கூடியிருந்தது. நீலமேகன் மேனிகொண்ட சரிரத்தின் மீது சரிகிக்கொண்டு இந்திர நீல மணிகளைப் போல தோன்றுகின்ற முத்து அரிசிகள் உங்களுக்கு சகல சுகங்களையும் உண்டாக்கும் என்பது அதன் பொருளாகும். இதில் தமிழர்களுடைய சடங்கைப்போல திருமணத்தின் போது அரிசியை மணமக்கள் மீது தூவி வாழ்த்துவது போல அமையும் சடங்கு தெலுங்கு மொழி இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளது.

கன்னட இலக்கியத்தின் வழி திருமணம் எவ்வாறு நடந்து இருக்கின்றது என்பதை அறிய,

ஜெலத மண்டப மேலே
உரியா சப்பரா வனிக்கி
அளிக்கல்லா அசைய ஆசி வாசிக வாகட்டி
காலில்லத எண்டதிகே

தலே இல்லாத கண்டா பந்து முட்தனுனோடா!

எந்தெந்து பிடதா பாலுவிகே கொட்டர்ரென்ன

ஜன்னமல்லி கார்ஜுனனேகே![28]

இப்பாடல் ஒரு கனவுப்பாடல் போன்று தோன்றும். இருந்தாலும் அந்நாட்டின் கலாச்சாரத்தின்படியே அதுவும் அமைந்துள்ளது. தண்ணீர் மேல் ஒரு மண்டபம் மண்டபத்திற்கு முன்பு பந்தல் போடப்பட்டு இருந்தது. இத்திகட்டி போல உள்ள ஒரு பலகையைப் போட்டு இருந்தார்கள். நெற்றியில் பட்டம் கட்டினார்கள். பின்பு எனக்கும் அவருக்கும் என்றென்றும் பொருத்தமில்லாத அந்த சாமியே வந்து என்னைத் தொட்டான் என்றென்றும் முடியாத வாழ்க்கைக்கு, என் சாமிக்கு என்னைக் கொடுத்தார்கள். இப்பாடலில் மண்டபத்திற்கு முன்பு பந்தல் போடுதல், மணமக்கள் அமருவதற்கு அடியில் பலகை போடுதல், நெற்றியில் பட்டம் கட்டுதல் இவையனைத்தும் தமிழருடைய பழக்கமாகவே இருந்துள்ளது.

**பழக்க வழக்கங்கள்**

பழக்கம் என்பது பயிற்சியின் முதிர்ச்சி எனப் பொருள்படும். பழக்கம் உயர்ந்ததாக இருப்பின் அது தரும் பயன் சிறந்ததாகும். இளமை முதல் நல்ல ஒழுக்க நெறிகளில் பயிலுகின்ற ஒருவன் காலப்போக்கில் சமுதாயத்தில் நன்மகனாகக் கருதப்படுவான். இளமை முதல் தீய நெறிகளில் பழகும் ஒருவன் பொது மக்களால் வெறுக்கப்படுவதோடு தானும் கெட்டு அழிவான். எனவே சான்றோர் வகுத்த நல்ல நெறிகளில் பழகுவதே வரவேற்கத்தக்கது. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும் ஆதலின் இளமை முதலே நன்னெறிகளில் பழகுதல் விரும்பத்தக்கதாகும்.

முன்னோர் தத்தம் பெருமுயற்சியால் வருந்திப் பயின்று தேறிய பழக்கங்கள் காலப்போக்கில் வழக்கங்களாக மாறுகின்றன. முதலில் தரிசாய்க் கிடந்த நிலப்பகுதிகளை எவ்வாறோ தெரிந்து திருத்தி விதை விதைத்துப் பயிர் விளைக்கக் கற்றுக்கொண்ட பழக்கம் பின்பு வழிவழியே வழக்கமாய்

நடைபெறுவதால்தான் நாம் அவ்வழக்கத்தைக் கடைப்பிடித்து, மிகவும் எளிமையாக உழவு முறையும் உணர்ந்து பயிர் செய்து பயன்பெறுகிறோம். இங்ஙனமே நம் முன்னோர் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் பழகிப் பழகிச் செய்தனவற்றை இன்று வழக்கம் என்ற பெயரால் நாம் பெருமுயற்சியின்றிச் செய்து வருகின்றோம். இலக்கணத்திலும் 'வழக்கு' என்னும் சொல் பயில்கின்றது மக்கள் பழக்க முதிர்ச்சியால் கொண்டவை எல்லாம் வழக்கமாக மாறுகின்றன.

### தொய்யில் எழுதுதல்

பண்டைக்கால மக்கள் கல்லில் உருவம் செதுக்கித் தங்கள் உள்ளக் கருத்தை உலவவிட்டனர். சுவர்ப் பகுதிகளில் ஓவியம் தீட்டி அழகு பார்த்தனர். மேற்கூரை பகுதிகளில் சித்திரம் வரைந்து வைத்தனர். தங்கள் உடலிலும் அழகோவியம் புனைந்து அழகு பார்த்தனர். பெண்கள் தங்களை அழகு கூட்ட செம்பஞ்சிக் குழம்பால் தொய்யில் எழுதியதைச் சங்க இலக்கியங்கள் சுட்டும். இதன் ஒரு கூறாக இன்றும் மருதோன்றி அணியும் பழக்கத்தைக் காணலாம். அதுபோலவே தங்கள் உடம்பில் பச்சை குத்திக் கொள்ளும் பாங்கும் சில மக்களிடம் உண்டு. திராவிட மக்களிடமும் பல பழங்குடி மக்களிடமும் இருந்து வருகின்றது.

மலையில் கிடைக்கும் ஒருவகைப் பச்சை இலையைப் பச்சை குத்தப் பயன்படுத்துவர். பெரும்பாலும் நரிக்குறவர்களே பச்சை குத்துவர். பச்சை இலைச் சாற்றைப் பிழிந்து பக்குவப்படுத்தி வைத்திருப்பர். அதைப் பச்சைக்குத்தும் இடத்தில் தடவிவிட்டு அதன்மேல் ஒரு ஊசியால் குத்திக் குத்தி எடுப்பர். இப்பச்சை குத்தும் முறையில் படம், கோலம், கண்களின் வடிவம், பாம்பு முதலியனவற்றை வரைந்து அவர்களது கலைவண்ணம் வெளிப்படுத்துவர். தோள்கள், முன் கைகள் இவற்றில் பச்சை குத்தும் முறை அன்றைய முறை. தெலுங்குப் பெண்கள் தம் உடலெங்கும் பச்சை குத்துவது

உண்டாம். பண்டைத் தமிழ்ப் பெண்கள் மார்பில் தொய்யில் வரைந்ததாக இலக்கியம் பேசும்.

பச்சை குத்தும் பழக்கத்தைத் தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியம் 'வள்ளி' எனக் குறிப்பிடுகிறது. இதனை விளக்கும் உரையாசிரியர் இளம்பூரணர் கொங்கையிலும் தோளிலும் எழுதிய 'கொடி' எனக் குறிப்பிடுகின்றார். இதனையே சங்க இலக்கியம் தொய்யில் எழுதுதல் எனக் குறிப்பிடுகிறது.

பண்டைத் தமிழர் தாம் கண்டு மகிழ்ந்த காட்சிகளைச் சுவர்களிலும், கிழிகளிலும், தோலிலும் ஓவியங்களாகத் தீட்டினர். ஓவியக்கலையில் சிறப்புற்றிருந்த சங்க காலத்தில், சந்தனம் போன்ற நறுமணக் கலவையால் மகளிரின் நெற்றியில், தோள்களில், மார்பில், இலை, கொடி, மலர் போன்ற ஓவியங்களை அழகுற எழுதுவர். இக்கலை தொய்யில் எழுதுதல் என்று சொல்லப்படும் . இதனை இளம் பெண்களுக்கு அவர்களது தோழியர் அல்லது பெண் உறவினர் எழுதிவிடுவர். காதல் தலைவனால் ஒரு பெண்ணிற்கு அவளது திருமணத்திற்குப் பின் எழுதப்படும் கரும்பு மன்மதனது வில்லாகக் கருதப்படுவதால் பொதுவாகக் கரும்பின் வடிவ அமைப்பே மகளிரின் தோல்களிலும் மார்பிலும் வரைந்து விடப்படும். இதனை,

பெருந்தோள் தொய்யில் வரித்தும்[29]

வேய்த்தோள் கரும்பெழுதித் தொய்யில் செய்தனை[30]

. . . . . . . . . . . தன் முகத்து

எழுதெழில் சிதைய அழுதனள்[31]

பண்டைக் காலத்திலேயே மகளிர் தங்கள் விரல் நகங்களில் கன்னங்களில், பாதங்களில் அழகிற்காக செந்நிறக் குழம்பால் வர்ணம் பூசிக்கொள்வர். இதனை,

உகிரும் கொடிறும் உண்டாசம் பஞ்சியும்[32]

அஞ்செஞ் சீறடிப் பஞ்சி ஊட்டியும்[33]

என்று கூறுகிறது. அக்காலத்தில் இளம் பெண்டிர் தங்களது இயற்கை அழகிற்கு மேலும் அழகை கூட்டுவது போல் முகம், மார்பு, தோள், ஆகியவற்றில் தொய்யில் எழுதியும், நகம், பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பினால் வண்ணமூட்டியும் ஒப்பனை செய்து கொள்வதில் தனியார்வங் கொண்டிருந்தனர். ஒப்பனை செய்வதில் வல்ல மகளிரும் அக்காலத்தில் இருந்தனர்.

தொய்யில் எழுதும் பழக்கம், தெலுங்கு , கன்னடம், போன்ற இலக்கியங்களில் எடுத்துக்கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் யான் தேடியவரை எங்கும் காணப்பெறவில்லை. மலையாள இலக்கியத்தில்,

ஞான் ஒட்டே கண்ணடச்சேன், ப்ரியஸக,
வரவந்ந ஒரு கூழ் கேக்க வேண்டும்
நீடார் பால்ச் செம்பகத்தின் நறமலர்
நிறமுள்ளோரு நீலேட்சணாயா,
கொண்டேன் செந்தொண்டி வாய்த் தேன்
படமணி தடமன் கொங்கமேல்ச் சாந்தழிச்சேன்,
ஆகப் பா ழென்று போனால் அமயும் இனி நமக்கு
அங்நு உணர்த்தர்வதல்ல[34]

நான் சிறிது கண் அடைத்தேன், அன்புத் தோழனே, வந்த ஒரு ஆனந்த அனுபவம் கேட்க வேண்டும். மேன்மை அமைந்த பால்நிறச் செண்பகத்தின் நறுமலரின் நிறமுள்ள ஒரு நீலக் கண்ணாளின் செய்ய தொண்டிப்பழம் போன்ற வாய்த்தேன் கொண்டேன். தொய்யில் எழுதிய தடமென் கொங்கைமேல் சந்தனத்தை அழித்தேன். எல்லாம் பாழ் என்றாகிவிட்டால் அமையும். இனி நமக்கு அங்கு உணர்த்துவது (ஒன்று) இல்லை.

**இறைவழிபாடு**

தெய்வம் போற்றுதல் முதற்கண் அச்சத்தால் மக்களிடையே விளைந்தது. தகாத செயல் செய்யின் தெய்வம் வருத்தும் என்று நம்பினர். இதனால் அச்சம் வருத்தும் என்றும் பொருள் தரும். அணங்கு, சூர், மேய் முதலிய பெயர்களால் தெய்வங்களைக் குறிப்பிடலாயினர். தமக்கு அச்சத்தை விளைவித்த பல பொருள்களும் பெருஞ்சக்தி படைத்தன என்றும் கொண்டனர். இதனால் மலை, காடு, மரம், கடல் முதலியவற்றிலெல்லாம் தெய்வங்கள் உறைவதாக நம்பி வழிபாடு செய்யலாயினர்.

சங்க காலத் தமிழ் மக்கள் உயர் பண்பாடு உடையவர்கள் என்பதனை அவர்கள் கொண்டிருந்த இறை நம்பிக்கையே நிறுவும், கடவுள் என்னும் சொல்லே அவர்கள் கடவுளைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தினை நன்கு விளக்கும். 'கடவுள்' என்றால் உள்ளத்தை கடந்தது என்பதாகும். உள்ளத்தாலும் உணர இயலாத இயல்பினது 'கடவுள்' என்பது கடவுளைப் பற்றிய உண்மைக் கொள்கையாகும்.

மக்கள் தங்கள் வாழ்வுச் சிறக்கவும் தாங்கள் எண்ணிய வினை இனிது முடியவும் கடவுளிடம் வரம் வேண்டினர். குறவர்கள் மழை பெய்யும் பொருட்டாகப் பலி முதலியன தூவிக் கடவுளை வேண்டுகின்றனர். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்க மழை மிகுதியாகப் பெய்து விடுகின்றது. உடனே மழை நிற்க வேண்டும் என்றும் கடவுளைத் தொழுகின்றனர். இவ்வாறு மழை வேண்டும் காலத்துப் பெய்வித்தற்கும் குறவர்கள் தெய்வம் பரவினர் என்பதை,

> மலைவான் கொள்க, என உயர்பில தூஉய்
> மாலி ஆன்று, மழை மேக்கு உயர்க! எனக்
> கடவுட் வேணிய குறவர் மாக்கள்
> பெயல்கண் மாறிய உவகையர்[35]

என வரும் புறப்பாட்டுப் பகுதியால் அறியலாம். இதுபோன்றே கன்னட மக்கள் இறைவனை வழிபடும்போது

பரம் பொருளின் படையலை

ஒரு அகலமான தட்டிலிட்டு

குருலிங்கமிணைந்த லிங்கத்திற்களித்த[36]

என வணங்குகின்றனர். அனைவரின் வீடுகளிலும் கடவுளுக்குப் படையல் வாழையிலையிலோ, அகலமான தட்டிலோ வைத்து இறைவனை வழிபட்டிருக்கின்றனர்.

மகளிர் கரு வாய்க்க வேண்டும் என்றும் தம் கணவரது பொருள் முயற்சி கைகூட வேண்டும் என்றும் கடவுளை வேண்டுவதாக பரிபாடல் குறிப்பிடுகின்றது. இவற்றால் அக்கால மாந்தர்கள் தெய்வநம்பிக்கை உடையவர்களாய்த் தத்தம் சூழ்நிலைக்கேற்ற வகையில் பல தெய்வங்களை வணங்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

**ஊர்களில் உறையும் தெய்வங்கள்**

மக்கள் தாங்கள் வாழும் ஊர்களிலுள்ள சதுக்கங்களிலும் சந்திகளிலும் எல்லோரும் கூடும் மன்றங்களிலும், வாழும் இல்லங்களிலும் சில தெய்வங்களை வணங்கி வந்தனர்.

சதுக்கமும் சந்தியும் புதுப் பூங்கடம்பும்

மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையினும்[37]

என்பதில் தெய்வ வழிபாட்டு முறையைக் காணலாம். சதுக்கம் என்பது நான்கு தெருக்கள் கூடுமிடம். சந்தி என்பது முச்சந்திகளைக் குறிக்கும். ஊருக்கு நடுவாய் எல்லோரும் வந்து கூடுவதற்குப் பயன்படும் மரத்தடியே மன்று எனப்படும். இந்த மன்றம் அந்தந்த ஊர்களில் ஊருக்கு நடுவாய்ச் செழித்து வளர்ந்திருக்கும் மராஅம், இரத்தி முதலிய மரங்களின் அடியாக இருக்கும். பொதியில் என்பது ஊருக்குப் பொதுவாக அமைந்த கட்டடம். இந்த ஊர் அம்பலத்தில் சித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருக்கும்.

எழுது எழில் அம்பலம்[38]

இங்கே சுவரில் கடவுளின் உருவம் எழுதப்பட்டிருக்கும் பாழ்பட்ட மன்றத்திலிருந்து 'எழுது அணி கடவுள் போகலின்' அங்கு பலி கொடுப்பாரின்றி பலிபீடமும் அங்கு கிடந்ததை அகப்பாடல் தெரிவிக்கிறது. மேலும் இப்பொதியில் கந்து எனப்படும் தூள் வடிவமும் வணக்கத்துக் குரியதாய் இருந்தது. பாழ்பட்ட ஒரு பொதியில் நாட்டப்பட்ட ஒரு கந்தின் மேல் மரையா (கலைமான்) சொறிந்ததினால், அந்தக் கந்து அசையும் நிலையை அடைந்து விடுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் அப்பாகம் கருநிறமாக விளங்கியது என்பதை 'மாத்தாள் கந்தின்' என்பதனால் அறியலாம். இந்தக் கருநிறம் வழிபடு பொருள்கள் பட்டதனால் ஏற்பட்டது போலும் ஊருக்குப் புதியவராய் வருவோர் பொதியியலில் தங்கி அங்குள்ள கந்தினை வழிபடுவர். அரசன் சிறைப்பிடித்து வந்த மகளிரைப் பொதியில் மெழுக்கு முதலியப் பணிகளைச் செய்யுமாறு பணித்ததாகவும் தெரியவருகிறது. திராவிடர்கள் நடுகல் வழிபாடு என்ற முறையினையும் அறிந்திருந்தார்கள். ஒருவருக்குக் கல்வி நன்றாக வரவேண்டும்மானால் அவர்கள் சரஸ்வதி அல்லது கலைமகள் என்ற தெய்வத்தை வணங்குவர்.

> யாவரும் இவ்வுலகில் உயிர் வாழ்வதற்கு உணவே இன்றியமையாதது என்பதனை அறியாதார் இலர். உணவுக்குப் பிறகு தான் ஏனைய ஆயினும் சங்க காலத் தமிழ்மக்கள் உணவினும் முதன்மையாகக் கடவுளைக் கருதி வாழ்ந்தார்கள்.[39]

ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்தில் பாடற் பொருள் முதல், கரு, உரி என வகுக்கப்பட்டுள்ளது.

கருப்பொருள் பற்றிய நூற்பா

> தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> இவ்வகை பிறவும் கருவென மொழிப[40]

என அமைந்துள்ளது. இதில் உணவுக்கு முன்பு தெய்வத்தை வைத்துள்ள சீர்மையை உணர்ந்து உணவினும் தெய்வமே முதன்மையாகப் போற்ற வேண்டிய ஒன்று என்று அன்று கருதியிருந்தனர் என்பதனைத் தெரிந்து கொள்ளலாம்.

முதற்பொருளாம் நிலம் பற்றிக் கூற வந்தவிடத்து நிலத்துக்குரிய பிற சிறப்புகளை விரித்துக் கடவுட் சிறப்பையே தொடர்புப்படுத்திக் கூறியுள்ளமையாலும், கடவுட் கொள்கைக்கு அக்கால மக்கள் வைத்திருந்த ஏற்றத்தை எளிதில் அறியலாம். இதனையே தொல்காப்பியர்,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே[41]

என்று கூறியுள்ளார். முல்லைக்கு மாயோனும் குறிஞ்சிக்கு முருகனும் மருதத்திற்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும் கடவுளர்களாகக் கூறப்பட்டுள்ளனர்.

### அருவ உருவ வழிபாடு

அக்காலத்தில் பெருங்கோயில்கள் இல்லை. சிறு கோயில்களே சிறப்புற்று விளங்கின. அக்கால மக்கள் தெய்வம் எங்கும் நிறைந்திருப்பதாக எண்ணினர். எனவே அவர்கள் இயற்கை வளம் சூழ்ந்த எழில் இடங்களில் எல்லாம் தெய்வத்தை வணங்கி வழிபட்டனர். அன்று அருவ வழிபாடும் இருந்தது. உருவ வழிபாடும் இருந்தது.

தமிழர்கள் முருகனைக் காட்டில் வைத்து வணங்கினர். சோலைகளில் அமைத்துத் தொழுதனர். ஆற்றங்கரைகளிலும் குளத்தங்கரைகளிலும் முருகனைப் பூசித்து வழிபட்டனர். முச்சந்தி, நாற்சந்தி மற்றும் பல சந்திகளின்

சந்தடியில் முருகனை வணங்கினர். புதிதாகப் பூத்த கடம்ப மரங்களில் முருகனைக் கண்டு வணங்கினர். மரத்தடியிலும், அம்பலத்திலும் அவனை வணங்கிப் போற்றினர் என்பதை,

காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப் பூங்கடம்பும்
மன்றமும் பொதியினும் கந்துடை நிலையினும்[42]

என்னும் பகுதியால் அறியலாம்.

சங்க நூல்களில் உருவ வழிபாடு காணப்பெறுகிறது. அது தமிழர்களின் தொன்மையிலிருந்து தோன்றிய வழக்கம் என்பர். வீரர்களுக்கு எடுக்கும் நடுகல் வழிபாட்டைத் தொடர்ந்து கடவுளர்க்கும் கற்சிலைகள் செய்து வணங்கினர். கடைச்சங்க காலத்தில் இவ்வழக்கம் தமிழகமெங்கும் பரவியிருந்தது.

பண்டைத் தமிழர் முருகனை ஆறுமுகங்கொண்டும் பன்னிருகைக் கொண்டும் உருவமாகப் படைத்து வணங்கினர். இவ்வழக்கத்தை அதிகமாக திருமுருகாற்றுப்படையில் காணலாம்.

### திருமால்

திருமால், மாயோன் என்று கூறப்படும் திருமால் அல்லது விஷ்ணு முல்லை நில மக்களான இடையர்களின் தெய்வமாகும்.

மண்ணுறு திருமேனி புரையுமேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய்யோன்[43]

என்பதை அறியலாம்.

மலையாள இலக்கியத்தில்,

வந்நிட்டு அன்று விஷண்ணனாயது அறிவன்
மற்றொன்று கேதம் மம[44]

என்ற பாடலில் திருமாலை வழிபட்ட குறிப்பு காணப்படுகின்றது.

**சிவன்**

*சங்க காலத்தில் சிவபிரானே முழு பரம்பொருளெனத் தமிழர் கருதி யொழுகியதை,*

**பணியிய ரத்தை நின்குடையே முனிவர்**

**முக்கட் செல்வர் நகர் வலஞ் செயற்கே**[45]

*எனவரும் பகுதியால் 'அரசரானோர் முக்கட் செல்வர் திருக்கோயிலை வலம் வருங்கால் மட்டுமே அவர்தம் வெண் கொற்றக்குடை தாழும்' என்று கூறுப்படுகின்றது.*

*தெலுங்கு இலக்கியத்தில் ராயரகுநாதன் என்பவர் படைத்த 'பார்வதி பரிணயம்' நூலில் சிவன் வழிபாடு பற்றிக் கூறப்படுகின்றது.*

*கன்னட இலக்கியத்தில் ஹரிஹரன் படைப்புகளில் சிவனை வழிபட்ட குறிப்பும் காணப்படுகின்றது.*

*தெலுங்கில் 'மைராவண சரித்திர'த்தில் விஜயநகர மன்னர்கள் காலத்தில் அனுமன் வழிபாட்டு முறை இருந்துள்ளது.*

**இந்திரன்**

*மருதநில மக்களின் மனதிலுறை தெய்வம் இந்திரனாவான். அவனுக்குக் கோயில் இருந்தது பற்றிப் புறநானூறு,*

**. . . . . . . . . . ஒண்டோடி**

**வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்**[46]

*என்ற பாடலின் மூலம் அறியப் பெறுகிறது.*

*இந்திரன் வழிபாட்டு முறை தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக் கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை எங்கும் காணப்பெறவில்லை.*

**இலக்கியங்களில் அவல்**

பழைய இலக்கியங்களில் அவல் பற்றிய செய்திகள் உள்ளது. தானிய நெல்லிலிருந்தும், மூங்கில் நெல்லிலிருந்தும் அவல் கிடைக்கிறது என்பதனை,

> பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
> பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கை[47]

நெற்கதிரின் முதிர்ந்த பச்சை நெல்லை உரலில் இட்டு அவலாக்கி மகளிர் இடிப்பர் அது பாசவல் எனப்படும். பெருநெல் என்ற கார் நெல்லை கார்த்திகை விழாவிற்குக் காரவலிடித்துப் பால் பொங்கல் சமைத்துக் கடவுளுக்குப் படைத்து உண்பர். இதனையே,

> . . . . . . . . .முன்றில்
> அவல் எறி உலக்கைப் பாடு விறந்து.[48]

அவலோடு பாலும் கரும்புச்சாறும் கலந்து உண்டதாகச் சங்க இலக்கியம் கூறுகிறது. முற்றத்தில் உரலில் இட்டு உலக்கையால் அவலை இடிப்பர். பக்குவமான நெல்லை அவல் இடிக்கப்பயன்படுத்துவர். இதனையே,

> அவற்பதம் 'என்பது' அவல் இடிக்கத் தகுந்த
> செவ்வி என்பதாகும்.[49]

கரும்பையும் அவலையும் விற்றோர் மற்றாக மான் தசையையும் கள்ளையும் பெறுவர். அவலை விற்போர் கூறுபடுத்தி விற்பர். கரும்புச் சாற்றுடன் பால் பெய்த செந்நெல்லாகிய அவலைப் பாணர் முதலியோர்க்குப் பகிர்ந்து கொடுப்பர்.

அவல் திராவிட மக்களால் பரவலாக உண்ணப்படும் ஓர் உணவுப் பொருள். அவலைப் பொதுவாக உப்பிட்டோ அல்லது பால் சீனி கலந்தோ உண்பர். நீரில் ஊற வைத்துப் பால் கலந்து கஞ்சி செய்தும், பாயாசம் செய்தும் பல இனிப்புப் பலகாரங்கள் செய்தும் உண்பர்.

தமிழ், தெலுங்கு, கன்னட மக்கள் கலைமகள் விழா அன்று அவலைத் தெய்வத்திற்குப் படைப்பர்.

கண்ணனுக்கு அவல் மிகவும் பிரியமான உணவுப் பொருள். ஆகவே கோகுலாட்டமி, கிருட்டிண ஜெயந்தி நாட்களில் அவல் பொரி செய்து படைத்து வழிபடுவர். பொதுவாக நோன்பு நோற்கும் மக்கள் விரதத்திற்காக அவலைப் பயன்படுத்துகின்றனர்.

தமிழ் மக்கள் கார்த்திகை தீபத்தன்று அவல் பொரி செய்து வெல்லத்துடன் கலந்து உருண்டை செய்து இறைவனுக்குப் படைப்பர்.

தெலுங்கு மக்கள் வயலில் விதை விதைக்கிற போது நெல்லை ஊற வைப்பர். அவ்வாறு முளை வந்த நெல்லை விதைக்கிற அன்றே முதன்முதலில், வீட்டுச் செல்வமான பெண் குழந்தைக்கு மூன்று முறை முறம் நெல்லை எடுத்துக் கொடுப்பர். பின் எஞ்சிய முழு நெல்லை அவலாக்கி அன்றே அந்த வீட்டார் சாப்பிடுவர். அன்று பெரும்பாலும் வேளாண்மை செய்யும் எல்லாத் தெலுங்கு மக்கள் வீட்டிலும் அவல் இடிக்கப்படும். அந்த அவலைப் பல மாதங்களுக்கு வைத்துக் கொள்வர். தெலுங்கு வருடப்பிறப்பில் அவல் ஓர் இன்றியமையாப் பொருள். சித்திரை வருடப் பிறப்பன்று குமரி மாவட்ட மக்களில் பலர் அவலைப் பலகாரமாக்கித் தின்பர். அன்று காலையில் வேறு உணவை உண்ணமாட்டார்கள். அவலை மட்டும் உண்பர்.

கன்னட மக்கள் வாரத்தில் இரண்டு மூன்று முறை காலை, மாலைச் சிற்றுண்டியாக அவல் பயன்படுத்துவர்.

மலையாள மக்கள் 'ஓணத்'தன்று அவலுடன் அவல் பொரி சேர்த்து மூன்றுமுறை இரு கைகளால் உறவினருக்கும் ஏழைகளுக்கும் வாரி வழங்குவர்.

மக்கள் பலரும் அவலுடன் பொரியையும் கலந்து இனிப்பிட்டுப் பிறருக்குக் கொடுப்பர். தெய்வத்திற்குப் படைப்பர். பிள்ளையாருக்கும்

எள்ளுப் பொரித்த பொரியும் இடித்த அவலில் கலந்து படைப்பது மக்கள் வழக்கமாக இருக்கின்றது.

**பண்டிகைகள்**

பழங்காலத்து தமிழ் மக்கள் கார்த்திகைத் திருநாளைக் கொண்டாடினர். கார்த்திகை நாளிலே விளக்கேற்றி வைப்பார்கள். மலர் மாலைகளைத் தொங்க விடுவார்கள். அதனைப் பலரும் கூடி பார்த்து மகிழ்ச்சியடைவார்கள்.

> குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து
> அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்,
> மறுகு விளக்கு உறுத்து, மாலை தூக்கிப்
> பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய விழவு.[50]

இதில் கார்த்திகைத் திருநாளைக் கொண்டாடிய முறை அறியமுடிகின்றது. சிறிய முயலாகிய களங்கம் தன் மார்பிலே விளங்கும்படி முழுமதி தோன்றும்; உரோகிணி சந்திரனுடன் சேர்ந்திருக்கும். இத்தகைய கார்த்திகை நாள் இரவில் வீதியிலே விளக்கேற்றி வைப்பர்; மலர் மாலைகளைத் தொங்கவிடுவர்; பழமையான சிறந்த ஊர்களிலே மக்கள் பலரும் கூடி விழா கொண்டாடுவர்.

தைந்நீராடுதல் என்னும் பண்டிகையையும் பண்டைத் தமிழ் மக்கள் கொண்டாடி வந்தனர். பெண்கள் நோன்பிருந்து தை மாதம் முதலில் நீராடுவர். இதற்குத்தான் தைந்நீராடல் என்று பெயர். இதனை நற்றிணை,

> தை இத் திங்கள் தண்கயம் படியும்
> பெரும்தோள் குறுமகள்[51]

என்று கூறுகிறது. தை மாதத்தின் முதல் நாளிலே குளிர்ந்த நீர் நிறைந்த குளத்திலே நோன்புடன் நீராடும், பெரிய தோள்களையுடைய இளம் பெண் என்பது இதன் பொருள்.

தைந்நீராடும் வழக்கம் கலித்தொகையிலும் காணப்படுகிறது என்பதை,

தையின் நீராடிய தவந்தலைப் படுவாயோ[52]

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

கன்னட இலக்கியத்தில் நயசேனன் படைப்புகளில் நோன்பு பற்றிய குறிப்பு வருவதால் அந்நாட்டு மக்களும் இப்பழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

தெலுங்கு, மலையாளம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக் கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடிய வரை இப்பழக்கம் இருந்ததாகக் காணப்பெறவில்லை.

**வெற்றிலைப் பாக்கு போடும் பழக்கம்**

வெற்றிலைப் பாக்கு போடும் பழக்கத்தைத் திராவிட மக்கள் அனைவரும் கொண்டுள்ளனர். வெற்றிலைப் பாக்கு போடுவதில் தமிழர்கள் சிறந்து விளங்குகின்றனர். வெற்றிலைப் பாக்கு உண்பதில் மலையாளிகள் மிக்க ஈடுபாடு காட்டுவர். கமுகு வெத்திலை குளிர்ப் பகுதியான அங்கு அதிகமாக விளைகின்றன. கமுகு அங்கிருந்து பிற இடங்களுக்கு ஏற்றுமதி ஆகின்றது. பிறப்பு முதல் இறப்பு வரை எல்லாச் சடங்குகளிலும் இறைவழிபாட்டிலும் வெற்றிலை முதன்மைப் பொருளாக அமைகிறது. மலையாளிகள் பாக்கை அடைக்காய் என்று வழங்குவர். சுண்ணாம்பை 'நூறு' என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. வெற்றிலையை 'வெத்ல' என்பர். வெற்றிலையில் மையிட்டுப் பார்த்து மந்திரம் சொல்வது மலையாளிகளின் மந்திரப் பழக்கமாகும். வெற்றிலை பாக்கால் சோதிடம் சொல்வது அவர்களின் மரபு. தெலுங்கில் தமல் பாக்கு என்றும், வக்கா ஆக்கு என்றும் வெத்திலைப் பாக்கு என்றும் குறிப்பிடப்படுகிறது.

திராவிடர்கள், கனவில் வெற்றிலையைக் காண்பது நல்லது அல்ல என்பர். திருமணம் போன்ற மங்கல நிகழ்வுகளைப் பேசுகையில் வெற்றிலை

வைத்துப் பேசி வாக்குக் கொடுத்தால் அதனை மீறக் கூடாது என்பது வழக்கு. விருந்துகளில் வெற்றிலைப் பாக்கு கொடுக்கின்றனர். வெற்றிலையால் வாய் சிவந்தால் மனைவி மீது அன்பு உண்டு என்று பொருள் கூறுகின்றனர். சித்த வைத்தியத்தில் வெற்றிலை பெரும் பங்கு வகிக்கின்றது.

**அணிகலன் அணிதல்**

பண்டையத் தமிழ் மக்கள் அணிகலன் அணிவதில் மிகுந்த ஆர்வம் காட்டியுள்ளனர். நடன மகளிர் நீண்ட அணிகலன்களைக் கழுத்தில் நிரம்ப அணிவதை மரபாகக் கொண்டுள்ளனர். விழா, விருந்து, வீட்டுச் சடங்கு, நாட்டுச் சடங்கு, நடனம், இசை போன்றவற்றில் அப்பெண்ணின் உடலில் அணிகலன்கள் பெரும்பங்கு கொள்கின்றன. காரணம் நகை அணிந்தால் தான் சமூகத்தில் தனி மதிப்பு என்று நம்புவதுதான் காரணம்.

**தலையணிகலன்**

அக்காலத்தில் மகளிர் கூந்தலில் பல்வகை அணிகலன்களை அணிந்தனர். வாடும் மலர் மாலைகளை அணிந்தவர் வாடாப் பொன்னரி மாலைகளையும் கூந்தலில் சூடினர்.

புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்
தொடையமை மாலை விறலிய மலைய[53]

தொய்யகம் என்பது ஒரு தலைக்கோலம் - தொய்யகம் தாழ்ந்த கதுப்புப் போல (கலித்.28:6) தெய்வவுத்தி என்பது இன்னொரு தலைக்கோலம் இதனைச் சீதேவியார் என்றுங் கூறுவர்.

தெய்வவுத்தியொடு வலம்புரி வயின் வைத்து[54]

இவ்வாறு சங்க காலத்தில் தலையணி அணிதல் என்பது பெருவழக்கமாக இருந்தது.

**காதணி**

*பெண் குழந்தைகளுக்குக் காதில் அணிகலன்கள் அணிந்து அழகு பார்ப்பர். பொதுவாக எல்லாப் பெண்டிரும் காதில் அணிகலன்கள் கண்டிப்பாக அணிந்திருப்பர். சுறாமீன் வடிவாக அமைந்த மகரக் குழைகளும் அணிவது உண்டு.*

ஒருத்தி, செயல் அமை கோதை நகை;
ஒருத்தி, இயல் ஆர் செருவில் தொடியொடுதட்ப;
ஒருத்தி, தெரிமுத்தம், சேர்ந்த திலககம்;
ஒருத்தி, வரி ஆர் அல்குல் காழகம்,
ஒருத்தி, அணிஆர் ஞெகிழ்த்து அணி சுறாத் தட்ப[55]

*இப்பாடலில் மகளிர் அணியும் தொடி, குழை, சிலம்பு முதலியன குறிக்கப்பட்டுள்ளன. இதனை,*

மட்டிய லுஜ்ஜவல மணி நூபுரம் புலு
மொலநுலு வஸ்த்ரமுல் முத்தியமுலு
கட்டு வடம்புலு கட்டிநுள்லுனு சுத்த
ஸரிதீகெ மிங்குலு ஸந்தி தண்ட
லங்கு ளீயகமுலு ஹாலி கங்கணமுலு
சேகட்டு பாலெலு சென்னு மெறுபகு
டாகுலு ஸரிபெண லாலக்தகமு பூ,த
காடு கதிலகம்பு[3] கம்ம புவ்வுலு[56]

*என்று தெலுங்கு இலக்கியம் குறிப்பிடுகின்றது.*

*தண்டியின் 'த்சகுமாரசரித்ர' என்ற நூலில் கேதன அகல்யாவை வருணித்தப் பாடலில் அவள் அணிந்துள்ள ஆபரணங்கள் மெட்டி, வட்டாணம், முத்து மாலைகள், கைவளையல்கள், தண்டவங்கி, கம்மல் போன்றவை இடம் பெற்றுள்ளன. மலையாள இலக்கியத்தில்,*

சந்தனக் கல்லின்பெற யரிகெ செந்து
சந்தன முரஸிக் குறி வரச்சு
கண்ணாடி நோக்கித் திகலம் தொட்டு

பீலித் திருமுடி கெட்டி வச்சு
அஞ்ஞனம் கொண்டவள் கண்ணெழுதி
குங்குமம் கொண்டவள் பொட்டு குத்தி
கஸ்தூரி களபங்ஙள் பூசுந்நுண்டே
........... ............
உறுமி யெடுத்து அரயில் பூட்டி[57]

என்று கூறப்படுகின்றது. சந்தனக் கல்லினருகில் சென்று சந்தனம் இழைத்துக் கோடிழுத்துக் கண்ணாடி பார்த்துத் திலகம் இட்டாள், பீலி சொருகித் தலை முடித்து கண்ணுக்கு மை தீட்டினாள். தன் நெற்றியில் ஒரு பொட்டும் இட்டு கஸ்தூரி களபங்கள் பூசுகிறாள். பின்பு எஃகு வாள் (எடுத்(து)) இடையிற்கட்டி புறப்பட்டாள்.

'எஃகு வாள் எடுத்து இடையிற் கட்டி' என்ற வரி கவனத்திற்குரியது. கேரள நாட்டுப் பெண்கள் அக்காலத்தில் அழகு செய்யும் அணிகலன்களை மட்டும் தாம் ஒப்பனைக்குரிய பொருள்கள் எனக் கருதவில்லை. சாஸ்திரியமான உடற்பயிற்சிகளைச் செவ்விதிற் செய்து வந்ததால் படைக்கலன்கள் தாங்கிப் போர் செய்யும் திறமை பெண்கள் சமூகத்தின் ஒரு பகுதியினருக்கேனும் கைவந்திருந்தது.

**கழுத்தணிகள்**

பண்டைத் தமிழக மகளிர் கழுத்தணிகள் பல அணிந்தனர். அவை நுட்பமான வேலைத் திறனுடையவை. சில பொன்னில் செய்யப்பட்டு வைரங்கள் இழைக்கப் பெற்றிருந்தன. இதனை,

திருமணி பொருத திகழ்விடு பசும் பொன்
வயங்குகதிர் வயிரமொ டுறழ்ந்து[58]

என்ற பாடலின் மூலம் அறிய முடிகின்றது.

**மலையாள இலக்கியத்தில்**

**கார் ஏலும் நீல வார் மன் புரிகுழல் ஒளிக்கொண்டு**
**எங்நு மோக்கன்றி ஆக்குந்**
**தாரே ாஸ்யா தனித் தேன் சிதறின வசனா**
**சோதி மேவும் நதாங்கீ**
**ஒரோ பூஷாவிஷை: கனக மணிமயை:**
**காமினீ நாயிகாஸா**
**மாராஸ்த்ரம் மங்கலாங்கம், மழறின நயனா**
**பூஷயா மாஸ பூய**[59]

மேகம் போன்ற நீலவார் மென் புரிகுழலின் ஒளியாள் எங்கும் ஒக்க அந்தியாக்கும் மதிமுகமுடையாளே, தனித்தேன் சிந்தும் மொழியாள், சோதி நாளில் பிறந்தவள் - அவ்வழகியாகிய தலைவி பொன்னாலும் மணியாலுமாகியச் சிறந்த அணிகளை ஒவ்வொன்றாக அணிந்து மாரனது அம்பு போன்ற தன் எழில் மேனியை மீண்டும் மீண்டும் அழகுறச் செய்தாள்.

**கையணிகள்**

சங்க காலத்தில் ஆடவர், மகளிர், சிறுவர், யாவரும் கைகளில் கடகம், தொடி என்னும் அணிகளை அணிந்தனர். ஏழை முதல் அரசகுலப் பெண்டிர் வரை, சங்கு வளையல்களை அணிந்தனர்.

**வாளரம் பொருத கோணோர் எல்வளை**
**அகன்தொடி செறித்த முன்கை.**[60]

தொடி, கடகம் என்பவைகளும் முன்கையில் அணியப்படுவன. வெள்ளியினால் செய்த வளையல்களையும், முத்தினை அழுத்திச் செய்த தொடியினையும் அணிந்தனர். இவ்வளையல் பல நுண்ணிய வேலைப்பாடுகள் உள்ளனவாகச் செய்யப்பட்டிருக்கின்றன.

**விரலணி**

கை விரல்களில் மோதிரங்கள் அணிவது இருபாலார்க்கும் உரியது. விரலில் பகுவாய் மோதிரம் அணிந்தனர். இது மீன் வாய்திறப்பது போன்ற வடிவுடையது. இது முடக்கு மோதிரம் என்றும் கூறப்படும்.

வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்
செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்து.[61]

சுறாமீன் வடிவத்தில் அமைந்த மோதிரத்தை அணிந்ததாகக் கலி. (84: 22-23), நற். (188:3-4) பாடல்களும் கூறுகின்றன.

**இடையணிகள்**

சங்க கால மகளிர் இடையில் மேகலை, காஞ்சி என்பவற்றை அணிந்தனர். இவை ஆடைக்கோர் இறுக்கியாக இருந்ததுடன் இடையின் அழகையும் காட்டியது. இன்றும் இடையணி அணியும் பழக்கம் வழக்கிலுள்ளது. இவை பல முத்துவடங்கள் தொங்கவிடப்பட்டுப் பட்டையாக அமைக்கப்படுவன.

இரு கோவை முதல் முப்பத்திரண்டு கோவை ஈறாக இயன்ற மேகலைகள் உண்டு. இவற்றில் பதினாறு வடங்கொண்ட மேகலை கலாபம் என்றும் பதினெட்டு வடங்கொண்டது பருமம் என்றும் முப்பத்திரண்டு வடங்கொண்டது விரிசிகை என்றும் கூறப்படும்.

கைத் தொழிலாலே பொலிவு பெற்ற பொன்மணிகள் இடையிடையே அமைக்கப்பட்ட மேகலைகள் அணிந்தனர். அதனோடு பவழ வடமும் அமைந்த மேகலை அணிவதும் உண்டு.

கை வினைப் பொலிந்த காசமை பொலங்காழ் மேல்
மையில் செந்துகிர்க் கோவை அவற்றின் மேல்[62]

என்று கலித்தொகையும் ஐங். (316-1)வும் கூறுகிறது.

**காலணிகள்**

சிலம்பு கிண்கிணி என்பன மகளிரணியும் காலணி வகைகள். சிலம்பு பெரும்பாலும் வெள்ளியால் செய்யப்பட்டது. பொன்னால் செய்யப்படுவதும் உண்டு. சிலம்பினுள் இரத்தினக் கற்களையும் முத்துக்களையும் பரலாக இட்டுச் செய்வர்.

அரிபெய்து பொதிந்த தெரிசிலம்பு.[63]

நடக்கும்பொழுது சிலம்புவதால் இவ்வணி சிலம்பு எனப்பட்டது. மகளிர் காலிலணியும் மற்றொர் அணி கிண்கிணி. இது அங்காந்த தேரையின் வளையின் வாய் வடிவத்தில் செய்யப்பட்டிருந்தது என்பதை கலித். 86:9, குறு. 148:2 ஆகிய பாடல்களின் மூலம் அறியலாம்.

ஆடவர் காலில் அணி செய்வது கழல். பூத்தொழிலும் அரும்பு வேலைப்பாடும் உடைய கழல்கள் அணிந்தனர். இக்கழல் பொன்னால் செய்யப்பட்டது ("பொலங்கழல்" புறம்.3) கழல்கள் அழகாகத் திருத்தமுறச் செய்யப்பட்டன.

மேலே கூறிய அணிகலன்களில் ஒரு சில அணிகலன்களை தெலுங்கு, மலையாள, கன்னட மக்கள் அணிந்ததாக இவ் ஆய்வு பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை எங்கும் காணப் பெறவில்லை.

**விருந்தோம்பல்**

பண்பாட்டைப் போற்றி வாழ்ந்தவர் பண்டைத் தமிழர். அவர்கள் போற்றிய பண்புகளில் தலையாய பண்பு விருந்தோம்பல். விருந்து என்றால் புதுமை, புதியவர் என்று பொருள். 'விருந்தே புதுமை' என்பர் தொல்காப்பியர். இன்று உற்றார், உறவினர் நண்பர்களையும் விருந்து என்கின்றோம். பண்டைக் காலத்தில் முன் அறியாதவர்களாய் வீடுதேடி வருவோரே விருந்தினர் எனப்பெற்றனர். அக்கால மக்கள் அவர்களை அகமும் முகமும் மலர வரவேற்று விருந்தோம்பினர்.

பண்டமாற்றுமுறை வழக்கிலிருந்த அக்காலத்தில் போக்குவரத்து வசதிகளும் இல்லாத சூழ்நிலை நிலவியது. எனவே இரவலர்கள் மட்டுமின்றி ஏனையோரும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு கால்நடையாகவே நடந்து செல்ல வேண்டியிருந்தது. உணவு விடுதிகளும் இல்லாத காரணத்தினால் உண்டிக்கும் உறையுளுக்கும் அனைவரும் செல்லும் ஊர்களையே நம்ப வேண்டியிருந்தது. ஆகவே புதிதாக வருவோர்க்குப் பசிக்கு உணவளிக்க வேண்டிய நிலை இருந்தமையால் விருந்தோம்பும் பண்பாடு தமிழகத்து இல்லங்களில் உருவாயிற்று.

இப்பண்பாடு தொல்காப்பியர் காலத்திலேயே போற்றப் பெற்றது என்பதை,

புகா அக்காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகா அ விருந்தினர் பகுதிக் கண்ணும்
வேளா எணதிரும் விருந்தின் கண்ணும்[64]

என்று களவியலிலும்,

விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்[65]

என்று கற்பியலிலும் இடம்பெற்றுள்ள நூற்பா விருந்தோம்பலின் சிறப்பைக் கூறுகின்றது.

இல்லற மகளிரின் இன்றியமையாய் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். பெண்ணின் இலக்கணம் கூறும் தொல்காப்பியர் இல்லறத் தலைவியின் கடமைகளைக் கூறும்போது விருந்தோம்பல் பண்பாட்டையும் இணைத்து

விருந்து புறந்தரும்தலும் கற்ற மோம்பலும்[66]

என்று கூறுகின்றார். இவ்வாறு தொல்காப்பியர் காலத்தில் போற்றிய விருந்தோம்பல் பண்பு இன்றும் திராவிடர்களின் வாழ்க்கையில் நடைமுறையில் இருந்து வருகின்றது. விருந்தோம்பல் என்பது அவரவர் தகுதிக்கு ஏற்றார் போல் விருந்து படைக்கின்றனர்.

**விருந்தோம்பும் முறை**

விருந்தோம்புவோர்க்கு வேண்டிய இன்றியமையாப் பண்புகள் அகமலர்ச்சி, முகமலர்ச்சி, இன்சொல் ஆகியன. விருந்தினர் அனிச்ச மலரைப் போன்ற மென்மைத் தன்மையர். அனிச்சமலர் முகர்ந்தால் வாடி விடும் என்று வள்ளுவர் கூறுகின்றார்.

இரவு நேரத்திலும் முக மலர்ச்சியுடன் விருந்தோம்பும் தலைவி

அல்லிலாயினும் விருந்துவரின் உவக்கும்
மெல்லியற் குறுமகள்[67]

என்று நற்றிணை விருந்தின் சிறப்பினைப் பற்றிக் கூறுகிறது.

ஒருநாள் இரண்டு நாட்கள் அல்ல. பல நாட்கள் தொடர்ந்து பலரோடு சென்றாலும் முதல் நாள் எப்படி அன்போடும் ஆர்வத்தோடும் இனிது வரவேற்றானோ அதேபோல் என்றும் விருப்புடன் வரவேற்கும் பண்பினன் அதியமான் நெடுமானஞ்சி என்பதனை ஔவையார்,

ஒரு நாட் செல்லல் மருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரோடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ[68]

என்று கூறுகின்றார். விருந்தோம்பலை பற்றி கன்னட இலக்கியம்,

காகே ஒந்அகலு கண்டரே தன்ன பலகவனு
கோழி ஒந்து கூட்டக்கா கண்டரே கூகிகரேயரே தன்னா
குலவெல்லா சிவ பக்தனாகி பந்த பக்ஸ வில்லதந்தரே
காகே கோழி ஒந்தே கரகஷ்ட கூடலசங்கமதேவா[69]

என்று காக்கை, கோழி ஆகிய இரண்டும் உணவைச் சாப்பிடும் போது கத்தி தன்னுடைய இனத்தைக் கூப்பிட்டு அவ்வுணவினை பகிர்ந்து உண்ணுகின்றன. அப்படி இருக்க மனிதன் மட்டும் ஏன் உணவை மற்றவர்களுக்குக் கொடுத்து உண்ணுதல் கூடாது என்று பசவேசர் கூறுகின்றார். இவர் உணவினை பகிர்ந்து உண்ணுதலில்தான் விருந்தோம்பலின் சிறப்பு பெருமைப்படும் என்கின்றார்.

**நம்பிக்கைகள்**

ஆன்றோர்கள் தொன்றுதொட்டே ஒரு செய்தியை நம்பி வருவதைப் பழக்கமாகப் பின்பற்றியே அடுத்தடுத்தத் தலைமுறையினரும் தொடர்ந்து நம்பி வருவது நம்பிக்கை ஆகும். இந்நம்பிக்கை பெரும்பாலும் அச்சத்தின் அடிப்படையில்தான் தோன்றுகிறது. இயற்கையோடு இயைந்த மனிதன் இயற்கையையும் தன் உறவாகக் கொள்கிறான். உரிமையாகவும் கொள்கிறான். காற்று, மழை, தீ, தண்ணீர், மரம், செடி, விலங்கு முதலிய அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய அனைத்தையும் உயிருள்ளவையாகக் கருதினான். அவற்றிற்கும் சினம், மகிழ்ச்சி, துன்பம் ஆகியன இருப்பதாக எண்ணினான். அவற்றிற்குத் தன்னால் ஊறு விளைந்தால் அவையும் தனக்கு ஊறு விளைவிக்கும் என்றும் அவற்றிற்குத் தன்னால் நிறைவு கிட்டினால் அவை தனக்கும் நன்மை தரும் என்றும் நம்பினான். அந்த நம்புதலின் முடிவாக அச்ச நம்பிக்கையும் மகிழ்வு நம்பிக்கையும் இயற்கை ஆற்றல்கள் மீது அவனுக்கு ஏற்பட்டன. எல்லா இன மக்களிடத்தும் நம்பிக்கைகள் இருக்கத்தான் செய்கின்றன.

**பல்லி சொல் பலன்**

மாந்தர்வாய் பிறக்கும் நற்சொல் கேட்பது போலவே பல்லி சொல்லும் சொல்லையும் நிமித்தமாகக் கருதினர். தலைவனைப் பிரிந்த நிலையில், தலைவி அவன் சென்றது முதல் ஒவ்வொரு நாளும் சுவரில் குறியிட்டு அதனை நாள்தோறும் எண்ணி வருத்தத்துடன் வாழ்கிறாள். வருத்தத்தின் காரணமாகத் தன் கையைக் கன்னத்துடன் சேர்த்து ஊன்றிக் கொண்டு படுக்கையில் பிரிவு எண்ணி அழுத கண்ணினளாய் வருந்தியிருக்கிறாள். இந்நிலையில் அவளுடைய துயரத்தை நீக்குவதைப் போலப் பல்லி ஒலித்ததாம். அச்சொல் அவளுக்கு ஆறுதலைத் தந்ததாம். மனைவியைப் பிரிந்து சென்ற கணவன் தன் மனைவி பல்லியின் நிமித்தம் நோக்கி வருந்தியிருக்கும் நிலையை நினைத்துக் கூறியதாக

அகம் 381 ஆம் பாடல் விளக்குகின்றது. பல்லியின் சொல் நன்னிமித்தமாய் கணவன் வருகையை உறுதி செய்வதாக நம்பினர். இதனை,

இனைநலம் உடைய கானம் சென்றோர்
புனை நலம் வாட்டுநர் அல்லர்; மனைவியின்
பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே[70]

என்னும் தோழியின் கூற்று இதற்குச் சான்றாகும். பல்லி சொல் கேட்டு மகளிர் இருக்கும் நிலையைச் சங்கப் பாடல்களில் பல இடத்தும் காணலாம் (நற்.333:10-12; அகம் 9:18-23; 151:11-15; 259:14-17; 357:10-12). சங்க கால மக்கள் போலவே திராவிட மக்கள் அனைவருமே பல்லி சொல் பலன் கேட்கின்றனர். பல்லி சொல்லில் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ளனர்.

**மந்திரத்தில் நம்பிக்கை**

பண்டைத் தமிழர்கள் மந்திரத்தில் நம்பிக்கை வைத்திருந்தனர். இதனை சங்க இலக்கியப் பாடலில் காணலாம். போரில் புண்பட்ட வீரரது புண்ணை ஆற்றுவதற்கு அவருடைய மனைவியர் என்ன செய்தனர் என்பதை,

தீம் கனி இரவமொடு வேம்பு மனைச் செரீஇ,
வாங்கு மருப்பு யாழொடு பல் இயல் கறங்க
.......... ..............
.................. ........
வேந்துறு விழுமம் தாங்கிய
பூம் பொறிக் கழற் கால் நெடுந்தகை புண்ணே.[71]

வேந்தன் உற்ற துன்பத்தினைத்தான் ஏற்று அவனைக்காத்த பூவேலை மிக்க கழலை அணிந்த நெடுந்தகைப் பெற்ற புண்ணைக் காக்க இனிமைமிக்க கனிகளைத் தரும் இலவ மரத்தின் தழையுடன் வேம்பின் இலையையும் சேர்த்து மனையில் சொருகினர். வளைந்த கோட்டினை உடைய யாழிசையோடு பலவாகிய இசைக் கருவிகளை முழக்கினர். கையை மெல்லப் பெயர்த்து மையாகிய விழுதினை இட்டனர். வெண் சிறு கடுகைத் தூவி ஆம்பல் குழலை

ஊதினர். ஓசையை உடைய மணியை ஒலித்தனர். காஞ்சிப் பாண்டி நெடிய மனையின்கண் நறுமணம் கமழும் அகில் முதலியவற்றை புகைத்தனர்.

இதனை தெலுங்கு இலக்கியத்தில் ஸ்ரீநாதர் எழுதிய பல்நாட்டி வீர சரித்திரத்தில் நாகம்மா இத்தொழில் ஈடுபாடு கொண்டு விளங்கியதாக அறிய முடிகிறது.

மலையாளத்தில் நிழல் குத்துப் பாட்டில் அதாவது குறவர்களின் பாட்டில் மந்திரத்தைப் பற்றிய செய்தி காணப்படுகிறது. குறத்தி தன்னுடைய மந்திர சக்தியால் பாண்டவர்களை உயிர்ப் பிழைக்க வைக்கிறாள் என்ற செய்தியின் மூலம் இம்மக்களும் மந்திரத்தில் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

மந்திரம் என்ற நம்பிக்கையைக் கன்னட இலக்கியங்களில் எடுத்துக் கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை எங்கும் காணப் பெறவில்லை.

கட்டுவிச்சி குறி

மக்கள் எக்காலத்தவராயினும் தங்கள் வாழ்வில் நடைபெறும், நடைபெறக் கூடியவற்றின் நன்மை தீமைகளை அறிவதில் ஆர்வமுள்ளவராயிருப்பர். அதற்குக் குறிசொல்வோரை நாடுவது உண்டு. பண்டைத் தமிழரின் வாழ்வியலை அறியத்துணை செய்யும் சங்க இலக்கியப் பாடல்களில் குறிசொல்வோரைக் குறிக்கும் இடங்களும் அமைந்துள்ளன. குறுந்தொகைப் பாடல் ஒன்றில் குறி சொல்லும் பெண்ணைப்பற்றிய செய்தி அழகுறக் கூறப்பட்டுள்ளது. குறிசொல்பவள் கட்டுவிச்சி எனப்படுவாள். குறுந்தொகை கட்டுவிச்சியை 'அகவன் மகள்' என்ற பெயரால் குறிப்பிடுகின்றது. அகவன் மகள் என்றால் அழைக்கும் மகள் என்பது பொருள். அகவன் மகள் குறி சொல்லும்போது தெய்வங்களையும்,

குறிசொல்லப்படுவோர் குலத்தோரையும் அழைத்துப் பாடுதல் பற்றி அகவன் மகள் என்பது அவளுக்கு பெயராயிற்று.

அகவன் மகளே அகவன் மகளே
மனவுக் கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே[72]

எனப் பாடியுள்ளார் ஔவையார். இப்பாட்டில் கட்டுவிச்சி வயது முதிர்ந்தவளாகக் காட்டப்படுகிறாள். சங்கு மணிக் கோவை போன்ற நெடிய கூந்தலையுடைய கட்டுவிச்சி என்றதன் மூலம் கட்டுவிச்சியின் மூப்பையும் அழகையும் ஆசிரியர் புலப்படுத்துகின்றார். இவள் குறிசொல்லும் செய்திகளைப் பாட்டாகப்பாடி கூறுவாள் என்பது "பாடுக பாட்டே" என்ற தொடர் உணர்த்தி நிற்கும்.

கட்டுவிச்சி குறி என்ற பழக்கம் தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக் கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் யான் தேடியவரை எங்கும் காணப் பெறவில்லை. இது சங்க இலக்கியத்திற்கே உரிய பழக்கமாக உள்ளது.

**கனவு நம்பிக்கை**

கனவில் சங்கத் தமிழர் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அது பலிக்கும் என்றும், அவை நன்னிமித்தமாகவும் அல்லது தீ நிமித்தமாகவும் அமையக் கூடும் என்பதிலும் அவர்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். ஆடை பற்றிய சில கனவுகளைக் காணலாம்.

எயிறு நிலத்து வீழவு மெண்ணெ யாட வும்
களிறு மேல் கொள்ளவுங் காழக நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவி னரியன.[73]

களிறு, பன்றி என்ற பொருளில் அமைந்து பன்றியின் மேல் ஊர்ந்து செல்லல் போன்றும், ஆடையை நீத்தல் போன்ற கனவும் கெடுதலுக்கு அறிகுறி என்னும் சங்கத் தமிழர் எண்ணத்தைப் புலப்படுத்துகிறது. சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களில் கனவு பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது. கனவைப் பற்றி தெலுங்கு இலக்கியத்தில்

கலலகு ஜிந்தயேல தன கட்டமுவச்சின பில்லிகோஸமை
யலமட யேல தும்மெனனி யாபதயேல யனேக கீடு³லே
தொலகக லேரு மானவுல திக்கடு வேறொக மந்து கல்குனா
மெலக'க வ்ராயு பிரஹ்மலிபி மித்யயெ யோ சரபாங்க லிங்கமா![74]

இப்பாடலின் கருத்து கனவுகளை எண்ணி ஏன் கவலைப்படுகிறாய், பூனை குறுக்கே வந்தால் ஏன் வருத்தம், தும்மினால் ஆபத்து வந்துவிடுமோ என்ற அய்யம் ஏன்? இதற்கு எல்லாம் கவலைப்பட்டு கொண்டு இருக்கின்ற மனிதரின் பைத்தியக்காரத்தனத்திற்கு மருந்தேதும் உண்டோ! அனைத்தும் பிரம்மன் எழுதியவாறே நடக்கும். தாம் காணும் கனவுகளால் நடக்கும் என்று பலர் எண்ணுகின்றனர். தெலுங்கு மக்கள் கனவில் நம்பிக்கை வைத்திருப்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார்.

மலையாள இலக்கியம் கனவை பற்றி,

நித்யவும் கண்ட கினாவு களெல்லாமே
ஸத்ய மெந்நிங்ஙனெ சொல்லாமிப் போள்
முன்னமெய்ப போலெவந் நிந்நு ஞான் என்னுடெ
பொன்னாரப் பைதலெப் பூண்டேனல்லோ
என் முது கேறி நிந் நான களிப்பதி
னின்னினி யாமோ சொல் லுண்ணிக் கண்ணா!
திங்களெச் செந்நு பிடிப்பதினாயிட்டிந்
நென் கழுத்தேறுக வேண்டயோ சொல்
ஓடி வந்நெந்நுடெ நன்மடி தன்னிலாய்
தாடி பிடிச்சு வலிக்கேண்டயோ[75]

நித்தமும் நான் கண்டு வந்த கனவெல்லாம் இப்பொழுது உண்மையாச்சி. முந்தைய நாட்போலவே வந்து இங்கு. நான் எந்தன் பொன்னாம் குழந்தையைப் பெற்றதால் என் முதுகேறி நின்றான் விளையாட. இது உனக்கு ஆகுமோ சொல்லு கண்ணா. சூரியனைச் சென்று பிடிக்கிறேன் என்று சொல்லி என் கழுத்தேறிட வேண்டுமோ சொல். ஓடி வந்து என்னுடைய மடியில் படுத்து என்னுடைய தாடியைப் பற்றி இழுக்கலையா என்று கூறுகின்றனர். இதைப் போல கன்னட இலக்கியத்தில்,

அக்காகியலு அக்கா
நானு ஒந்து கனசு கண்டேன்
ஜிக்க ஜிக்க ஜடயா சுளிபல்லா குருவனு
பந்என்ன நிரதனோடவா
ஆந்ததனா அப்பி கொண்டு தலாவெலாதனெலகே
ஜன்ன மல்லி கார்சுனனா கூடி
கண் திறது தலவெலகாவேலகே[76]

என்பதைச் சுட்டலாம்.

அக்கா அக்கா நான் ஒரு கனவு கண்டேன் சின்ன சின்ன சடையுடன் அழகான பல் உள்ள ஒருவன் என்கிட்ட வந்தான். கிட்ட வந்து என்னை கட்டிப் பிடித்தது போல் கனவு கண்டு விழித்துவிட்டேன். அவர் தான் என் கணவர் என நினைத்து நம்பிக்கை வைத்துத் திருமணம் செய்யாமல் இருந்து வாழ்ந்து வருகிறேன் என்ற பெண்ணின் கூற்றில் கனவு பற்றிய செய்தியைக் காணலாம்.

**புள் நிமித்தம் பார்த்தல்**

பண்டைத் தமிழர்களிடம் நல்ல நாள், கெட்ட நாள் பார்க்கும் பழக்கம் இருந்தது.

மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோர்க்கு இல்லை[77]

*என்பது தொல்காப்பியப் களவியல் சூத்திரம். 'களவு மணம் நிகழும் காலத்தில் கெட்ட ராசியிலும், கெட்ட நாளிலும் காதலியுடன் சேராமல் இருக்கும் வழக்கம் தலைவனிடம் இல்லை என்பது இதன் பொருள்.*

*கற்பு மணம் புரிந்து கொண்டவர்கள் கெட்ட ராசியிலும், கெட்ட நாளிலும் கூடிக் களிக்கமாட்டார்கள். களவு மணத்தில் ஈடுபட்டிருக்கும் தலைவன் இந்த வழக்கத்தைப் பின்பற்ற மாட்டான்.*

நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்[78]

*என்பது தொல்காப்பியப் புறத்தினை சூத்திரம். 'நாளும், பறவைகளாலும் வேறு பொருள்களாலும், தோன்றும் காரணங்களும் என்பது இதன் பொருள்.*

*நல்ல நாள் பார்ப்பதும், பறவைச் சகுனம் பார்ப்பதும் சங்கத் தமிழர்களின் பழக்கம் என்பதைப் புறநானூற்றுப் பாடல் ஒன்று கூறுகின்றது.*

நாள் அன்று போகிப், புள் இடை தட்பப்
பதன் அன்று புக்குத் திறன் அன்று மொழியினும்
வறிது பெயர்குநர் அல்லர், நெறிகொளப்
பாடு ஆன்று இரங்கும் அருவிப்
பீடுகெழு மலையன் பாடியோரே[79]

*ஒழுங்காக ஓசை நிறைந்து விழுகின்ற அருவியையுடைய பெருமை நிறைந்த மலையின் தலைவனாகிய மலையமான் திருமுடிக்காரியைப் புகழ்ந்து பாடிச் சென்ற புலவர்கள் பரிசு பெறுவது உறுதி. நல்ல நாள் அல்லாது கெட்ட நாளிலே அவனிடம் சென்றாலும் சரி, போகாதே என்று பறவை தடுக்கின்ற போது சென்றாலும் சரி, காலம் அல்லாக் காலத்திலே போனாலும் சரி, தகுதியற்ற சொற்களை அவனிடம் கூறினாலும் சரி, வெறுங் கையுடன் திரும்பமாட்டார்கள் பரிசில் பெற்றுத்தான் திரும்புவார்கள். இதைப் போலவே அகம் (20:1-4) பாடலிலும் புள் நிமித்தம் பார்த்தல் பழக்கம் இருந்துள்ளமையை அறிய முடிகிறது.*

புள்நிமித்தம் பார்க்கும் பழக்கம் தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக் கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை எங்கும் காணப்பெறவில்லை. இது சங்க இலக்கியத்தின் உயர்வையே காட்டுகிறது.

**மறுபிறப்பு நம்பிக்கை**

சங்க காலத்து மக்கள் மறுபிறப்பில் நம்பிக்கை வைத்திருந்தனர் என்பதை,

செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்[80]

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

கன்னடத்தில் ஜன்னன் படைப்பில் மறுபிறப்பு பற்றிய குறிப்பு வந்துள்ளதை பார்க்கும் போது அவர்களும் மறுபிறப்பில் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பது தெரிகிறது.

தெலுங்கு, மலையாளம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக்கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை மறுபிறப்பு பற்றியக் குறிப்பு காணப்பெறவில்லை.

**காக்கைக்கு சோறு இடுவதில் நம்பிக்கை**

உண்பதற்கு முன் காக்கைக்குச் சோறிடுவது பண்டைய தமிழரின் வழக்கம். இது இன்றும் தொடர்கின்றது. விரத நாட்களில் காக்கையைக் கூவி அழைத்துச் சோறிட்டுப் பின்னர் உண்கின்றனர்.

உயரமற்ற தென்னை மரங்கள் சூழ்ந்த சோலை, அந்த தென்னஞ்சோலையின் வாயிலில் நெற்கதிர் நிற்கின்ற குடிசைகள், அந்த குடிசையில் குடியிருந்தவர்கள் இரத்தங் கலந்த் சோற்றைக் காக்கைக்குப்

பலியாகக் கொடுத்தனர். அப்பலியுணவைக் காக்கைகள் உண்டன என்பதை,

> தாழ்தழைத் தண்தண்டடைக்
> கூடு கெழிஇய குடிவயினான்
> செஞ்சோற்ற பலி மாந்திய
> கருங்காக்கை[81]

என்ற பாடலடிகளின் மூலம் பண்டைத் தமிழர்கள் தங்கள் முன்னோர்களுக்கு நன்றி கடன் செலுத்துவதாக இதனை நம்பினர் என்பது தெரிகின்றது.

தெலுங்கு இலக்கியத்தில் வேமனர் பாடலில் தங்கள் முன்னோர்கள் இறந்துவிட்டால் அவர்களின் நினைவாக அவர்கள் விரும்பி உண்ணும் உணவினை சமைத்து அதனைக் காக்கைக்குப் படைத்துள்ளனர்.

மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக்கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை இக்குறிப்பு எங்கும் காணப்பெறவில்லை.

**பிற நம்பிக்கைகள்**

1. கண்ணேறுகளில் நம்பிக்கை கொண்டிருந்தனர் (திருமுருகு - 288)
2. வீட்டிற்கு அருகில் காக்கைக் கரைந்தால் விருந்தினர் வருவர் என்பதை (ஐங்.391) காணலாம்.
3. ஆந்தையின் குழறல் தீ நிமித்தமாக கருதப்பட்டது என்பதை (நற்.83) காணலாம்.
4. வெள்ளி தென் திசையில் தங்கியதால் வாய் வறண்டு போயிற்று எனக் கருதினர் (குறுந்.87).
5. வெள்ளியானது வடதிசையில் பிற மீன்களுடன் உரிய இடத்தில் தோன்றுமாயின் நல்ல மழை பொழியும் என நம்பினர் (பதி.71).

6. *வான் பொய்த்தலானது அரசனின் ஆட்சிக் குறையினால் நிகழும் என நம்பினர் (குறுந்.180).*
7. *ஊழ் வினையிலே நம்பிக்கைக் கொண்டிருந்தனர் (புறம்.192).*
8. *ஓந்தி நிமித்தத்தில் நம்பிக்கைக் கொண்டிருந்தனர் (குறுந்.140).*
9. *நாகப்பாம்பை வணங்கினால் அது தன்னைக் கடிக்காது என்று நம்பிக்கை கொண்டிருந்தனர் (பெரும்.199-201).*
10. *பாணர்கள் ஆடி மாதத்தில் தங்கள் வீடுகளின் முன்பு வந்து பாடினால் செல்வம் பெருகும் என்று மலையாள மக்கள் நம்பினர் (மலையாள இலக்கியம்).*
11. *சீதை, ராமர்களின் திருமணப்பாட்டுக்களை தெலுங்கர்களின் திருமணத்தின் போது பாடினால் திருமணத் தம்பதிகள் சிறப்போடு வாழ்வார்கள் என்று நம்பிக்கைக் கொண்டனர் (தெலுங்கு இலக்கியம்).*
12. *பொய்ப் பேசினால் நரகலோகத்திற்கும், உண்மையை பேசுபவர்கள் சொர்க்கலோகத்திற்கும் செல்வார்கள் என்று நம்பிக்கைக் கொண்டுள்ளனர். (கன்னடம்: பசவண்ணல் படைப்பு).*
13. *எல்லாம் விதியின் படியே நடக்கும் என்று நம்பினர் (மலையாள இலக்கியம்).*

**மனித நேயம்**

மனித நேயம் என்பது நாடு, இனம், மொழி என்ற எல்லைகளைக் கடந்து நிற்பது. மனித இனத்தின் நாகரிகப் பண்பாட்டு வளர்ச்சியோடு பிணைந்து நிற்பது. மனித நேயம் என்பது ஓர் உயரிய பண்பாடு. இப்பண்பாட்டினால் மக்களிடையே அன்பு வளரும், ஏற்றத்தாழ்வுகள் நீங்கும், ஒப்புரவு நிலைக்கும். மனித ஆற்றல்கள் உயரும் மனித மதிப்புகள் போற்றப்பெறும். இனம், மொழி, நிறம், மதம் ஆகியவற்றால் வேற்றுமைப் பட்டுக் கிடக்கும் மக்கள் ஒன்றுபடுவர். உலக மக்களிடையே ஒற்றுமை ஓங்கும் மானுடம் போற்றுவதே மனித நேயம் எனப்படும்.[82]

ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்டத் தமிழினம் மனிதநேய மாண்புடையதாக விளங்கியதைப் பண்டையத் தமிழ் இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. சங்கப் பாடல்களைப் பாடிய புலமைச் சான்றோர் உலகுக்கு அறவுரைகளாகக் கூறிய அறிவுரைகள் மனிதநேய மாண்பினை விளக்குவன. கணியன் பூங்குன்றனாரின் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் கருத்து உலகம் ஒன்றே உலக மக்கள் அனைவரும் உறவினர் என்னும் ஓர் உலகக் கோட்பாட்டினை விளக்குகின்றது.

செல்வம் உடையவரின் கடமை வறியவரின் வறுமையைத் தீர்த்தல். செல்வத்துப் பயனே ஈதல் எனச் சங்கப்புலவர் அறிவுறுத்தினர். வள்ளல்கள் மறுமைப் பயன் நோக்காது வருந்தி வந்தவரின் வறுமையைப் போக்கப் பொருளை வாரி வழங்கினர்.

மனிதர்களிடம் மட்டும் அன்பும் அருளும் கொண்டவர்களாக அமையாது. அதற்கு அப்பாலும் சென்று, ஓரறிவுடைய முல்லைக் கொடி பற்றிப் படர்தற்குத் தான் ஏறிவந்த தேரை ஈந்தவன் பாரி என்பதை,

கரும்புண
நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்கு வெள்ளருவி விழும் சாரல்
பறம்பின் கோமான் பாரியும்[83]

என்ற பாடல் கூறுகின்றது.

கார்காலம் கண்டு களித்தாடிய ஐந்தறிவுடைய மயில் குளிரால் நடுங்குவதாகக் கொண்டுத் தன் போர்வையை அளித்தவன் பேகன் என்பதை,

வானம் வாய்த்த வள மலைக் கவா அன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும்[84]

என்ற பாடல் கூறுகின்றது.

தெலுங்கில் திருமலை நாயக்கர் 'சத்யபாமா சாந்த்வனம்' காப்பியத்தை எழுதிய லிங்கனமதி ஸ்ரீகாமேஸ்வரகவி என்பவருக்கு முத்துக்கள் பதிக்கப்பட்ட குடை, சாமரம், தங்கப்பல்லக்கு முதலியவைகளைக் கொடையாக வழங்கியுள்ளார்.

கன்னடத்தில் நாகசந்திரன் என்பவர் விஜயபுரம் என்ற ஊருக்கு மல்லி ஜினேந்திர ஆலயம் மேலும் பல உதவிகளையும் மக்களுக்காக செய்துள்ளான் என்பதிலிருந்து மனிதநேயம் மிக்க மனிதர்களாக் வாழ்ந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

மலையாள இலக்கியத்தில் எடுத்துக்கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் மனித நேயம் பற்றிய குறிப்புகள் மிக்க மனிதர்கள் இருந்ததாக ஆய்வாளர் தேடிய வரை எங்கும் காணப்பெறவில்லை.

**நிலம் சார்ந்த தொழில்கள்**

சங்ககாலத்தில் தொழில்கள் அனைத்தும் ஐவகை நிலத்தை அடிப்படையாகக் கொண்டுதான் நடைபெற்றுள்ளது. இதனை நிலஞ்சார் தொழில்கள் என்று கூறலாம்.

முல்லை நில மக்கள் சாமை விதைத்தல், வரகு விதைத்தல், கால்நடைகளை மேய்த்தல், பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றை விற்றல் முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தனர் என்பதை,

மன்ற எருமை மலர்தலைக் கார் ஆன்
இன் தீம் பால்பயங் கொண்மார் கன்றுவிட்டு
ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புலர் விடியல்[85]

என்ற பாடலின் மூலம் அறியலாம். பெரிய இருள் நீங்கும் விடியற்காலத்து தொழுவத்திலுள்ள அகன்ற தலையையுடைய காரெருமையின் மிக இனியபால்

நிரம்பக் கறந்து கொள்ளும் பொருட்டு அகன்ற கன்றுகளைத் தொழுவத்து நிறுத்திவிட்டு ஊரிலுள்ள மாடு மேய்க்கும் இளஞ்சிறுவர்கள் அவ்வெருமைகளின் மேலேறிக் கொண்டு தனியே மேய்த்து வருவதற்குச் செல்வர்.

இத்தொழிலைப் பற்றி கலி.110, நற்.266:3, நற்.266:1, பதி.20:21-22, அகம்.354:3-5, ஐங்.304:1-2, நெடுநல்:3-8, முல்லை:15-16 போன்ற பாடல்களின் மூலம் அறியலாம்.

குறிஞ்சி நிலத்து மக்கள் மலைச் சரிவுப் பகுதிகளையும் மலைமீது சமநிலமாய் உள்ள பகுதியையும் விளை நிலமாக்குதல், மலை நெல், தினை முதலிய வகைகளை விதைத்தல், தினைப்புனங்களைக் காவல் காத்தல், தேனெடுத்தல், கிழங்கு வகைகளைப் பயிராக்குதல், வேட்டையாடுதல் முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தனர் என்பதை,

புனவன் துடவைப் பொன் போற் சிறுதினை[86]

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

பாலை நில மக்கள், பிற நிலங்களிலுள்ள ஆநிரைகளைக் கவர்தல், வழிபறிக் கொள்ளை ஆகிய தொழில்களில் ஈடுபட்டிருந்தனர் என்பதை,

வழங்குநர் இன்மையின் வெளவுநர் மடிய[87]

என்ற பாடலின் மூலம் அறிய முடிகின்றது.

மருதநில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர்ப் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடா விடுதல் முதலிய பயிர்த்தொழில் தொடர்பானத் தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். இதனை,

முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவில்[88]

என்ற பாடலின் மூலம் அறியப் பெறுகிறது.

நெய்தல் நில மக்கள் ஓடம், மிதவை, படகு முதலியவற்றை அமைத்தல், மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்துதல், அவற்றை விற்றல் முதலிய தொழில்களைச் செய்து வந்தனர் என்பதை,

வாய்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள்வேட்டு எழுந்த நயனில் பரதவர்
வைகுகடல் அம்பியின் தோன்றும்[89]

இப்பாடலில் அம்பி, தோணி எனப்பட்ட படகுகளும் மீன்பிடிக்கப் பயன்படுத்தப்பட்டன என்பது தெரிகின்றது.

தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக்கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடிய வரை நிலம் சார்ந்த தொழில்களைச் செய்ததாக எங்கும் காணப்பெறவில்லை.

**தொழில்கள்**

**1. உழவுத் தொழில்**

உழவுத்தொழில் என்பது உழுதல், உரமிடுதல், நீர்ப்பாய்ச்சுதல், விதைத்தல், களை எடுத்தல், காத்தல், அறுவடை, பதப்படுத்தல் எனப் பல கூறுகளாய் அமைவது. இம்முறைகளைச் சங்கப்பாடல்கள் வழி அறியலாம். பண்டையத் தமிழர் நிலத்தை உழுவதற்கு எருதுகளையன்றி எருமைகளையும் பயன்படுத்தினர் (எருமை உழவு - நற்.60:2). மருத நில மக்களின் முக்கியத் தொழிலாக இது விளங்குகின்றது.

பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளி பேகழ்வு
வாலிதின் விளைந்தன ஜவனம் வெண்ணெல்[90]

என்று மலைபடுகடாம் கூறுகின்றது.

சாலி நெல்லின் சிறை கொள் வேலி
ஆயிரம் விளையுட்டு ஆக,
காவிரி புரக்கும் காடு கிழவோனே[91]

*என்று உழவுத் தொழிலின் சிறப்பை பொருநராற்றுப்படை கூறுகின்றது. இத்தொழிலை மலையாள இலக்கியத்தில் வயல்களில் வேலை செய்யும் புலையர் புலைச்சியர் முதலியவர்களின் இதயதாபங்களையும், துடிப்புகளையும் அன்றாட வாழ்க்கையின் அலைமோதலையும் உயிர்ச்சாயல் தோன்ற நிழல் பிடித்துக் காட்டுகின்ற பாடல்கள் ஆதிகாலத்தில் இடம் பெற்றுள்ளன.*

> மாரிமழகள் சொரிஞ்சே - செறு - வயலுகள் ஒக்கெ நனஞ்சே
> பூட்டி யொருக்கிப் பறஞ்சே - செறு - ஞாறுகள் கெட்டி யெறிஞ்சே
> ஓமல, சென்னில, மால, செறு கண்ணம்ம, காளி, கறும்பி
> சாத்த, சடய, மாராய - செறு - மச்சிக ளெல்லாரும் வந்தே
> வந்து திரந்தவர் நிந்தே - கெட்டி - ஞாறெல்லாம் எண்ணிப் பகுத்தே
> ஒப்பத்தில் நட்டு கரேறா - னவர் - குத்தி யுடுத்து குனிஞ்சே
> கண்ணச் செறுமி யொண்ணப் போள் - அவள் - ஓமலயொண்ணு விளிச்சே
> பாட்டொந்நு பாடீட்டு வேணம் - நங்ஙள் நட்டு கரய்க்கங்ஙு கேறான்
> அப்போளொரு தத்தப் பெண்ணு - அவள் - மேமர மேறிக் கரஞ்சே
> மேப்போட்டு நோக்கிப் பறஞ்சே - கொச்சு - ஓமலக் குட்டிச் செறுமி;
> தத்தமமெய் பெண்ணே நீ யிப்போள் - இங்கெ வந்தாரு காரியம் சொல்லு[92]

*என்பதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.*

*வானம் மழை பொழிந்து வயல் வரப்பெல்லாம் நனைந்தது. அவ்வயல்களையெல்லாம் திருத்தியமைத்தனர். சிறு நாற்றுகள் கட்டி எறியப்பட்டன. ஓமலை, செந்நிலா, மாலை, சின்ன கண்ணம்மை, காளி, கறுப்பி சாத்தை, சடைச்சி என்ற பல மச்சினிமார்களும் வந்தார்கள். வந்து வரிசையாய் நின்றார்கள். கட்டு நாற்றை எல்லாம் எண்ணிப் பிரித்தார்கள். சேலையை இடுப்பில் சொறுகிக் கொண்டு நெற்பயிர்களை வரிசையாக நடவு*

*செய்து கொண்டுப் பாடல்கள் பாடினர் என்பதிலிருந்து உழவுத் தொழிலின் சிறப்பு நன்கு விளங்குகின்றது.*

**நெசவுத் தொழில்**

*மக்கள் சமுதாயத்திற்கு உணவினை அடுத்து இன்றியமையாது வேண்டப்படுவது ஆடையாகும். இந்நெசவுத் தொழில் புதிய கற்காலத்தில் ஆரம்பமாயிற்று என்பர். ஆடையைப் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் காணப்படுவதால் இந்நெசவுத் தொழிலின் தொன்மையை நன்கு அறிய முடிகின்றது.*

**கூழை விரித்தல் காதொன்று களைதல்**
**ஊழணி தை வரல் உடைபெயர்த் துடுத்தலோ**
**டூழி நான்னே இரண்டென மொழிப[93]**

*எனக் குறிப்பிட்டுள்ளது.*

*மகளிர் பருத்திப் பஞ்சினைச் செப்பஞ்செய்து நுண்ணிய நூலாக நூற்பதில் கைத்திறம் பெற்று விளங்கினர். இப்பெண்கள் பருத்திப் பெண்டிர் என அழைக்கப்பட்டனர். மேலும் கணவரை இழந்த மகளிர் இத்தொழிலில் பெரிதும் ஈடுபட்டிருந்தனர் என்பதை,*

**ஆளில் பெண்டிர் தாளில் செய்த**
**நுணங்கு நுண் பனுவல்[94]**

*என்ற பாடலடிகளால் அறியமுடிகின்றது. இப்பெண்டிர் இரவு நேரத்திலும் நூல் நூற்றனர் என்பது பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கத்து என்ற அடியால் புலப்படும். இவ்வாறு பெண்கள் நூற்று இழைத்துத் தந்த நூலைப் பாவாக விரித்துக் தறியில் நெய்து ஆடையாகக் கொடுக்கும் கடமை ஆடவர் தொழிலாய் அமைந்தது.*

*நுண்மையான நூலைக் கொண்டு நெய்யப்பட்ட ஆடையினுடைய இழைகளின் வரிசைகளைக் காண்பதற்கு இயலாத வகையில் நுட்பமாக நெய்யப்பட்டிருந்தது.*

பாம்புரி யன்ன வடிவினை காம்பின்
கழைபடு சொலியி னிழையணி வாரா[95]

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

இந்நெசவுத் தொழிலைப் பற்றி (பொருந.82, புறம்.398.20, 393:17-18, 274, 392: 14-15, பெரும்.469, நற்.90) ஆகிய பாடல்கள் இத்தொழிலை விளக்கும்.

வெஞ்ஜாவளியு, ஜயரஞ்ஜியு, மஞ்சு
புஞ்ஜம்பு[3], மணிபட்டு, பூ[4] திலகம்பு[3]
ஸ்ரீ வன்னியமு மஹாசீனி, சீனியுனு
பாவஜ திலகம்பு[3], கச்சனி பட்டு[96]

ராயசேகரமுனு, ராயவல்லய[4] மு
வாயுமேக[2] மு, க[3]ஜவாளம்பு[3] க[3]ண்ட[3]
வடமு கா[3]வுலு, ஸரிபட்டுனு, ஹம்ஸ
வடி[3]யு, வீணாவளி, பல்லட[3] தட்டி[97]

என்பதைக் குறிப்பிடலாம். தெலுங்கு நாடு நெடுங்காலம் நெசவுத் தொழிலில் சிறந்து விளங்கியது. சாதவாகன காலத்திலிருந்தே கலைகளுக்கு நல் ஆதரவு கிடைத்தது. அரசர்கள், ஜமிந்தாரிகள் இத்தொழிலுக்கு ஆதரவு அளித்தனர். காகதீய பிரமக்கள் கைவினைத் தொழிலை மிகவும் ஊக்குவித்தனர். இப்பாடலில் பட்டு வகைகள் விளக்கப்பட்டுள்ளது.

இது சங்க இலக்கியத்தில் கூறிய ஆடைகளை ஒத்துள்ளன. இத்தொழிலைப் பற்றி மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் எடுத்துக் கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் ஆய்வாளர் தேடியவரை எங்கும் காணப்பெறவில்லை.

**தச்சுத் தொழில்**

தச்சு என்பது ஒன்றையும், மற்றொன்றையும் பொருத்தி இணைப்பதாகும். இத்தொழிலைச் செய்வோர் தச்சர் எனப்பட்டனர். சங்க

இலக்கியங்களில் திறமை வாய்ந்த தச்சர்களைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. இவர்கள் தச்சுத் தொழிலைக் குலத்தொழிலாகக் கொண்டனர். தச்சர்கள் தம் மக்களை இளம் வயதிலேயே இத்தொழிலில் நன்கு பழக்கி வைத்தனர். பொம்மைத் தேர் செய்து விளையாடியவர்கள் பின்னர் பெருந்தச்சர்களாயிருக்கின்றனர் என்பதை,

தச்சச் சிறார் நச்சப் புனைந்த
ஊரா நற்றேர்[98]
மரங்கொல் தச்சர் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத்து[99]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தமிழ்நாட்டுத் தச்சர்கள் மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும், வசதிக்குத் தேவையான வண்டிகளையும், தேர்களையும் செய்து கொடுத்தனர். நால்வகைப் படைகளில் தேர்ப்படையும் ஒன்றாக இருந்ததால் தேர் செய்வது அன்றைய தச்சர்களின் தலையாய கடமையாக இருந்திருத்தல் வேண்டும். செந்தமிழும் நாப்பழக்கம் என்பது போல, தேர்களைப் பெருமளவு செய்து அதில் சிறந்த தேர்ச்சி பெற்றிருத்தல் கூடும். ஒரு நாளில் எட்டுத் தேர்களைச் செய்யவல்ல தச்சர்கள் முற்காலத்தில் இருந்தனர் என்பதை,

வைகல் எண்தேர் செய்யும் தச்சன்[100]

என்ற பாடலடியால் அறியலாம்.

கண்ணைக் கவரும் வண்ணம் நேர்த்தியான தேர்கள் செய்து அது நன்றாக ஓடுகிறதா என்பதைப் பார்க்க தச்சர்களே அதன்மீது ஏறி ஓட்டிப் பார்த்தனர் என்பதை,

உள் அரக்கு எறிந்த உருக்குறு போர்வைக்
கருந்தொழில் வினைஞர் கைவினைமுற்றி
ஊர்ந்துபெயர் பெற்ற எழில்நடைப் பாகரொடு[101]

என்ற பாடலில் காணலாம்.

மலையாள இலக்கியத்தில் நெல் குத்தும் உரல்களைப் பற்றிய செய்தி வந்திருப்பதால் அக்காலத்தில் கல் தச்சர்களும் இருந்துள்ளனர் என்பது தெரியவருகின்றது. இதனை,

நெல் குத்துமாறும் அரிகே யொரு கோலொடிச்சு[102]

என்ற அடிகளின் மூலம் தச்சுத் தொழிலைப் பற்றி அறிய முடிகின்றது.

கர்நாடகர்கள் சந்தன மரத்தால் இறை உருவங்கள், இயற்கைக் காட்சிகள், பறவைகள், மிருகங்களின் உருவம் போன்றவற்றை நேர்த்தியான கலை நுணுக்கத்துடன் செய்வதில் வல்லவர்களாக விளங்கியுள்ளனர்.

தெலுங்கு இலக்கியத்தில் எடுத்துக்கொண்ட ஆய்வுப் பரப்பு எல்லைக்குள் இத்தொழிலைப் பற்றியக் குறிப்பு யான் தேடியவரை எங்கும் காணப்பெறவில்லை.

**வாணிபம்**

நாட்டின் உணவு வளத்திற்கு உழவர் காரணமாய் இருத்தல் போலவே பொருளாதார வளத்திற்கு வணிகர் சிறந்த காரணமாவர். நாட்டில் ஓரிடத்தில் உண்டாகும் விளைபொருள்களை, பிற இடங்களுக்கு அனுப்புவதும், கொண்டு சென்று விற்பதும், அவற்றைத் தத்தம் ஊர்களில் விற்றலும் வணிகர் தொழிலாம். இத்தொழில் முறையால் நாட்டில் செல்வ வளம் கொழிக்கும். இதுபற்றியே சமுதாயத்தில் வணிகர் சிறப்பிடம் பெற்றனர்.

மிகப் பண்டைக்காலம் தொட்டு தமிழகம் பிற நாடுகளோடு பரந்த வாணிபம் செய்து வந்துள்ளது. வெளிநாட்டுச் சந்தைகளில் எப்போதும் விரும்பி வாங்கப்பட்ட பல அரிய பொருள்கள் தமிழகத்தே கிடைத்தமையே அவ்வாணிபத்தின் முக்கிய காரணமாகும். கொற்கை பாண்டிய நாட்டின் துறைமுகப்பட்டினம் என்றும், பாண்டிய நாட்டின் பழம்பெருஞ் செல்வம் முத்து என்பதைப் பல இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். பாண்டிய

நாட்டின் முத்து பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகியுள்ளது. கொற்கையில் உப்பு வணிகர் வண்டியில் உப்பை ஏற்றிக் கொண்டு வாணிபத்தின் பொருட்டுச் சென்றனர். தங்களின் மனைவி மக்களுடன் செல்வது வழக்கமாக இருந்தது.

வலிமை வாய்ந்த எருமைக்கடாவைப் பூட்டிய வண்டியில் உப்பு ஏற்றிச் சென்றனர். அவ்வண்டியின் சக்கரச் சுவட்டின் வழியே குழந்தைகளைப் போன்றே குரங்குகளும் தொடர்ந்தன. உப்பு வணிகரின் பெண்கள் தங்கள் மடியில் மறைத்து வைத்தனர். அது கிளிஞ்சல்கள் வாணிகத்தின் பொருட்டுத் தங்கும் இடத்தில் வணிகரின் குழந்தைகளுடன் குரங்குகள் கிலுகிலுத்து விளையாடிக் கொண்டிருந்தன என்பதை,

நோன் பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த
மகா அர் அன்ன மந்தி மடவோர்
.....................................
.....................................
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி யாடும்[103]

இப்பாடலடிகள் மூலம் அறியலாம்.

வாழ்க்கை வளத்தைப் பெருக்கி நின்ற தொழில்களுள் வாணிபம் தலையானதாக இருந்தது. பொருள் வளம், சமுதாய மதிப்பு ஆகியவற்றின் உயர்வால் வாணிகர் 'அரசர் பின்னோர்' எனப் பெருமையுடன் அழைக்கப்பட்டனர். அறுவை வாணிகன், இளவேட்டனார், இளம் பொன் வாணிகனார், பண்டை வாணிகன் இளந்தேவனார் ஆகிய புலவர் பெயர்கள் அவர்கள் புரிந்து வந்த வாணிகங்களை விளக்கி நிற்கின்றன.

சங்க காலத்தில் வாணிபம் எவ்வளவு சிறப்பாக நடைபெற்றது என்பதைப் 'பட்டினப்பாலை' நூல் விளக்குகிறது. மேலும் அவர்கள் வாணிகத்தில் நேர்மையைக் கடைப்பிடித்து வந்தனர் என்பதை,

தமவும் பிறவும் ஒப்ப நாடி

கொள்வதூஉம் மிகைகொளாது

கொடுப்பதூஉம் குறைகொடாது[104]

*என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.*

*தெலுங்கு இலக்கியத்தில்,*

பண்டு[3]வா டில்லிராஜடாதி பட்டணமுல

யதிபதுலு மௌனிட தா[3]ல்சு ரத்னாம் குரம்பு

லவசித்ரி புராந்தகா நீதயான பாத்ர

ஸிம்ஹள த்[3] வீப மண்ட[3] ல க்ஷேத்ரஜமுலு[105]

*ஸ்ரீநாதனின் காலத்தில் அவசி திப்பயஸெட்டி என்ற வகைகள் சிங்கள தீவிலிருந்து தன் சொந்த படகுகளின் மீது வரவழைக்கப்பட்ட ரத்தினங்கள், பண்டுவசுல்தான், டில்லிசுல்தான் ராஜ்யாதிபதி கிரீடங்களில் மின்னிக் கொண்டு இருக்கின்றன என்றும் இவை இல்லாமல் குதிரைகள், வாசனைப் பொருள்கள், அலங்காரப் பொருள்கள் அந்த காலத்தில் பிற நாடுகளிலிருந்து வரவழைத்து ஆந்திர மாநிலத்தில் வியாபாரம் செய்ததாக 'ஹரவிலாசம்' நூலில் பலப்பாடல்கள் உள்ளன. இதனை மலையாள இலக்கியத்தில்,*

மரக்கலத்தின் மேல் வந்த சரக்கு பல ஜாதியும்

எடுத்த பப்பரக் கய்யர் நடப்பிதொரு வீதியில்

நெல்லிந் நரிசி தாவென்று சொல்லிச் சிலரழய்க்கவும்

தேங்ஙாதா வெற்றிலய்க் கொன்றும் மங்ஙா

தருவனென்கயும்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

தலயும் முலயும் தள்ளத் தம்மெத் தாமும் மறந்நுடன்

முன்பும் பின்பும் ததாகய்யும் மெய்யும் காட்டிப் பகிர்ந்நுடன்

கலர்ந்து பேசி மீன் வில்க்கும் செறுமிக் கூட்டவும் க்வசில்

காந்தியும் செல்வமும் மிக்க காந்தளூர் சால காணலாம்

மூன்று கோயிலுமென முன்னில்த் தோந்நும் தத்ர மடங்களும்[106]

*என்று கூறப்பட்டுள்ளது.*

மரக்கலத்தின் மேல் பல்வேறு சரக்குகள் ஏற்றிவரப்பட்டன. பரபரத்த கையர் தாங்கிப் போவர் பாதை மீதினில் அரிசியைக் கொடுத்து நெல்லை வாங்கிச் செல்லுங்கள் என்று சிலர் கூவுகின்றனர். தேங்காயைக் கொடுத்து வெற்றிலை, மாங்காய் போன்றவற்றை வாங்கிச் செல்லுங்கள் என்றும் அச்சந்தையில் கூறுகின்றனர்.

தலையொடு தனம் குலுங்கத் தம்மைத் தாமே மறந்தவர் முன்னும் பின்னும் கை மெய்யாட்டிக் காட்டி வாணிபம் செய்து கலந்து பேசி மீன் விற்கும் வலைச்சியர் கூட்டமும் ஆங்கே சீரோடு செல்வமும் மிக்க காந்தளூர்ச் சாலை காணப்படுகிறது. இதன் மூலம் கேரளாவில் பழங்காலத்திலேயே வாணிபம் சிறப்பாக நடைபெற்றது என்பதை அறிய முடிகின்றது.

> வடநாட்டு வாணிகத்தைவிடத் தென்னாட்டு வாணிகம் முதன்மையுடையது. இரத்தினக் கற்கள் போன்ற விலையுயர்ந்த பண்டங்கள் தெற்கிலிருந்து வந்தன என்றும், வடநாட்டு தோல், கம்பளி என்பவைகளை அளித்தனவென்றும், இரத்தினக் கற்கள், சங்கு முதலியன தெற்கிலிருந்து வந்தனவென்றும் கௌடலியர் குறிப்பிடுகின்றார்.[107]

கன்னட இலக்கியத்தில் எடுத்துக் கொண்ட ஆய்வுப்பரப்பு எல்லைக்குள் வாணிபம் பற்றிய குறிப்பு ஆய்வாளர் தேடியவரை எங்கும் காணப் பெறவில்லை.

### கேரளத்தில் சங்க இலக்கிய மரபு

சங்க காலத் தமிழகம், இன்றைய தமிழகம் மட்டுமல்லாது அதனைச் சுற்றியுள்ள பிற மாநிலப் பகுதிகளையும் உள்ளிட்டதாகும். பேராசிரியர் குஞ்ஞுன்பிள்ளையின் கருத்துப்படி சங்க காலத் தமிழகத்தின் நிலப்பரப்பு தற்போதுள்ள கேரளத்தின் முழுப் பகுதிகளையும் உள்ளடக்கியதாகும்.

பரந்துப்பட்ட நிலப்பரப்பில் எழுந்தச் சங்க இலக்கியத்தில் அக்காலச் சமுதாயத்தில் நடைமுறையில் காணப்பட்டச் சடங்குகள், மரபுகள், நம்பிக்கைகள் போன்ற சமூகக் கூறுகள் காணப்படுகின்றன. இவ்வாறு சங்க இலக்கியத்தில் காணப்பட்டச் சமூக மரபுகளின் எச்சங்கள் கேரள இலக்கியத்திலும் வாழ்க்கை முறையிலும் நிலவுகின்றன.

**1. வீரர் வழிபாட்டு மரபு**

சங்க இலக்கியம் வீரநிலைக் காலத்தில் எழுந்த இலக்கியம் என்பது ஈழத்துத் திறனாய்வாளர் கலாநிதி கைலாசபதி உள்ளிட்ட பல அறிஞர்களின் கருத்தாகும். சங்க இலக்கியத்தில் வீரர்கள் பெரிதும் போற்றப்படுகின்றனர். விழுப்புண் பெற்றுப் போர்க்களத்தில் மடிவதை அக்கால வீரர்கள் பெருமையாகக் கருதினர். இவ்வாறு மடிந்த வீரர்களைப் புலவர்கள் வாழ்த்தினர். ஏனையோர் அவர்களுக்கு நடுகல் எடுத்துச் சிறப்புச் செய்தனர். கல்லெடுத்து வீரர்கள் வழிபடும் இத்தகைய மரபு தொல்காப்பிய பொருளதிகாரப் புறத்திணையியலில் சுட்டப்படுகின்றது. இதனை,

காட்சி கால்கோள் நீர்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்று
இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்
சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே[108]

என்ற தொல்காப்பிய நூற்பா கூறுகின்றது. நடுகல் எடுத்தலின் ஆறு துறைகளாகக் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை, வாழ்த்து என்பனவற்றைக் குறிப்பிடுகிறது. அதியமான் இறந்தவுடன் அவனுக்கு நடுகல் எடுக்கப்பட்டச் செய்தியை ஔவையார்,

இல்லாகியரோ காலை மாலை
அல்லாகியர் யான் வாழுநாளே
நடுகற் பீலிசூட்டி நார் அரி
சிறுகலத்து உகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்கு மலை கெழீஇய
நாடேன் கொடுப்பவுங் கொள்ளாதோனே[109]

என்று குறிப்பிட்டுள்ளார்.

மலைபடுகடாத்தில்,

மறவர் செல்லா நல்லிசை பெயரொடு நட்டகல்[110]

என்று நடுகல் பெயரொடு நடப்பட்டச் செய்தி குறிப்பிடப்படுகின்றது. இந்நடு கற்களில் வீரர்களுடைய பெயரும், புகழும் எழுதப்பட்டதை,

ஆடவர் பெயரும் பீடும் எழுதி[111]

என்ற அகநானூற்றுப் பாடலடியால் அறிய முடிகின்றது.

வீரர்களுக்கு நடுகல் வழிபாடு நடந்ததை கன்னட இலக்கியம்,

ஜித்தேனா லப்பியத்தே லெக்ஸ்மி:

முர்தேனாபி சுரங்கான!

ஸனா வித்வசினி காயே க்கா ஜிந்தா மரனே ரனே[112]

என்று கூறுகின்றது.

போரில் வெற்றி பெற்றால் அவர்களுக்குப் பணம் கிடைக்கும். இறந்து போனால் சொர்க்கத்தில் தேவதைகளுடன் பேசலாம். ஒரு நிமிடத்தில் இறந்து போகும் இந்த உடம்பு யுத்தத்தில் இறந்தால் என்ன? என்பது கன்னட நாட்டில் வீரர்களுடைய மந்திரம்.

இவ்வாறு வீரர்களுக்கு நடுகல் எடுத்து வழிபடும் மரபுத் தொடர்ச்சியை இன்றும் கேரள நாட்டின் வடக்கு மலபார் பகுதிகளில் காண முடிகின்றது. இப்பகுதிகளில் சமூகத் தலைவர்களாக வாழ்ந்து சமூகச் சட்டங்களை எதிர்த்துப் போராடி மடிந்த வீரர்களுக்குக் கோவில்கள் காணப்படுகின்றன. இவை ஸ்தானங்கள் என்றழைக்கப்படுகின்றன. இதில் ஒரு சிறிய பீடம் அமைக்கப்பட்டு அதைச் சுற்றி ஒரு சிறு அறையும் கட்டப்பட்டுள்ளது. இப்பகுதிக்கு முன்னால் ‘T’ வடிவத் தூண்கள் எழுப்பப்பட்டுள்ளன. இக்கோவிலின் மேற்பகுதி செப்புத் தகடுகள், அல்லது ஓடுகளால் அமைந்த கூரையாக அமைகிறது. இவ்வாறு சிறு தெய்வங்களாக விளங்கும் வீரர்களைப் பற்றிய கதைப் பாடல்களும் உள்ளன. இவை விழாநாட்களில் ஆடலுடன் பாடப்படும். இதற்குத் தெய்யாட்டம் என்று

பெயர். வீரர்களாக விளங்கிப் பின்னர்த் தெய்வநிலைக்கு உயர்த்தப்பட்ட வீரர்களின் பெயர்கள் சில, கடிவனூரர் வீரன், அங்கரன், முத்தப்பன், வேட்டைக்கொரு மகன் என்பனவாம். இவ்வீர வழிபாட்டு மரபு இப்பகுதிக்குப் பக்கத்திலுள்ள துளுவ நாட்டிலும் பரவியுள்ளமையைக் கேரள வரலாற்றுக் குறிப்பால் அறியலாம்.

**பாணர் - பெயரும் வாழுமிடங்களும்**

பாணர் என்போர் இப்போது கேரளத்தில் தாழ்த்தப்பட்ட பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களில் ஆடவரைக் குறிக்க பாணன் என்ற சொல்லும் பெண்டிரைக் குறிக்க 'பாட்டி' என்ற சொல்லும் வழக்கிலுள்ளன. இச்சொல், சங்க இலக்கியத்தில் 'பாடினி' என்ற சொல்லாக வழங்கியது. பாட்டி என்ற பெயர் திவாகரத்தில் பாணர் இனப் பெண்டிரைக் குறிக்கும் சொற்களில் ஒன்றாகச் சுட்டப்பட்டுள்ளமையும் இங்குச் சிந்தித்தற்குரியது. பொதுவாக இப்பாணர்கள் தங்களைத் 'திருவரங்கப் பாணர்' என்றே அழைத்துக் கொள்கின்றனர்.

> கேரளத்தில் குட்ட நாட்டுப் பகுதியில் வழக்கிலுள்ள புராணக் கதைப் பாடல் ஒன்றில் ஒரு பகுதி பல்வேறு சாதியினர் தோற்றம் பற்றியது. இதில் கணிதத்திலும், சோதிடத்திலும் வல்லவரான வரருசி (கி.பி.4 ஆம் நூற்றாண்டு) என்ற பிராமணருக்கும் பறையர் குலப்பெண் ஒருத்திக்கும் பிறந்தவராகப் பன்னிரெண்டு சாதியினர் குறிக்கப்படுகின்றனர். அதில் ஒருவராகக் குறிக்கப் பெறும் பாணர் "பெரிய திருவரங்கத் தெழும் பாணனாரும் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.[115]

'திருவரங்கத் தெழும்' என்ற தொடருக்கு பெரிய அரச சபைகளில் உள்ளவர்' என கேரளத்து பாணர்களைப் பற்றி ஆய்வு செய்த ஜி. பார்க்கவன் பிள்ளையும் ஸ்ரீரங்கம் என்ற தலத்தில் வாழ்கின்றவர் என மலையாள இலக்கிய வரலாற்று அறிஞர் பரமேஸ்வரய்யரும் பொருள் தந்துள்ளார். இன்றும்

பாணர்கள் திருவிதாங்கூர், கொச்சி, மலபார் முதலிய பகுதிகளில் பரவலாக வாழ்ந்து வருகின்றனர்.

திருப்பாணாழ்வார் காலத்தில் ஸ்ரீரங்கம் பகுதியில் மிகுதியான பாணர்கள் வாழ்ந்து பின்னர் அவர்கள் கேரளத்திற்கு இடம் பெயர்ந்து சென்றிருக்கலாமெனக் கருதவும் வாய்ப்பிருக்கின்றது. கேரளத்தில் பாணக்குந்து, பாணத்தூர், பாணந்தற, பாணன்றெ அய்யத்து எனப் பாணர்களைக் குறிக்கும் ஊர்ப் பெயர்களும் வழங்குகின்றன.

**நாடோடிப் பாடகர் மரபு**

கேரளத்தில் வாழும் பாணர்களின் தொழில் வீடுவீடாகச் சென்று பாடிப் பொருட்கள் பெறுவதேயாகும். இவர்கள் பாடும் பாட்டிற்குத் 'துயிலுணர்த்தும் பாட்டு' என்னும் பெயர் வழங்குகின்றது. பாணனும் பாட்டியும் வைகறைப் பொழுதில் துடி, கிண்ணம், கைமணி முதலிய இசைக் கருவிகளை இசைத்துக் கொண்டு ஒவ்வொரு வீடாகச் செல்வர். வீட்டின் வெளியில் நின்று முதலில் துடிப்பறையை முழக்கிக் கனைத்துக் காட்டுவர். வீட்டுக்காரர் பாணர் வரவையறிந்து முற்றத்தில் விளக்கேற்றி அமர்ந்து சிவன் தாங்கள் இத்தொழில் புரிவதற்கு வரங்கொடுத்த கதையான திருவரங்கன் கதையை முதலில் பாடுவர். அதன் பின்னர் நேரமிருந்தால் ஹரிச்சந்திரசரிதம், ஸ்ரீகிருஷ்ணலீலை முதலிய சில கதைப் பாடல்களையும் பாடுவதும் உண்டு. பொதுவாகப் பாணர்கள் பஞ்சகாலமான 'கர்க்கடக மாதத்தில்' (ஆடி) தான் பாடச் செல்வர். சில பகுதிகளில் ஓணக்காலத்தில் குருத்தோலையால் தலையை அலங்கரித்து 'ஓணேஸ்வரன்' வேடம் போட்டுக் கொண்டு பாடச் செல்வதும் உண்டு. பாணர்கள் பாடியதற்காக அரிசி, தேங்காய், எண்ணெய் முதலிய பொருட்களை மக்கள் வழங்குவர்.

மலையாளத்தில் வடக்கன் பாட்டுக்கள் என அழைக்கப்படும் நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் தொகுப்பிலும் (கி.பி.1300-1700) பாணர்கள்

பல பகுதிகளுக்கு அலைந்து திரிந்து பாடிப் பரிசில் பெறுகின்ற தன்மையைக் காணமுடிகின்றது. இக்கதைப்பாடல்களில் சங்ககாலத்துப் பாணர்களைப் போன்றே வீரர்களது குலப்பெருமை பேசும் பாணர்கள் உள்ளனர். புத்தூரம் இல்லத்தைச் சேர்ந்த வீரனான ஆரோமல் சேகவரைச் சேவித்து வருகின்ற பாணனிடம் சேகவரின் நாட்டைப் பற்றிய இரகசியங்களை அவனது எதிரிகள் கேட்கின்றனர். பாணன், ஆரோமல் சேகவர் நாட்டிற்குச் செல்லும் வழியைப் பற்றியும், வழியிலுள்ள ஊர்களையும், அங்குக் கிடைக்கும் உணவுகளைப் பற்றியும் அவர்களுக்குக் கூறுகின்றான். இவ்வருணிப்பு ஆற்றுப்படைப் பாடல்களைப் போன்றே உள்ளது.

**நாட்டுப்புறக் கலைமரபு**

சங்ககாலப் பாணர்களைப் போன்றே இன்றைய கேரளத்தில் வாழும் பாணர்களும் ஆடல், பாடல், இசை ஆகிய மூன்றிலும் வல்லவராய் விளங்குகின்றனர். கேரளத்தில் பாணர்கள் தெய்யாட்டம், கோலந்துள்ளல் முதலிய கிராமியக் கலைகளிலும் பங்கெடுப்பர். அவர்கள் பங்கெடுக்காத கலைகள் மிகக் குறைவே. திருவிதாங்கூர் பகுதியில் வாழும் பாணர்கள் காக்காரிஷி நாடகம், படேணி ஆகிய நாட்டுப்புறக் கலைகளை நிகழ்த்துகின்றனர் என்றாலும் பாலக்காடு மா மாவட்டத்தில் வாழும் பாணர்களே மிகுந்த கலைத் திறமையுடையவர்களாவர்.

**வேலன் மரபு**

சங்க இலக்கியத் தலைவியின் காதல் நோயை அறியாத தாய் அவள் உடல், உள்ள வேறுபாட்டிற்குக் காரணம், கெட்ட தேவதைகள் எனக் கருதி அதை விரட்ட வேலன் வெறியாடல் நிகழ்த்துவாள். இது சங்க அகப்பாடல்களில் காணப்படும் இன்றியமையாத மரபாகும். இது பற்றிய செய்திகள் தொகை நூல்களைவிடத் திருமுருகாற்றுப்படை, கல்லாடம் போன்றவற்றில் விரிவாகக் காணப்படுகின்றன. சங்கப் பாடல்களில் முருகனை வழிபடும் பூசாரியான வேலன் ஆட்டையறுத்து, குரவையாடி, செந்நூல்யாத்து,

வெண்பொரி சிதறி, மாலை சூட்டி வெறியாடுவது வழக்கம். கல்லாடம் எனும் நூல் வேலனாட்டச் சடங்கைப் பின்வருமாறு விவரிக்கின்றது. உறவினர் கூடியிருக்கும் முற்றத்தில் முருகனது மயில்கொடி நடப்பட்டது. தரையெங்கும் வெட்சி மலர்கள் பரப்பப்பட்டன. தேக்கிலைகளில் இரத்தம் கலந்த தினைமாவு படைக்கப்பட்டது. நான்கு திசைகள் நோக்கி இலைகள் வைக்கப்பட்டன. வேலன் ஆட்டுக்குட்டியைப் பலிகொடுக்கின்றான். ஈச்ச இலையால் வடிகட்டப்பட்ட கள்ளைக் குடிக்கிறான். பேரிகை அடித்து முருகனை அழைக்கிறான். மலையாள இலக்கியத்தில் இதனை,

அரியாணே பிணியரம் வரிக...ஏ
அரியாணே பிணியரம் வரிக
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
புவணிஞ்ஞு திருமுடி மேலும்
தோலுழிஞ்ஞு பிணி தீர்ந் நொழிக
பொன் நிற மாமணி நுதல் மேலும்
தோலுழிஞ்ஞு பிணி தீர்ந் நொழிக
கயல் நிகரொத்த கண்ணிண மேலும்
தோலுழிஞ்ஞு பிணி தீர்ந்நொழிக
அரியாணை! பிணியே யிறங்கு
அரியாணை! பிணியே யிறங்கு[114]

என அமைந்துள்ளது.

பூவணிந்த திருமுடிமேலும் தோல் சுற்றப் பிணி தீர்ந்திடுக பொன் நிற மாமணி நுதல் மேலும், தோல் சுற்றிப் பிணி தீர்ந்திடுக கண்ணாடிக் கன்னத்தின் மேலும் தோல் சுற்றப்பிணி தீர்ந்திடுக, கயல் நிகர் கண்ணினை மேலும், தோல் சுற்றப் பிணி தீர்ந்திடுக என்று கூறுகின்றனர். இதனை,

வேலன்தே தைஇய வெறியயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்[115]

என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

சங்க இலக்கியத்தில் இருந்த வெறியாட்டம் என்பது வடமலபாரில் உள்ள கொத்தநாட்டுப் பகுதியில் தெய்யாட்டம், திரையாட்டம் என்று வழங்கப்பட்டு வருகின்றது. இது ஒரு நாட்டுப்புறக் கூத்து நடனம். இவ்ஆட்டம் மலையன், வேலன், மண்ணான் போன்ற திராவிட மலைவாழ் இனத்தவர்களால் ஆடப்படுகின்றது. தெய்யாட்டம் என்பது தெய்வ ஆட்டம் என்ற சொல்லின் சிதைவே. கொலத்த நாட்டுப் பகுதிகளில் உள்ள சிறுதெய்வங்களை வழிபடுவதற்காக ஆண்டுக்கொரு முறை நடத்தப்படும். விழா நாட்களில் இந்நடனம் நிகழ்த்தப்படுகின்றது. இவ்வாறு சங்க இலக்கியத்தில் காணப்படும் வெறியாட்டம் என்ற பழக்கம் திராவிட நாட்டு மக்களிடையேயும் காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது.

## வேலன் வெறியாட்டமும் தெய்யாட்டமும்

தெய்யாட்டத்தில் ஆட்டக்காரனின் மிகையான அணியும், ஆடை அலங்கார ஒப்பனைகளுமே சிறப்பம்சம். இவ்ஒப்பனை ஒவ்வொரு தெய்வத்திற்கும் தக்கவாறு மாறுபடும். இவ்ஒப்பனைக்குக் கோலம் என்று பெயர். அடியார்க்கு நல்லார் பலவிதமான நாட்டு நடனங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது கோமாளி, தலைவன், அந்தணன், மற்றும் பறையறிவிப்போன் ஒப்பனையைக் கோலம் என்று குறிப்பிடுவதும் ஒப்பு நோக்கத்தக்கது. ஆட்டக்காரனின் முகம் கோரமாகக் காட்சியளிக்கும். முகத்திலும் உடம்பிலும் முரண்பட்ட அழுத்தமான வண்ணக் கலவைகள் பூசப்பட்டு பயங்கரமாகத் தோற்றம் அளிப்பான். மூங்கிலாலும் தென்னை ஓலையாலும் செய்யப்பட்ட சிவப்பு மற்றும் வெள்ளை நிற உடைகளை அணிந்திருப்பான். இவ்வாட்டத்தின் போது கெண்டை, மேளம் போன்ற வாத்தியங்கள் உரத்த முழக்கத்தோடு வாசிக்கப்படுகின்றன.

தெய்யாட்டத்தில் வேலன் என்ற மலைச்சாதியினருக்கு முக்கியப் பங்குண்டு. இவ்வேலன் இனத்தாரின் குலதெய்வம் சுப்பிரமணியன் என்று கூறப்படுகிறது. இவர்கள், தங்கள் மூதாதையர் வாழ்ந்த நாடாகத்

தென்கன்னட மாவட்டத்திலுள்ள சுப்பிரமணியஸ்தலம் என்பதைக் குறித்து, அப்பிரதேசத்தைச் சுப்பிரமணிய நாடு என்றே அழைக்கின்றனர்.

**பாணர் மரபு**

சங்க இலக்கியத்திற் காணப்படும் பிறிதொரு முக்கியமான மரபு பாணர் மரபாகும். "உலக வரலாற்றின் தொடக்க ஊழிக் காலமாகிய வீர நிலைக்காலத்தில் உள்ள பண்பாட்டுக் கலைகளில் நாடோடிப் பாடகர் மரபைக் காண முடியுமென"க் கைலாசபதி தமது 'தமிழ் வீரயுகப்பாடல்' நூலில் கூறுகின்றார். சங்க இலக்கியத்தில் இந்நாடோடிப் பாடகர் மரபு சார்ந்தவர்களாகப் பாணர், கூத்தர், பொருநர், விறலியர், புலவர், அகவுநர் எனப் பலவகைப்பட்டோரைக் காணமுடிகிறதென்றும் இவர்கள் வாய்மொழிப் பாடல் மரபினர் என்றும் அவர் விளக்கிச் செல்வார். இதற்குச் சான்றாக,

சேண் விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயுளானே[116]
நல்லோர் குழீஇய நநவில் அவையத்து[117]

என வரும் சங்கப் பாடலடிகளை மேற்கோள் காட்டுவார். சங்க காலத்துப் பாணர்கள் பாடல்களை யாழ் மூலம் இசைத்துப் பாடினர். அவ்யாழ் சீறியாழ், பேரியாழ் என இருவகைப்பட்டதென்றும் ஆற்றுப்படை நூல்களின் மூலம் அறிய முடிகின்றன. இவர்கள் பழுமரம் தேடும் பறவை போலத் தங்கள் உணவிற்காகப் பல்வேறு இடங்களிலுள்ள மன்னர்களை நாடிச் சென்றனர் என்பதைக் பின்வரும் பெரும்பாணாற்றுப் பாடலடிகளால் உணர முடிகின்றது.

பழுமரம் தேரும் பறவை போல
கல்லென் சுற்றமொடு கால் கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவு வாய்ப்பாண[118]

கூத்தர்கள் எப்படி கூத்து நடத்துகின்றனர் என்பதை மலையாள இலக்கியத்தில்,

அவிடந் நெழுஞ் நேற்று ஆரோமரும்
பீடம் வலிச் சங்ஙுவச்சு சேகோன்
பாவாட தன்னெ விரிக்குந்நுண்டு
பாவாட தன்னில் தளிக வச்சு

தளிக நிறயோளம் வெள்ளரியும்
வெள்ளரி மீதொரு நாளிகேரம்
நாளிகேரத்தின் மேல் செம்பழுக்கா
பழுக்கா முகளி லொரு கோழிமுட்ட
கோழி முட்ட மேல் ஸூசி நாட்டி
சுரிகமுனமேல் மறிஞ்ஞு நிந்து
ந்ருத்தங்ங ளேழும் கழிச்சவனும்[119]

அங்கிருந் தெழுந்த ஆரோமர்ப் பேர்ச் சேவகன் பீடமிழுத்து வைத்தான். ஆடையைக் கீழே விரித்து வைத்தான். ஆடையின் மேல் ஒரு தட்டு வைத்து, தட்டு நிறைந்திடப் பச்சரிசி, பச்சரிசிக்குமேல் தேங்காய் ஒன்று, தேங்காயின் மீதொரு செவ்வடைக் காய், அடைக்காயின் மீதொரு கோழிமுட்டையை வைத்தான். அக்கோழி முட்டை மீதில் ஊசி நாட்டி ஊசி முனைமேல் சுரிகை நாட்டினான். அச்சுரிகை கூர் மேலே தலைகீழ் நின்று நிருத்தங்கள் கூழை ஆடினான்.

பல நூறு ஆண்டுகளுக்கு முன் இந்தியா முழுவதும் திராவிட நாடாக இருந்துள்ளது. உலகில் உள்ள நாகரிகங்களில் திராவிட நாகரிகமே சிறந்ததாக விளங்கியுள்ளது.

சங்க காலத்தில் ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான உணவைச் சாப்பிட்டுள்ளனர். நூல் இழை போன இடம் தெரியாத நுண்மையான உடையினை அணிந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

திருமணம் என்பது நல்ல நாள் குறித்தே நடைபெற்றுள்ளது. தொய்யில் எழுதுதல், இறை வழிபாடு, அவல் செய்தல், பண்டிகைகள், அணிகலன் அணிதல், விருந்தோம்பல் போன்ற பல்வேறு பழக்கங்களைத் தமிழ், தெலுங்கு, மலையாள, கன்னட மக்கள் கொண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

நம்பிக்கைகளில் பல்லி சொல் பலன், மந்திர நம்பிக்கை, கட்டுவிச்சி குறி, கனவு, புள் நிமித்தம், மறு பிறப்பு, காக்கைக்கு சோறு இடுதல், இன்ன பிற பழக்கங்களையும் தமிழ், தெலுங்கு, மலையாள கன்னட மக்கள் கொண்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

பண்டைத் தமிழர்கள் நிலம் சார்ந்த தொழில்களையே செய்து வந்துள்ளனர். இதனைத் தவிர பிற தொழில்களாக உழவுத் தொழில், நெசவுத் தொழில், தச்சுத் தொழில், வாணிபம் போன்ற தொழில்களை தெலுங்கு, மலையாள மக்கள் செய்து வந்துள்ளனர்.

மலையாள இலக்கியத்தில் சங்க இலக்கிய மரபுகளான வீரர் வழிபாட்டு முறை, பாணர் வாழுமிடங்கள், நாடோடிப் பாடகர் மரபு, நாட்டுப்புறக் கலைமரபு, வேலன் மரபு, வேலன் வெறியாட்டம், தெய்யாட்டம் என்ற கூறுகள் இடம் பெற்றுள்ள முறையைப் பற்றி அறியமுடிகின்றது.

## குறிப்புகள்

1. ந.சி.கந்தையா, *திராவிட இந்தியா*, ப.1.
2. ஞா.தேவநேயப்பாவாணர், *திரவிடத்தாய்*, ப.82.
3. புறம்., பா.187.
4. The Little Lifco Dictionary English - English - Tamil, p.59.
5. கலித்., பா.133:8.
6. ந.சி.கந்தையா, *திராவிட இந்தியா*, ப.22.
7. மேலது., ப.26.
8. மேலது., ப.27.
9. பட்டின., பா.அடி.44-45.
10. இந்நூலில் இடம்பெற்றுள்ள மேற்கோள் பாடல்கள் எந்த நூலிலிருந்து எடுத்தாளப்பட்டது என்ற குறிப்புகள் காணப்பெறாமையால், இந்நூலில் இடம்பெற்ற எடுத்துக்காட்டுப் பாடல் எண்களையே ஆய்வுக் குறிப்புகளாக எடுத்தாளப்பட்டுள்ளது. மா.இளையபெருமாள், *லீலாதிலகம்*, பா.112.
11. கலி., பா.43: 24-25.
12. புறம்., பா.91: 9-11.
13. இதில் ஆசிரியர் எடுத்துக் காட்டிய பாடல்கள் எதிலிருந்து எடுக்கப்பட்டது என்ற குறிப்பும் அப்பாடல்களுக்கான எண்களும் கொடுக்கப்படாமையால் ஆய்வேட்டில் பக்க எண் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளது. இராம.கோபிநாதன், *மலையாள இலக்கிய வரலாறு*, ப.63.
14. குறுந்., பா.58: 5-6.
15. புறம்., பா.261: 8-9.
16. ஐங்., பா.364:1-2.
17. முல்லை., பா.அடி.59-61.
18. கலி., பா.43: 24-25.
19. புறம்., பா.136.
20. பொருந., பா.155.

21. மேலது., பா.அடி.82-83.

22. புறம்., பா.13.

23. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.41.

24. ந.சி.கந்தையா, திராவிட இந்தியா, ப.74.

25. அகம்., பா.11.

26. தாயம்மாள் அறவாணன் திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, ப.70.

27. டா.வெலகா வெங்கடப்பய்ய, மனபரசத்வம், ப.56.

28. அக்கன, வஜனக்கலு, ப.70.

29. அகம்., பா.389:6.

30. கலி., பா.76:15.

31. அகம்., பா.176:21.

32. பரி., பா.6:17.

33. அகம்., பா.389:7.

34. லீலாதிலகம்., பா.175.

35. புறம்., பா.143:1-4.

36. கல்யாணி வெங்கடராமன், தாசிமய்யாவின் அருள் மொழிகள், பா.129.

37. திருமுருகு., பா.அடி.225-226.

38. பரி., பா.18.

39. சி.இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப.62.

40. தொல்காப்பியர், தொல்காப்பியம் பொருள், நூ.18.

41. மேலது., நூ.5.

42. திருமுருகு, பா.அடி.223-226.

43. புறம்., பா.56.

44. லீலாதிலகம், பா.101.

45. புறம்., பா.6.

46. திருமுருகு., பா.அடி.156-159.

47. அகம்., பா.141:17-18.

48. பெரும்., பா.அடி.225-226.

49. மலை., பா.அடி.121.

50. அகம்., பா.141.

51. நற்., பா.80.

52. கலித்., பா.59.

53. பெரும்., பா.அடி.485.

54. திருமுருகு., பா.அடி.23.

55. கலித்., பா.92:33-38.

56. கொர்லபாடி ஸ்ரீராமமூர்த்தி, தெலுங்கு இலக்கிய வரலாறு, தொகுதி இரண்டு, பா.77இல் 3 ஆவது ஆஸ்வசம்.

57. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.63.

58. பதி., பா.16:15-16.

59. லீலாதிலகம்., பா.54.

60. நற்., பா.77:9-10.

61. நெடு., பா.அடி.143-144.

62. கலி., பா.85:3-4.

63. அகம்., பா.321-15.

64. தொல்காப்பியர், தொல்காப்பியம் களவியல், நூ.17.

65. மேலது., நூ.11.

66. மேலது., நூ.11.

67. நற்., பா.142:10-12.

68. புறம்., பா.10:1-3.

69. சரோப்பியா, தமிழு கன்னடா சாகித்ய சம்மந்தகளா தலூலாளிக அத்யாயனா, ப.66.

70. கலித்., பா.11:19-22.

71. புறம்., பா.281.

72. குறுந்., பா.23.

73. புறம்., பா.41: 8-11.

74. டா.வெலகா வெங்கடப்பய்ய, மனபாரசத்வம், ப.512.

75. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.70.
76. அக்கன, வஜனக்கலு, ப.70.
77. தொல்காப்பியர், தொல்காப்பியம் களவியல், நூ.44.
78. தொல்காப்பியர், தொல்காப்பியம் புறத்திணை, நூ.1:17.
79. புறம்., பா.124.
80. புறம்., பா.214.
81. பொருந., பா.அடி.335.
82. வே.முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.10.
83. சிறுபா., பா.அடி.87-91.
84. மேலது., பா.அடி.84-87.
85. நற்., பா.80:1-4.
86. குறுந்., பா.133:1.
87. அகம்., பா.1:14.
88. நற்., பா.60:7.
89. அகம்., பா.187:21-23.
90. மலை., பா.அடி.114-115.
91. பொருந., பா.அடி.246-248.
92. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.54.
93. தொல்காப்பியர், தொல்காப்பியம் பொருள், நூ.249.2.
94. நற்., பா.353:1-2.
95. புறம்., பா.383:10-11.
96. டா.வெலகா வெங்கடப்பய்ய, மனவாரசத்வமு, ப.85.
97. மேலது., ப.85.
98. பெரும்., பா.அடி.248.
99. புறம்., பா.206:11-12.
100. மேலது., பா.87.
101. புறம்., பா.97.
102. லீலா திலகம், பா.112.

103. சிறுபா., பா.அடி.209-210.

104. பட்டின., பா.அடி.209-210.

105. கொர்லபாடி ஸ்ரீராமமூர்த்தி, தெலுங்கு இலக்கிய வரலாறு, ப.567.

106. இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.103.

107. ந.சி.கந்தையா, திராவிட இந்தியா, ப.93.

108. தொல்காப்பியர், தொல்காப்பியம் புறத்திணை, நூ.5.

109. புறம்., பா.243.

110. மலை., பா.அடி.387-388.

111. அகம்., பா.131.

112. H.திப்பேருத்ரசாமி, கர்நாடக சம்ஸ்கிருத சமீக்ஷே, ப.242.

113. பா.ஆனந்தகுமார், இலக்கியமும் பண்பாட்டு மரபுகளும், ப.84.

114.மேலது., ப.84.

115.இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.156.

116. திருமுருகு., பா.அடி.222-223.

117.மலை., பா.அடி.75.

118. பெரும்., பா.அடி.20-23.

119.இராம.கோபிநாதன், மலையாள இலக்கிய வரலாறு, ப.62.

# முடிவுரை

தமிழ் மொழியில் 2, 3 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய சங்க இலக்கியங்களோடு தெலுங்கில் கி.பி.6 ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து 15 ஆம் நூற்றாண்டு வரையுள்ள 9 நூற்றாண்டுகளுக்குரிய இலக்கியங்களையும், மலையாளத்தில் கி.பி.13 முதல் 18 ஆம் நூற்றாண்டு வரையுள்ள 5 நூற்றாண்டுகளுக்குரிய இலக்கியங்களையும், கன்னடத்தில் 11 முதல் 18 ஆம் நூற்றாண்டு வரையுள்ள 7 நூற்றாண்டுகளுக்குரிய இலக்கியங்களையும் ஒப்பிட்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பெற்றது.

சங்க இலக்கியங்களைப் போன்று அகம், புறம் போன்ற நெறிமுறைகள் மற்ற திராவிட மொழிகளில் இல்லை. சங்க இலக்கியத்தை நெறிப்படுத்த தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் இருப்பதைப் போன்று பிற திராவிட மொழிகளில் உள்ள இலக்கணங்கள் அவற்றை நெறிப்படுத்தவில்லை எனலாம்.

சங்க இலக்கியம் தனிப்பாடல்களின் ஒரு தொகுதி போல் காணப்பட்டாலும் அதனைத் தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் நெறிப்படுத்துவதால் அது செவ்வியல் இலக்கியமாகத் திகழ்கின்றது. சங்க இலக்கியத்தில் காணப்படும் பல இலக்கியக் கூறுகள் அதன் கிளைமொழிகளில் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றன என்பதையும், தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற திராவிட மொழிகளின் தோற்றம், வளர்ச்சி, உறவுகள், தொடர்புகள் போன்றவை எவ்வாறு அமைந்துள்ளன என்பதையும் இவ்ஆய்வேட்டின் மூலம் அறியலாம்.

சங்க இலக்கியத்தில் காணப்பட்டச் சமூக மரபுகளின் எச்சங்கள் சில இன்றும் கேரள நாட்டுப்புற இலக்கியத்திலும் வாழ்க்கையிலும் நிலவுகின்றன. அவற்றில் வீரர் வழிபாட்டு மரபு, பாணர் மரபு, வேலன் மரபு என்பன சங்க

இலக்கியத்தில் காணப்பட்டவாறே இதிலும் காணப்படுகின்றன என்பதை அறிய முடிகின்றது.

மக்களுடைய பழக்கவழக்கங்கள், பண்பாடு, கலாச்சாரம் முதலியன அவர்கள் வாழுகின்ற நில அமைப்பைப் பொறுத்துள்ளன என்ற உண்மையை மிகப் பழங்காலந்தொட்டே பண்டைய தமிழ் மக்கள் உணர்ந்திருக்கின்றனர்.

தமிழர்களின் பண்பாடு என்பது இன்று நேற்று உருவானதல்ல. மனிதன் என்று காட்டை விட்டு வீட்டில் வாழத் தலைப்பட்டானோ அன்றே பண்பாடும் தோன்றிவிட்டது. அவர்களின் பண்பாடு மிகவும் போற்ற வேண்டிய ஒன்றாகும். அவர்கள் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கொள்கையில் சிறந்து விளங்கி வந்துள்ளனர்.

திராவிட மொழிகள் 23க்கும் அதிகமாக இருந்தாலும் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளுக்கு மட்டுமே தெளிவான இலக்கியங்கள் இருக்கின்றன. தெலுங்கு இலக்கியம் இராஜ நரேந்திரனின் அவைப்புலவரான நன்னய்யாவின் ஆந்திர மகாபாரதத்திலிருந்தும் மலையாள இலக்கியம் இராமசரிதத்திலிருந்தும் கன்னட இலக்கியம் கவிராஜ மார்க்கத்திலிருந்தும் ஆரம்பமாகின்றது. நம்முடைய வழக்கத்தில் அதிகமாகப் பயின்று வரும் பொருட்களைக் குறிக்கும் அடிப்படைச் சொற்கள் மொழி மாறுபட்ட போதிலும் திராவிட மொழிகள் அனைத்திலும் பொதுவாக மாறாமல் ஒன்று போலவே அமைந்திருப்பதை திராவிட மொழிகளின் சிறப்பியல்புகள் என்ற தலைப்பில் காணலாம். மூலத்திராவிடம் என்பது தமிழாகவே இருந்துள்ளது. இதிலிருந்து கிளைத்தவைதான் தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகள். பண்டைக் காலத்தில் நாட்டுப் பெயர்களும் மொழிப் பெயர்களும் 'அம்' ஈறு பெற்றே வழங்கி வந்துள்ளன. சிங்களம், கடாரம், ஆரியம், தமிழும் தமிழம் எனக் குலத்தையும், நாட்டையும் மொழியையுங் குறித்தது. தமிழம் என்னும் பெயரே திராவிடம்

எனத் திரிந்துள்ளது. திராவிட மொழிகளின் தாயாகவும் தமிழே விளங்கியுள்ளது. தமிழ் இலக்கணக் கூறுகளான திணை, பால், பெயர்ச் சொல், வினைச்சொல், ஒருமை, பன்மைகளுக்கும் திராவிட மொழிகளில் உள்ள திணை, பால், பெயர்ச்சொல், வினைச்சொல், ஒருமை, பன்மைகளுக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதை அறியலாம். சங்க இலக்கியக் கூறுகளான கருத்து, கற்பனை, வடிவம், உணர்ச்சி, மொழிநடை போன்ற கூறுகள் தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இலக்கியங்களில் இடம் பெறும் முறை ஆகியவைப் பற்றி 'திராவிட மொழி இலக்கியங்கள் ஒரு பார்வை' என்னும் முதல் இயல் வாயிலாக அறிய முடிகின்றது.

தெலுங்கு மொழி கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்குப் பின்னரே தனிப் பேச்சு மொழியாக வழங்கியமைக்குப் பல சான்றுகள் இலக்கியத்தில் கிடைக்கின்றன. தெலுங்கு மொழியின் இலக்கிய வளர்ச்சி என்பது கீழை சாளுக்கியர்களின் கல்வெட்டுக்களிலிருந்து ஆரம்பமாகியிருக்கின்றது. சங்க இலக்கியங்களில் தெலுங்கு, வடுகு, தெலுங்கர் நாடு பற்றிய குறிப்புகளை பட்டினப்பாலை, அகம், புறம், குறுந்தொகை, ஐங்குறுநூறு போன்ற எட்டுத்தொகை நூல்களின் மூலம் அறியலாம். தெலுங்கர் கி.பி.11 ஆம் நூற்றாண்டிலிருந்தே தமிழ் நாட்டோடு தொடர்பு கொண்டு வந்துள்ளனர். இராஜேந்திரச் சோழனின் மகள் அம்மங்க தேவியை மணம் முடித்ததிலிருந்து தமிழ் நாட்டோடு தெலுங்கர்களுக்கு அரசுமுறைத் தொடர்பு ஏற்பட்டது. தமிழ் இலக்கணத்தில் உள்ள பெயர்ச் சொற்கள், வினைச் சொற்கள் ஆகியவற்றிற்கும் தெலுங்கின் பெயர்ச் சொற்கள் வினைச் சொற்கள் ஆகியவற்றிற்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. தெலுங்கில் உள்ள பல்வேறு சொற்கள் தமிழில் பலவாறாகத் திரிந்துள்ளன. சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற அழுகை, பெருமிதம், வீரம், மருட்கை, தன்னுணர்ச்சிப் பாங்கு, கற்பனை, அரசியல், பக்தி, உவமை அணி, விரோத அணி, உருவகம், எதுகை, மோனை, வருணனை, சிலேடை போன்ற கூறுகள் அனைத்தும் தெலுங்கு மொழி இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. இத்தகு செய்திகளை

'தமிழ் - தெலுங்கு மொழி இலக்கியங்கள்' என்னும் இரண்டாம் இயலின் வழி அறியமுடிகின்றது.

மலையாள மொழியின் தோற்றம் குறித்து, எல்லீசு ஒரு கட்டுரை வரைந்தார். செந்தமிழின் ஒரு பிரிவாகக் கொடுந்தமிழ் இருப்பதைப் போல மலையாளமும் செந்தமிழின் ஒரு பிரிவு என்பதிலிருந்து மலையாளம் தமிழிலிருந்து எவ்வாறு பிரிந்தது என்பதை அறியலாம். மலையாளம் தமிழின் கிளைமொழிகளுள் ஒன்றாக இருந்து அரசியல், பண்பாடு, புவியியல் காரணங்களினால் பிரிவுற்று பின்னர்த் தனிமொழியாக வளர்ச்சி பெற்று வந்துள்ளது. கி.பி.18 ஆம் நூற்றாண்டு வரையில்தான் வட்டெழுத்து வழக்கில் இருந்திருக்கின்றது. பின்னர் மலையாளம் தன்னுடைய மொழியில் இலக்கியங்களைப் படைத்துள்ளது. மலையாளம் மூலத்திராவிட மொழியினின்று பிரிந்து தனக்கே உரித்தான உருவம் பெற்றுவிட்ட பிறகு சமஸ்கிருதத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு வளர்ந்திருக்கிறது. மலையாளத்திற்கும், தமிழுக்கும் உள்ள உறவு நிலையைக் கேரள நாட்டின் இலக்கியங்களிலும் அறிவியல் விவகாரங்களிலும் அறியலாம். மலையாளம் முதிர்ந்த நிலையில் 'கிருஷ்ண காதா', 'அத்யாத்ம ராமாயணம்', 'மகாபாரதம்', 'ஞானப்பாட்டு', 'சந்தான கோபாலாம் பானா', 'கிருஷ்ண கீதி' ஆகிய நூல்கள் தோற்றம் பெற்றுள்ளன.

மலையாளச் சொற்கள் தமிழிலிருந்து முறைப் பெயர்கள், மக்கட் பெயர்கள், விலங்குப் பெயர்கள், பறவைப் பெயர்கள், கருவிப் பெயர்கள், ஆடையணிப் பெயர்கள், தட்டுமுட்டுப் பெயர்கள், இடப்பெயர்கள், காலப் பெயர்கள், சினைப் பெயர்கள், பல்பொருள் பெயர்கள், தொழிற் பெயர்கள், வினைச் சொற்கள் அதற்கான துணை வினைகள், இடைச் சொற்கள், வினாவடிச் சொற்கள் ஆகிய சிலவற்றில் ஒன்றுபட்டும் வேறுபட்டும் இருப்பதை அறியலாம். சங்க இலக்கியத்தில் காணப்படும் நகை, அச்சம், உவமை, கற்பனை, உள்ளுறை, பல்பொருள் உவமை, எடுத்துக்காட்டு உவமை

அணி, உருவகம், சிலேடை, எதுகை மோனை, தொடர் உவமை, அடுக்குத் தொடர் ஆகிய கூறுகள் மலையாள இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளமை போன்றவற்றை 'தமிழ் - மலையாள மொழி இலக்கியங்கள்' என்னும் மூன்றாம் இயல் வழி அறியலாம்.

கன்னடத்தில் எழுத்து வடிவம் அசோகன் காலத்தில் கி.பி. 5, 6 ஆம் நூற்றாண்டில் முதல் பிராகிருதம் அல்லது வடமொழிக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கர்நாடகத்தில் காணப்பட்டு இருப்பதை அறியலாம். கன்னடம் குறைந்தது இருபது நூற்றாண்டுகளேனும் வழக்கில் இருந்து பல மாறுபாடுகள் அடைந்து வளர்ந்து வந்துள்ளது. தமிழ்ச் சொற்களின் முதலில் உள்ள வகரம் பகரமாக மாறியிருத்தலைப் பல கன்னடப் பதங்களில் அறியலாம். வடுகர் என்பது படகர் என்றும் வீடு என்பது பீடு என்றும் வீதி என்பது பீதி என்ற மாற்றங்களிலிருந்து தமிழுக்கும் கன்னடத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை அறியலாம். சங்க இலக்கியத்தில் அகம், புறம் போன்ற எட்டுத் தொகைப் பாடல்களின் மூலமும் தமிழ் கன்னட நாட்டின் தொடர்பை அறியலாம்.

சங்க இலக்கியத்தின் தொன்மம், அழுகை, மருட்கை, அச்சம், இயைபுக் கற்பனை, எதுகை, மோனை, உவமை அணி, உருவகம், பக்தி, தத்துவம், ஒலிக் குறிப்பு நிலை, அடுக்குத் தொடர், வஞ்சினம் கூறுதல் போன்றவை கன்னட இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள விதம், கன்னடம் தமிழிலிருந்து ஒலித் திரிபு, உயிரீற்றுப் பேறு, தொகுத்தல் திரிபு, வேற்றுமையுருபு மாற்றம், போலி, எதிர்மறையிடை நிலை குறுக்கம், பொருட் பொதுப்பித்தல், இனப்பொருள் வழக்கு, வழக்கற்ற சொல் வழக்கு, நெடுஞ்சுட்டு வழக்கு விழாமை, இயற்கை தெரிப்பு, புதுச்சொல் புனைவு, பெயரீற்றுப் பால் விகுதிக்கேடு, ஓசைப்பேறு போன்ற வகைகளில் சொற்கள் திரிந்துள்ளன. தமிழ் கன்னட இலக்கணச் சொற்களுக்கு இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை முறைப் பெயர்கள், மூவிடப் பெயர்கள், வினாப் பெயர்கள், திசைப் பெயர்கள்,

உணவுப் பெயர்கள், ஆடையணிப் பெயர்கள், தட்டு முட்டுப் பெயர்கள், இடப்பெயர்கள், காலப் பெயர்கள், சினைப் பெயர்கள், பண்புப் பெயர்கள், எண்ணுப் பெயர்கள், தொழிற் பெயர்கள் போன்றவற்றில் இருப்பதை 'தமிழ் கன்னட மொழி இலக்கியங்கள்' என்னும் நான்காம் இயலின் மூலம் அறியமுடிகின்றது.

திராவிட மக்கள் பழைமைத்தொட்டே இந்திய நாட்டில் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அவர்களுடைய நாகரிகம் மிகவும் போற்றத்தக்கதாக இருந்துள்ளது. சங்க இலக்கியம், அக்காலப் பண்பாட்டைக் கூறும்போது 'பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்' என்று கூறுவதன் மூலம் அக்காலப் பண்பாட்டைப் பற்றி அறியலாம். பண்டைக் காலத்தில் ஐவகை நிலங்களைச் சேர்ந்த மக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான உணவைப் பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் நூல் இழை போன இடம்தெரியாத நுண்மையான ஆடைகளைப் பயன்படுத்தியுள்ளனர். திருமணம் என்பது அக்காலத்தில் பெரும்பாலும் காதல் திருமணமாகவே நடைபெற்றுள்ளது. அவர்கள் நல்ல நாள் பார்த்தே திருமணத்தை நடத்தியுள்ளனர்.

அக்காலத்தில் பெண்கள் மார்புப்பகுதியிலும், ஆண்கள் கைகளிலும் தொய்யில் எழுதியுள்ளனர். எந்த ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னும் இறைவனை வணங்கிய பின்னர் வேலையை ஆரம்பித்திருக்கின்றனர். ஊர்களில் உறையும் தெய்வங்களாக முச்சந்தி, நாற்சந்திகளில் ஒரு கல்லை நட்டு வழிபட்டு வந்துள்ளனர். சங்ககாலமக்கள் ஐவகை நிலங்களுக்கும் ஐந்து வகையான தெய்வங்களைப் படைத்து வணங்கி வந்துள்ளனர். அருஉ உருவ வழிபாட்டு முறையில் முருகனை ஆற்றங்கரையிலும், குளத்தங்கரைகளிலும் பூசித்து வழிபட்டுள்ளனர். தெலுங்கு கன்னட இன மக்களும் சிவனை வழிபட்டு வந்துள்ளனர். விசேச நாட்களில் திராவிடர்கள் அனைவரும் அவல் செய்து இறைவனுக்குப் படைத்துள்ளனர். கார்த்திகை, தைநீராடல் என்ற

பழக்கத்தையும் கொண்டிருந்தனர். வெற்றிலை பாக்கு போடும் பழக்கமும் இருந்துள்ளது.

ஆண்கள், பெண்கள் இருவரும் அணிகலன்கள் அணிந்து வந்திருக்கின்றனர். பெண்கள் தலையணி, காதணி, கழுத்தணி, இடையணி, விரலணி, காலணி போன்றவற்றையும் ஆண்கள் விரலணி, தலையணியாக கவசம், காலணி போன்ற அணிகலன்களை அணிந்திருக்கின்றனர். விருந்தோம்பல் பண்பும் மிகவும் சிறப்பாக போற்றப்பட்டு வந்திருக்கின்றது. பல்லி சொல் பலனில் நம்பிக்கை வைத்திருந்தனர். மந்திரத்தால் நோய்கள் குணமாகும் என்று நம்பி வந்தனர். குறமகளை அழைத்து குறிகேட்டு வருகின்ற நன்மை, தீமைகளை அறிந்தனர். கனவில் நம்பிக்கை வைத்திருந்தனர். நல்ல நாள் கெட்ட நாள் பார்ப்பதும், பறவைகள் சகுனம் பார்ப்பதிலும் நம்பிக்கை வைத்திருந்தனர். நல்லது செய்தால் சொர்க்கத்துக்குப் போவார்கள் என்றும், மறுபிறப்பு ஒன்று உண்டு என்றும் நம்பினர். விரத நாட்களில் சாப்பிடுவதற்கு முன்பு காக்கைக்கு சோறு இடுவதில் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். மனித நேயப் பண்பாளராகவும் சிலர் இருந்துள்ளனர். சங்க கால மக்கள் நிலம் சார்ந்த தொழில்களை செய்து வந்துள்ளனர். நிலம் சாராத தொழில்களாக உழவுத்தொழில், நெசவுத்தொழில், தச்சுத்தொழில், வாணிபம் போன்ற தொழில்களையும் தெலுங்கு, மலையாள மக்கள் செய்துள்ளனர். சங்க இலக்கியக் கூறுகளான வீரர் வழிபாட்டு மரபு, பாணர் வாழுமிடங்கள், நாடோடிப் பாடகர் மரபு, நாட்டுப்புறக் கலை மரபு, வேலன் மரபு, வேலன் வெறியாட்டமும், தெய்யாட்டமும் என்ற கூறுகள் மலையாள இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன என்பதையும் 'இலக்கியங்கள் காட்டும் வாழ்வியல் கூறுகள்' என்னும் ஐந்தாம் இயலின்வழி அறியமுடிகின்றது.

சங்க இலக்கியத்தின் தாக்கம் திராவிட மொழி இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது என்பது இவ்ஆய்வேட்டின் கருத்து. திராவிடப் பண்பாடு போற்றத்தக்கது. அப்பண்பாட்டுக் கூறுகளுள் சில, மேலை நாட்டு

கலாச்சாரத்தின் விளைவாகச் சிதைந்து வருகின்றன. பலவற்றில் மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளன. உணவு, உடை, பழக்கவழக்கங்கள் மற்றும் பேச்சுவார்த்தையிலும் கூட சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய திராவிடமொழி இலக்கியங்களில் சங்க இலக்கியங்களின் தாக்கம் பல்வேறு நிலைகளில் அமைந்திருப்பதை இவ்வாய்வு வழி அறிய முடிகின்றது.

# பின்னிணைப்புகள்

# 1.அ. இன்றைய இந்தியாவில் மக்கள் கலப்பு



## படம். 4500 ஆண்டுகளுக்கு முன் இந்தியா முழுவதும் திராவிடமே

4500 ஆண்டுகட்கு முன் இந்தியா முழுவதும் திராவிடமே.
—மண்ணிற் புதையுண்ட மொஹெஞ்சொ-தரோ, ஹரப்பா நகரங்கள்—

## 1இ. சங்ககாலத் தமிழகத்தின் எல்லைகள்



## டச. ஆந்திர மாநிலத்தின் எல்லைகள்

# ஆந்திர மாநிலம்



1. உ. கேரள மாநிலத்தின் எல்லைகள்



படம். கர்நாடக மாநிலத்தின் எல்லைகள்

# கர்நாடக மாநிலம்



## 2.அ. அஃறிணை ஒருமைப்பெயர் உருபேற்கும் முறைகளின் ஒப்பீடு

| வேற்றுமை | தமிழ் | தெலுங்கு | மலையாளம் | பழங்கன்னடம் |
|---|---|---|---|---|
| எழுவாய் | மரம் | குர்ரமு, குர்ரம் | மரம் | மரம் |
| செயப்படு பொருள் | மரத்தை மரத்தினை | குர்ரமுனு, குர்ரான்னி, குர்ரம் | மரத்தினெ மரத்தெ | மரமம், மரவம், மரனம் |
| கருவி | மரத்தால் மரத்தினால் மரத்தினான் | குர்ரமுன, குர்ரான | மரத்தால் | மரதிம் மரதின்தம் |
| உடனிகழ்வு | மரமொடு, மரத்தொடு மரத்தினொடு | குர்ரமுதோ | மரத்தோடு | ...... |
| கொடை | மரத்திற்கு | குர்ரமுனகு குர்ரானகு | மரத்தின்னு | மரகெ மரக்கெ |
| நீக்கப்படு பொருள் | மரத்தின் | குர்ரமுனுண்தி | மரத்தில்னின்னு | மரத்தணிம் |
| உடைமை | மரத்தினது மரத்தினாது மரத்தின் | குர்ரமு, குர்ராமுயொக்க | மரத்தின் த்ரெ, மரத் தினுடெ | மரத, மரதா |
| இடம் | மரத்தின்கண் மரத்தில் மரத்தினில் | குர்ரமன்து குர்ரமுனன்து | மரத்தில் | மரதொள் மரதோள் |
| விளி | மரமே | குர்ரமா | மரமே | மர, மரா, மரமெ |

## 2.ஆ. அஃறிணைப் பன்மைப் பெயர் உருபேற்கும் முறைகளின் ஒப்பீடு

| வேற்றுமை | தமிழ் | தெலுங்கு | மலையாளம் | பழங்கன்னடம் |
|---|---|---|---|---|
| எழுவாய் | மரங்கள் | குர்ரமுலு<br>குர்ராலு | மரங்ஙள் | மரகள்,<br>மரங்கள் |
| செயப்படு பொருள் | மரங்களை,<br>மரங்களினை | குர்ருமுலனு<br>குர்ராலனு | மரங்ஙளெ | மரகளம் |
| கருவி | மரங்களால்<br>மரங்களினால் | குர்ரமுலன்து | மரங்ஙளால் | மரகளிம் |
| உடனிகழ்வு | மரங்களோடு<br>மரங்களினொடு | குர்ரமுலதோ,<br>குர்ராலதோ | மரங்ஙளோடு | ........ |
| கொடை | மரங்களிற்கு | குர்ரமுலகு<br>குர்ராலகு | மரங்ஙள்க்கு | மரகள்கெ |
| நீக்கப்படு பொருள் | மரங்களின் | குர்ரமுலனுண்தி | மரங்ஙளில்னின்னு | மரகளத்தணிம் |
| உடைமை | மரங்களினது<br>மரங்களின் | . . . . . | மரங்ஙளுடெ | மரகள |
| இடம் | மரங்களின் கண் | குர்ரமுலன்து | மரங்களில் | மரகளொள்<br>மரகளோள் |
| விளி | மரங்களே | குர்ரமுலாரா | மரங்ஙளே | மரகளிர்<br>மரகளிரா |

## 2.இ. வினைச்சொல் ஒன்றின் ஒப்பீட்டு வாய்பாடு
## (உடன்பாடு : இறந்த காலம்)

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| செய்தேன்<br>செய்தனென் | சேசிதினி | செய்தென்<br>செய்தனேன் | கெய்தெம் |
| செய்தாய்,<br>செய்தி, செய்தை,<br>செய்தனை | சேசிதிவி | செய்தாயி | கெய்தய் |
| செய்தான்<br>செய்தனன் | சேசெனு | செய்தாள்<br>செய்தனன் | கெய்தம் |
| செய்தாள்<br>செய்தனள் | ... | செய்தாள் | கெய்தள் |
| செய்தது | ... | செய்தது | கெய்தது, கெய்திது,<br>கெய்தத்து |
| செய்தோம்,<br>செய்தேம்,<br>செய்தாம்,<br>செய்தனம்,<br>செய்தனெம் | சேசிதிமி | செய்தோம் | கெய்தெவு,<br>கெய்தெம் |
| செய்தீர், செய்தனிர் | சேசிரி | செய்தீர் | கெய்திர் |
| செய்தார், செய்தனர் | சேசிரி | செய்தார்,<br>செய்தனர் | கெய்தர் |
| செய்த, செய்தன | சேசெனு | செய்தன | கெய்துவு |

## 2ஈ. வினைச்சொல் ஒன்றின் ஒப்பீட்டு வாய்பாடு (உடன்பாடு – நிகழ்காலம்)

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| செய்கின்றேன்<br>செய்கின்றனென் | சேயுசுன்னானு | செய்யுன்னேன் | கெய்தபெம் |
| செய்கின்றாய்<br>செய்கின்றி<br>செய்கின்றனை | சேயுசுன்னாவு | செய்யுன்னாய் | கெய்தபய் |
| செய்கின்றான்<br>செய்கின்றனன் | சேயுசுன்னாடு | செய்யுன்னான் | கெய்தபம் |
| செய்கின்றாள்<br>செய்கின்றனள் | சேயுசுன்னதி | செய்யுன்னாள் | கெய்தபள் |
| செய்கின்றது | சேயுசுன்னதி | செய்யுன்னது | கெய்தபுது |
| செய்கின்றோம்<br>செய்கின்றாம்<br>செய்கின்றேம்<br>செய்கின்றனம் | சேயுசுன்னாமு | செய்யுன்னோம்<br>செய்யுன்னோங்ஙள் | கெய்தபெவு<br>கெய்தபெம் |
| செய்கின்றீர்<br>செய்கின்றனிர் | சேயுசுன்னாரு | செய்யுன்னீர் | கெய்தபிர் |
| செய்கின்றார்<br>செய்கின்றனர் | | செய்யுன்னார்<br>செய்யுன்னோர் | கெய்தபர் |
| செய்கின்ற<br>செய்கின்றன | சேயுசுன்னவி | செய்யுன்னவை | கெய்தபுவு |

## 2.உ. வினைச்சொல் ஒன்றின் ஒப்பீட்டு வாய்பாடு (உடன்பாடு : எதிர் காலம்)

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| செய்வேன், செய்வென், செய்வனென், செய்வன், செய்வல் | சேயுதுனு | செய்வேன், செய்வன் | கெய்வெம் |
| செய்வாய், செய்வி, செய்வை | சேயுதுவு | செய்வாயி | கெய்வய் |
| செய்வான், செய்வன், செய்வனன் | சேயுனு | செய்வன், செய்வோன் | கெய்வம் |
| செய்வாள், செய்வள், செய்வனள் | சேயுனு | செய்வாள், செய்வள் | கெய்வள் |
| செய்யும், செய்வது | சேயுனு | செய்யும் | கெய்வுது |
| செய்வோம், செய்வேம், செய்வாம், செய்வம், செய்வனம், செய்வனெம் | சேயுதுமு | செய்வோம் | கெய்வெவு கெய்வெம் |
| செய்வீர் செய்வனிர் | சேயுதுரு | செய்வோம் | கெவிர் |
| செய்வார், செய்ப, (மர், மார், மனார் என்பனவும் கொள்க) | சேயுதுரு | செய்வார், செய்வர், செய்வோர் | கெய்வர் |
| செய்கும், செய்வ, செயன | சேயுனு | செய்யும் | கெய்வுரு |

## 2.ஊ. வினைச்சொல் ஒன்றின் ஒப்பீட்டு வாய்பாடு (எதிர்மறை)

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| செய்கின்றிலேன், செய்கின்றேனிலேன் | - | செய்யாயின்னு | - |
| செய்திலேன், செய்தேனிலேன் | - | செய்யாஞ்னு | - |
| செய்யலேன், செய்வேனலேன் | - | செய்யாயும், செய்யாயு | - |
| செய்யேன் | சேயனு | செய்யேன் | கெய்யும் |
| செய்யாய் | சேயவு | செய்யா | கெய்யய் |
| செய்யான் | சேயண்டு | செய்யான் | கெய்யம் |
| செய்யாள் | சேயது | செய்யாள் | கெய்யள் |
| செய்யாது | சேயது | செய்யா | கெய்யது |
| செய்யோம், செய்யேம், செய்யாம் | சேயமு | செய்யா | கெய்யவ கெய்யெம் |
| செய்யீர் | சேயரு | செய்யா | கெய்யிர் |
| செய்யார் | சேயரு | செய்யார் | கெய்யர் |
| செய்யா | சேயவு | செய்யா | கெய்யவு |
| செய்யாதே, செய்யேல், செய்யன்மோ, செய்யற்க | சேயகும, சேய்குமோ, சேயக | செய்யாய்க | |
| செய்யாதேயும், | சேயகுண்டு சேயகண்டி | செய்யாய்வின் | |
| செய்யன்மின், செய்யற்பீர், செய்யற்க | | | |

## 2.எ. வினைச்சொல் ஒன்றின் ஒப்பீட்டு வாய்பாடு

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| | பெயரெச்சம் | | |
| செய்கின்ற | சேயுசுன்ன | செய்யுன்ன | கெய்வ |
| செய்த | சேஸின | செய்த | கெய்த |
| செய்யும் | சேயு | செய்யும் | கெய்வ |
| செய்யா | சேயனி | செய்யாத | கெய்யாத |
| செய்யாத | - | செய்யாத்த | - |
| | வினையெச்சம் | | |
| செய, செய்ய, செய்குப, செய்யிய, செய்க | சேயுசு சேயுசுன்னு | செய்ய, செய்க | கெயுதும்,கெய்வுதும், கெயுத்தெ, கெய்யுதெ |
| செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென | சேஸி | செய்து | கெய்து |
| செய்வான் | | செய்வான் | |

## 2.ஏ. எண்ணுப் பெயர்கள்

| எண்கள் | தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|---|
| 1. | ஒன்று, ஒரு, ஓர் | ஒகடி, ஒண்டு, ஒக | ஒன்று, ஒரு, ஓர் | ஒன்து, ஓர் |
| 2. | இரண்டு, இரு | ஈர்ரெண்டு (இத்தரு) | ஈர்ரெண்டு, இரு | எரடு, இர் |
| 3. | மூன்று, மூ, மு | மூடு, (முக்குரு) | மூன்று, மூ, மு | மூரு, மூ, மு |
| 4. | நாலு, நான்கு நால் | நாலுகு, நலு, நல, நல் | நால், நாங்கு | நாலு, நால்கு, நால் |
| 5. | ஐந்து, அஞ்சு, ஐ | ஐது, ஏனு, ஏ | அஞ்சு, ஐ | ஐது, ஐ |
| 6. | ஆறு, அறு | ஆரு, அரு | ஆறு, அறு | ஆரு, அர |
| 7. | ஏழு, எழு | ஏடு, ஏள், டெ | ஏழு, எழு | ஏளு, எ |
| 8. | எட்டு, எண் | எனிமிதி, என்மிதி, என | எட்டு, எண் | எண்டு, எண் |
| 9. | ஒன்பது, ஒன்பான், தொண்டு, ஒன் பத்து, தொள் | தொம்மிதி, தொம்மண்டு, தொம்ம | ஒம்பது, தொள் | ஒம்ப்ஹத்து ஒம்ப்ஹயி, தொம் |
| 10. | பத்து, பான், பது, பதின், பன் | பதி, பன், பை, ப்ஹை, வை | பத்து, பதின் (பன்த்) | பத்து, ஹத்து, ப்ஹத்து, வத்து, பதின், பதி, பன் |
| 11. | நூறு | நூரு | நூறு | நூரு |

## 2.ஐ. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலங்கள்

| எண் | பன்னிரு நிலப் பாகுபாடு | தற்காலத்தில் உள்ள பெயர் | கிளைமொழி வழக்கு | பொது வழக்கு | உரையாசிரியர்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | தென்பாண்டி | திருநெல்வேலி மாவட்டத்தின் தென்பகுதி | பெற்றம், சொன்றி | ஆ, எருமை<br>சோறு | நச்சினார்க்கினியர்<br>மயிலைநாதர்<br>மயிலைநாதர் |
| 2. | குட்ட நாடு | கேரள மாநிலம், கோட்டயம் கொல்லம் மாவட்டப் பகுதிகள் | தள்ளை, ஞெள்ளை | தாய்<br>நாய் | நச்சினார்க்கினியர்<br>நச்சினார்க்கினியர் |
| 3. | குடநாடு | வட மலபார் பகுதியினைச் சார்ந்த மலைத்தொடர்ச்சியின் மேற்குப் பகுதிகள் | தள்ளை, அச்சன் | தாய்<br>தந்தை | மயிலைநாதர்<br>நச்சினார்க்கினியர் |
| 4. | கற்கா நாடு | கோவை மாவட்ட மலைப் பகுதிகள் மற்றும் மேற்குத் தொடர்ச்சி மலையினைச் சார்ந்த கிழக்குப் பகுதிகள் | அச்சன்,<br>கையர் | தந்தை<br>வஞ்ச(க)ர் | மயிலைநாதர்<br>நச்சினார்க்கினியர்<br>மயிலைநாதர் |
| 5. | சீத நாடு | கோயம்புத்தூரின் ஒரு சில பகுதிகளும் நீலகிரிப் பகுதிகளும் | எலுவன்,<br>இருளை,<br>தந்துவை | ஏடா,<br>தோழன்<br>தோழி<br>தம்மாமி | நச்சினார்க்கினியர்<br>மயிலைநாதர்<br>நச்சினார்க்கினியர்<br>நச்சினார்க்கினியர் |
| 6. | பூழிநாடு | கன்னியாகுமரி மாவட்டம் வேள் நாடு என்பர் | ஞமலி, பாழி | நாய்<br>சிறுகுழம் | நச்சினார்க்கினியர்<br>மயிலைநாதர்<br>நச்சினார்க்கினியர் |
| 7. | அருவா நாடு | தென்னார்க்காட்டின் கடலோரப் பகுதிகள் மற்றும் வடார்க் காட்டுப் பகுதிகள் | செறு, கேணி | செவ்<br>(வயல்)<br>சிறுகுளம் | நச்சினார்க்கினியர்<br>நச்சினார்க்கினியர் |
| 8. | அருவா வட தலைநாடு | தமிழ் நாட்டின் வட பகுதிகள் | கேணி, குட்டை,<br>எகினம் | சிறுகுளம்<br>குறுணி<br>(அளவு)<br>புளி | மயிலைநாதர்<br>நச்சினார்க்கினியர்<br>மயிலைநாதர் |

| எண் | பன்னிரு நிலப் பாகுபாடு | தற்காலத்தில் உள்ள பெயர் | கிளைமொழி வழக்கு | பொது வழக்கு | உரையாசிரியர்கள் |
|---|---|---|---|---|---|
| 9. | வேணாடு | தென் திருவிதாங்கூர் பகுதிகள் | கிழார் | தோட்டம் | மயிலைநாதர் |
| 10. | பாண்டி நாடு | பாண்டிய நாடு | செய் | செறு | மயிலைநாதர் (நச்சினார்க்கினியர்) செறு அருவா நாட்டு வழக்கென்பர் |
| 11. | மலாடு | தென்னார்க்காடு, திருக்கோவிலூர்ப் பகுதிகள் | இருளை | தோழி | மயிலைநாதர் (நச்சினார்க்கினியர் இருளை சீத நாட்டு வழக்கென்பர் |
| 12. | புனல்நாடு | சோழநாடு | ஆய் | தாய் | மயிலைநாதர் |

# 3.அ. திராவிட மொழி இலக்கணங்களுக்கு இடையே உள்ள ஒப்புமைகள்

**தமிழ் பிற திராவிட மொழிகளாகத் திரிந்த முறை**

தமிழ் என்னும் பெயர் திராவிடம் என்று திரிந்ததைப் போன்றே தமிழாகிய மொழியும் பிற திராவிட மொழிகளாகத் திரிந்தது என்பர்.

தலைக்கழகக் காலத்தில் தமிழ் செந்தமிழ், கொடுந்தமிழ் என இரண்டாக வகுக்கப்பட்டது. இவை வழங்கும் நாடுகளும் செந்தமிழ்நாடு கொடுந்தமிழ் நாடு எனப்பட்டன. பன்னிரு நாடுகள் கொடுந்தமிழ் நாடுகளாக இருந்தன.

இலக்கணம் நிரம்பிய சிறந்த வழக்கான தமிழ் செந்தமிழ். அது திரிந்தது கொடுந்தமிழ்.

செம்மை—நேர்மை, கொடுமை – வளைவு,

செங்கோல் – கொடுங்கோல் என்னும் சொற்களின் அடிப்படையில்.

**1) செந்தமிழ்ச் சொற்கள்**

இயற்சொல், திரிசொல் என இரண்டாக வகுக்கப்பட்டன. இயல்பான சொல் இயற்சொல் அதனின்று திரிக்கப்பட்ட சொல் திரிசொல். கிள், சேர் என்பன இயற்சொற்கள். கிள்ளை, சேரி என்பன திரிசொற்கள். இயற்சொற்கள் வேறு, வேர்ச்சொல் வேறு, பகுதியும் வேறு. கிள் என்பதற்கு கில் என்பதும் சேர் என்பதற்கு சே என்பதும் வேர் சொல்லானது. இதுபோன்ற சொற்கள் தோன்றாத முற்காலத்தில் வேர்ச் சொற்களே இயற்சொற்களாகவும் இயற்சொற்களே திரிசொற்களாகவும் இருந்தன.

**வேர்ச்சொற்கள்**

1) ஆணிவேர்ச்சொற்கள்
2) பக்கவேர்ச் சொற்கள்
3) சல்லி வேர்ச்சொற்கள் என மூவகைப்படும்.

வேர்ச்சொற்களுக்கும் மூலமான விதைச் சொற்கள் என்பன உண்டு. அவையே சுட்டு விளக்கத்திற் கூறப்பட்ட ஐந்து சுட்டுகள். பகுதி என்பது வேர்ச் சொல்லாயும் இயற்சொல்லாயும் திரிசொல்லாயும் இவற்றின் மிகைபடாமலும் பகு சொல்லின் முதனிலையாகவும் இருப்பது. இவற்றின் எ–டுகள் முறையே கில்லினான், கிள்ளினான், கிளைத்தான், கிளைப்பட்டான் என்னும் பகுசொற்களில் காண்க.

கொடுந்தமிழ்ச் சொற்கள் செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பல திசையிலும் வழங்கினமையின் இச்சொற்கள் திசைச்சொற்கள் எனப்பட்டன.

மேற்கூறிய இயற்சொல் திரிசொல் திசைச்சொல் என்னும் மூன்றுடன், இடைக்கழகக் காலத்தில் புதிதாய் வந்து வழங்கிய ஒரு சில வடசொற்கள் தமிழில் கலந்த அயல் மொழியென்ற வகையில் வடசொற்களென்றே கூறப்படுவன. அக்காலத்தில் தமிழில் கலந்த அயன்மொழி வடமொழி ஒன்றே ஆகும். இம்முறைப்படி இக்காலத்திலும், தமிழில் கலந்த ஆங்கிலச் சொல் போர்த்துக்கீசியச் சொல் முதலியவற்றை அவ்வம் மொழிப் பெயரால் ஆங்கிலச் சொல் போர்த்துக்கீசியச் சொல் எனக் கூறல் வேண்டுமேயன்றித் திசைச் சொற்களென்று கூறுதல் கூடாது. இது கிளைமொழிகளாய் (அ) இன மொழிகளாய்ப் பிரிந்து போயுள்ள தெலுங்கு, கன்னடம் முதலியவையெல்லாம் பழங்காலத்தில் கொடுந் தமிழாயிருந்ததினாலேயே கொடுந் தமிழுக்கு எ.கா. கூறப்பட்டன.

கொடுந் தமிழ்ச் சொற்கள் (அ) திசைச் சொற்கள் மூன்று வகைப்படும். அவை,

1) பொருள் திரிந்த சொல்

எ–டு: செப்பு (தமிழ்) ; விடைசொல்

செப்பு (தெலுங்கு) ; சொல்

2) வடிவு திரிந்த சொல்

எ–டு: போயினான் (த) – போயினாடு (தெ.)

3) புதுச்சொல்

எ–டு: அடுகு (தெ.) – கேள்.

புதுச்சொல்லும் மறைந்த வேர்ச்சொல் (அம்மு (தெ.) = வில்) மறையா வேர்ச்சொல் (அள்(காது) – அடுகு) என இரு வகைப்படும். இங்ஙனம் மூவகைப்பட்ட திசைச் சொற்கள் மிகுந்த (அ) கலந்த தமிழ் கொடுந் தமிழே ஆகும்.

தொல்காப்பியர்,

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே

(தொல். சொல். எச்.1)

அவற்றுள்
இயற் சொற்றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம் பொருள் வழாஅமை யிசைக்குஞ் சொல்லே

(தொல். சொல். எச்.2)

ஒரு பொருள் குறித்த வேறு சொல்லாகியும்

வேறுபொருள் குறித்த ஒரு சொல்லாகியும்

இருபாற் றெனப் திரிசொற் கிளவி

(தொல். சொல். எச். 3)

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினுந்

தங்குறிப்பினவே திசைச்சொற் கிளவி

(தொல். சொல். எச். 4)

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ

யெழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே

(தொல். சொல். எச். 5)

என்று கூறியிருப்பதால், நால்வகைச் சொல்லுள் வடசொல் அயற்சொல் என்பதும் திசைச்சொல் கொடுந்தமிழ் என்பதும், ஏனையிரண்டும் செந்தமிழ் என்பதும் தெரியும்.

செந்தமிழ் நிலம் வைகையாற்றின் மேற்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாகும் என்று இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலிய பிற்கால உரையாசிரியர்கள் உரைத்தனர். இதில் வைகையாற்றின் தெற்குள்ள சிறந்த செந்தமிழ் நிலப்பகுதி விளக்கப்பட்டிருப்பதாலும், பழங்காலத்தில் சேர, சோழ, பாண்டிய முத்தமிழ் நாடுமே செந்தமிழ் நிலமாயிருந்ததினாலும் இவ்வுரை தவறாகும் என்று கருதுகின்றனர்.

செந்தமிழ் நாடாவது வைகையாற்றின் வடக்கும், மருவூரின் மேற்கும் என்பர். இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணங் காணாமையாலும், வையையாற்றின் தெற்காகிய கொற்கையும் கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும் மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ் திரிநிலமாதல் வேண்டும் என்று உரைப்பர்.

வட வேங்கடந் தென் குமரி

ஆயிடைத்

தமிழ்கூறு நல்லுலகத்து

வழக்குஞ் செய்யுளுமாயிரு முதலின்

எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி (தொல். சிறப்புப்பாயிரம்)

என்றமையானும், இதனுள் தமிழ் கூறும் நல்லுலகமென விசேடித்தமையானும், கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்கெல்லை கூறியதனால், குமரியின் தெற்காகிய நாடுகளையொழித்து வேங்கட மலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ் நிலமென்று உரைப்பர்.

கொடுந் தமிழ்நாடு பன்னிரண்டையும்

தென்பாண்டி நாட்டார் ஆ எருமை என்பனவற்றைப் பெற்றமென்றும், குட நாட்டார் தாயைத் தள்ளையென்றும், நாயை ஞெள்ளை என்றும், குட்ட நாட்டார் தந்தையை அச்சன் என்றும், கற்கா நாட்டார் வஞ்சரைக் கையர் என்றும், சீத நாட்டார் ஏடா வென்பதனை எலுவன் என்றும் தோழியை இருளை என்றும், தம்மாமி என்பதனைந் தந்துவை என்றும், பூழி நாட்டார் நாயை ஞமலியென்றும், சிறு குளத்தை பாழி என்றும், அருவா நாட்டார் செய்யைச் செறுவென்றும், சிறு குளத்தைக் கேணியென்றும், அருவா வடதலையார் குறுணியைக் குட்டை என்றும் வழங்குவர்.

தொல்காப்பியர் காலத்தில் கொடுந்தமிழ் நாடுகளாக இருந்த பழந்தீபமும் சிங்களமும் கருநாடமும் வடுகும் (தெலுங்கமும்) கலிங்கமும் பிற்காலத்தில் பிறமொழி நாடுகளாய் வேறுபட்டு விட்டன. நாவலந் தேயத்திலுள்ள மொழி வேறுபட்ட நாடுகள் தமிழுக்கு உட்பட்டது பதினெட்டாகக் கணக்கிடப்பட்டன. அப்பதினெட்டும் பிற்காலத்தில் ஐம்பத்தாறாகப் பிரிந்து போனது பற்றிப் புராணங்கள் கூறுகின்றன.

பத்தாம் நூற்றாண்டிலும் அதைத் தொடர்ந்தும் இருந்த இலக்கண உரையாசிரியர், அக்கால நிலைக்கேற்ப அவற்றைத் தமிழ்நாட்டின் நடுவொழிந்த பெரும் பாகத்தைத் தொகை பற்றிய பழைய மரபை விடாமல் பன்னிரு கொடுந் தமிழ் நாடுகளாகப் பிரித்தனர். அவற்றுள் சேர நாட்டுப் பகுதிகளான குட்டம், குடம், வேண், மலாடு என்பன உள்ளன. அக்காலத்து மலையாள மொழி தோன்றாமையின், நன்னூலார் தன்காலப் பன்னிரு கொடுந்தமிழ் நாடுகளையும், தொல்காப்பியர் காலப் பன்னிரு கொடுந்தமிழ் நாடுகளையும் மனதில் கொண்டு,

> செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
> ஒன்பதிற் றிரண்டினில் தம்மொழி நிலத்தினும்
> தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி (தொல். சொல். எச்.5)

என நூற்பா செய்தார்.

செந்தமிழ் தொல்காப்பியர் காலத்தில் வேங்கடம் வரை வழங்கியதாலும், அதையடுத்து வடக்குள்ள கன்னடமுந் தெலுங்கும் முற்காலத்தில் கொடுந் தமிழாயிருந்தமையாலும் அவற்றுக்கப்பால் தற்போது ஆரிய வடிவாயுள்ள மகாராட்டிரம் (மராட்டி) கூர்ச்சரம் (குசராத்தி) என்பவற்றையும் தமிழ், தெலுங்கு, கன்னடத்தோடு சேர்த்துப் பஞ்ச திராவிடம் என வடநூலார் பண்டைக்காலத்தில் வழங்கியமையாலும், வட நாட்டாரிய மொழிகளில் திராவிடக் கூறான சொற்களும் நெறிமுறைகளும் கலந்துள்ளமையாலும், முதலைக் கூட்டம் முதலிய தமிழ்ச் சொற்கள் நேபாள நாட்டு மலைவாணர் மொழியிலும் வழங்குவதாகத் தெரிகின்றமையாலும், இந்தியாவின் வடமேற்கில் பெலுச்சித்தானத்திலுள்ள மலைவாணர் பிராகுயி என்னும் திராவிட மொழியைப் பேசுகின்றமையாலும், ஒரு காலத்தில் நாவலந்தேயம் முழுவதும் தமிழல்லாவிடினும் திராவிடமாவது வழங்கியிருத்தல் வேண்டும் என்பது ஊகிக்கப்படும்.

இன்றும் தென்னாட்டில் ஓரளவு செவ்வையாய்ப் பேசப்படும் தமிழ் வடக்கு நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து முதலாவது கொடுந்தமிழாயும் பின்பு திராவிடமாயும் திரிவதையும், திராவிடமும் ஆரியக்கலப்பால் காலாரியமாய் மாறுவதையும், அதற்கப்பால் முறையே அரை ஆரிய மொழிகளும் முழு ஆரிய மொழிகளும் வழங்குவதையும், ஆரியர் பழங்குடிச் சொற்களையெல்லாம் அகற்றிவிட்டு அவற்றிடத்தில் ஆரியச் சொற்களையே வழங்குவதில் கண்ணுங் கருத்துமாயிருந்து இக்கேட்டுத் தொழிலை வடக்கிருந்து தென் கோடி வரை செய்து வருவதையும் நோக்கின, முதற்காலத்தில் ஒரு மொழியே நாவலந்தேய முழுதும் தென்கோடியிலிருந்து வடகோடி நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து வழங்கியது என்பதையும், ஆரியக் கலப்பில்லாவிட்டால் இன்றும் வட நாட்டில் திராவிடமே வழங்கும் என்பதையும் உய்த்துணரலாம்.

ஒரு மொழியே சிறிது சிறிதாய்ப் பெயர்ந்து வழங்கியமையாலேயே, வட நாடுகளை வேற்று மொழி நாடென்னாது 'மொழிபெயர்தேயம்' என்றனர் முன்னோர்.

மொழி பெயர் தேஎத்தராயினும்

எல்லைக்குத் தெற்கிலுள்ள நிலப்பகுதி முழுவதும் செந்தமிழே வழங்கின என்பதும் அறியப்படும். தெலுங்கு பிரிந்தது கி.பி. சுமார் 2 ஆம் நூற்றாண்டு என்றும் கன்னடம் பிரிந்தது கி.பி. 6 ஆம் நூற்றாண்டு என்றும் கூறலாம். கொடுந்தமிழான திசைச் சொற்களுக்குச் செப்பு, சிக்கு, அச்சன் முதலிய தெலுங்குச் சொற்களையும் கன்னடச் சொற்களையும் மலையாளச் சொற்களையும் எடுத்துக்காட்டாக இலக்கண உரையாசிரியர் எல்லாம் தொன்று தொட்டு மரபு முறையில் கூறிவருவதால்,

தமிழில்—திராவிட மொழிகளெல்லாம் பண்டைக் காலத்தில் கொடுந்தமிழ்களாயிருந்தே பின்பு ஒவ்வொரு காலத்தில் வெவ்வேறாய்ப் பிரிந்து போயின என்று அறிந்து கொள்ளலாம்.

"தென்பாண்டி . . . நாட்டெண்" என்னும் பிற்கால வெண்பாவில் கன்னடமுந் தெலுங்குங் குறிக்கப்படவில்லையே என்று ஐயுறுவார், குட்டமும் குடமும் வேணுமாகிய மலையாள நாடுகளைக் கொடுந் தமிழ் நாடாக அதில் குறித்ததின் ஒன்றாவது பிறவும் இங்ஙனமே அதற்குமுன் ஒவ்வொரு காலத்திலும் பிரிந்து போயிருக்க வேண்டும். இந்நிலையில் கூட, 'தம்பிராட்டி', 'கைநீட்டக் காசு' முதலிய மலையாளச் சொற்களும், 'கொண்டாடு', 'திக் இல்லாத' முதலிய கன்னடச் சொற்களும், 'ஓடச்சரக்கு', 'மூக்குப்பொடி' முதலிய தெலுங்குச் சொற்களும் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன.

## 3.ஆ. திராவிட மொழி இலக்கணக் கூறுகளின் ஒத்தத் தன்மைகள்

திராவிட மொழிகள் நான்கிலும் நெடுங்கணக்கும் இலக்கியமும் இடம்பெற்றுள்ளன.

1) திணை இரண்டாகவும், பால் ஐந்தாகவும், அறிவுக்கு ஒக்கும் வகையில் பகுக்கப்பட்டிருக்கின்றன. சில மொழிகளில் கற்பனை காரணமாகப் பால் வேறுபாடுகள் அமைக்கப்பட்டிருப்பதைப் போலத் திராவிடத்தில், மக்கட்சுட்டு – உயர்திணை, அவர் அல்லாத பிற அஃறிணை, கல் என்பது எப்பொழுதும் அஃறிணை – மனைவி என்னும் சொல் எப்பொழுதும் பெண்பால். வேறு மொழியில், சிலா – பெண்பால், களத்ரம் – அலிப்பால், தாரா – ஆண்பால்) என இடம்பெற்றுள்ளது.

2) பெயர்ச்சொற்களில் ஒருமை, பன்மை என்ற எண் வேறுபாடுகள் உண்டேயொழிய ஒருமை, இருமை, பன்மை என்ற வழக்கு இல்லை.

3) பெயர்ச் சொற்களுக்கு வேற்றுமை உருபுகள் ஈற்றில்தான் சேர்க்கப்படும். அவ்வுருபுகள் ஒருமை, பன்மை அகிய எண்களுக்கு ஒத்த ஒரேவிதமான உருபுகள். சில மொழிகளில் ஒருமை, இருமை, பன்மை ஆகிய எண்தோறும் ஏற்றப்படும் வேற்றுமை உருபு மாறுதலைப் போலத் திராவிட மொழிகளில் இம்மாறுதல் இல்லை.

4) வேறு சில மொழிகளிற் பெயரடைச் சொற்களுக்கு வேற்றுமை உருபுகள் ஏற்றுதலைப் போலத் திராவிட மொழிகளில் ஏற்றுதல் வழக்கம் இல்லை.

5) ஈற்றில் மொழிகளில் முடியும் சொற்களுக்குப் பின் எளிமை காரணமாக ஓர் உயிரொலியைக் கூட்டுவது பெரு வழக்கமாக இருக்கிறது. அஃறிணைப் பெயர்களுள் சில ஒருமைப் பொருளிலும் பன்மைப் பொருளிலும் வழங்குதல் உண்டு. வந்த, இருந்த என்ற பெயரெச்சங்களொடு அவன் என்னும் இடப்பெயர்ச் சொல்லைச் சேர்த்து வந்தவன், இருந்தவன் போன்ற வினையாலணையும் பெயர்களை அமைக்கும் ஆற்றல் இம்மொழிகளுக்கு உண்டு.

இவ்வாறு அமைந்துள்ள சில பொதுப் பண்புகள் காரணமாகவும், பெருவாரியாகக் காணப்படுகிற ஒத்த சொற்பொருள் காரணமாகவும் இம்மொழிகளைத் திராவிட மொழிகள் என ஓர் இனமாகக் கொண்டு வழங்குவது பொருத்தமுடையதாகவே இருந்து வருகிறது என்று கூறுகின்றார் கால்டுவெல்.

ஒலி வகையில் அகர ஆகாரம், இகர ஈகாரம், உகர ஊகாரம், எகர ஏகாரம், ஐகாரம், ஒகர ஓகாரம், ஔகாரம் ஆகிய உயிரொலிகள் இம்மொழிகளில் பொதுவாக உண்டு. வடமொழியிலும், வடமொழியின் அடியாகப் பிறந்த மொழிகளிலும் எகரம், ஒகரம் ஆகிய குற்றெழுத்துக்களுக்குத் தனி எழுத்துக்கள் இல்லாமல் இருப்பது இம்மொழிகளின் தனிச்சிறப்பு. மெய்யொலிகளில் 'க' வரிசையில் நான்கு எழுத்தும், 'ச' வரிசையில் நான்கு எழுத்தும் ட, த, ப வரிசைகளில் நான்கு எழுத்தும் வடமொழியில் இருப்பது போலத் தமிழில் இல்லை.

தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிகளில் இந்த வரிசையில் நன்னான்கு எழுத்துக்கள் இருந்தாலும் அவை ஒலி வேறுபாடுகளேயொழிய ஒலிய வேறுபாடுகள் இல்லை. இம்மொழிகளில் லகர ளகரங்கள் ஒலிய வேறுபாடுகள் உடையன. ழகரமும் ளகரமும் தமிழ், மலையாளம், பழங்கன்னடம், பழந்தெலுங்கு ஆகிய மொழிகளுக்குச் சிறப்பாக அமைந்த எழுத்துக்கள் இம்மொழிகள் தம்முள்ளே சொற்களின் ஈற்று ஆகாரம் ஐகாரம் ஆகவோ ஏகாரமாகவோ திரிதல் உண்டு (த–தலை, ம–தல, தெ–தல, க–தலெ) ஈற்றில் சில இடங்களில் உகரத்தைச் சேர்த்தல் ஓர் இயல்பு (த.பால் – பாலு, ம.கல் – கல்லு, தெ.மந்–மந்து) என வரும்.

வல்லோசையுடைய மெய்யெழுத்துக்கள் சில சொற்களின் இடையிலும் கடையிலும் அவ்வல்லோசையினின்று நெகிழ்ந்து மெல்லோசை பெறுதல் உண்டு. (கடவுள், அகம், மதகு ஆகிய சொற்களில் வரும் 'க்' ஒலியை ஒப்பிட்டுப் பார்க்க). திராவிட மொழிகள் ஒன்றனுள் சில சொற்களில் வரும் ழகரம் வேறு திராவிட மொழிகளில் ளகரம் (அ) டகரம் ஆதல் உண்டு. (த.கோழி, தெ.கோடி, க.கோளி வல்லோசைகளில் முடியும் சொற்களின் ஈற்றெழுத்திற்கு முன்னால் ஒரு மெல்லின எழுத்துத் தோன்றுதல் என்பது ஒரு வழக்காகக் காணப்படுகிறது. (த.ஈடு – ஈண்டு, இரடு–இரண்டு). உயிரெழுத்துக்கள் இருமருங்கும் வரும் இடங்களில், அவற்றை இயைத்து வைக்கக்கூடிய உடம்படுமெய் என்பது தோன்றுதல் ஒரு வழக்கம் அவ்வாறு தோன்றும் உடம்படுமெய் ம், ந், வ், ய் என பலவற்றுள் ஒன்று.

திராவிட மொழிகளில் இரண்டு (அ) மூன்று மெய் எழுத்துக்கள் கூடி நின்று சொற்களின் தொடக்கத்தின்கண் வரமாட்டா. அவ்வாறே ஈற்றிலும் நிற்க மாட்டா. சொற்களின் உச்சரிப்பை எளிமைப் படுத்துவதற்காக அவற்றின் இடையில் உகரம் சேர்க்கப்படுவது உண்டு (சமஸ். தத்வ, த.தத்துவம்). திராவிட மொழிகளில் அசையழுத்தம் இல்லை.

திராவிட மொழிகளில் உள்ள அடிவேர்கள் வினைப் பொருள்களிலும் பெயர்ப் பொருள்களிலும் பெயரடைப் பொருள்களிலும் வழங்கக் கூடிய பெற்றியை உடையன. சீன மொழியில் உள்ளவற்றைப் போல் எல்லாச் சொற்களும் ஒவ்வோர் அசையால் மாத்திரம் இயன்றன அல்ல.

பெயர்ச் சொற்களில் எண்ணையும் பாலையும் சேர்த்து உணர்த்துவதற்காக ஒரே இலக்கணக்கூறு பயன்படுகிறது. (அவன் வந்தான் – ஒருமையும் ஆண்பாலும் உணர்த்தப்படுகின்றன). ஆண்பாற் பன்மைக்கும் பெண்பாற் பன்மைக்கும் பொதுவாக ஒரே ஈறு வழங்கப்படுகிறது (த.அர், தெ.வடு). அஃறிணை பன்மையைக் காட்ட 'வ்' வழங்குகிறது (ப.த.அவ், இ.த.அவை, ம.அவ, தெ.அலி, க.அவு, கோ.அவ், பார்ஜி அவ்).

வடமொழியில் ஒரே இலக்கணக்கூறு எண்ணையும் வேற்றுமையையும் உணர்த்துவதாய் இருப்பவும், திராவிட மொழிகளில் ஒரு தொடர் வேற்றுமை உருபாக மாத்திரம் நிற்கிறது. முதல் வேற்றுமையில் வரும் பெயர்ச் சொற்களில் மாறுதல் இல்லை. இரண்டாம் வேற்றுமையின் உருபாகப் பொதுவில் ஐ, ஏறவும், அது ஆகியவை காணப்படுகின்றன. இவையெல்லாம் ஏதாவது ஒன்றிலிருந்து கிளைத்தவையே ஆகும். மூன்றாம் வேற்றுமை உருபாக ஆன் (அ) ஆல், இன் (அ) இம் காணப்படுகிறது. உடனிகழ்ச்சிப் பொருளில் ஒரு (அ) ஒடு பெருவழக்கில் உள்ளது. நான்காம் வேற்றுமை உருபு கு (அ) கெ. ஐந்தாம் வேற்றுமை உருபு இன் (அ) இம், ஆறன் உருபு அது (அ) அத (அ) உடைய (அ) உடே, ஏழன் உருபு இன், இல், கண், உள், ஒள் ஆகியவற்றுள் ஒன்று. எட்டாம் வேற்றுமைக்காகப் பெயர்ச் சொற்களின் ஈற்றில் ஏகாரத்தைக் கூட்டி வழங்குவது பெருவழக்கு.

எண்ணுப் பெயர்கள் அஃறிணை எண் வாய்ப்பாட்டிலிருந்து கிளைத்தன என்பது நம்பப்படுகின்றது. ஓர், இர், மூ, நால், ஐ, அறு, ஏழ், எண் ஆகிய பெயரடைச் சொற்கள் வடிவத்திலிருந்து ஒன்று, இரண்டு, மூன்று போன்ற வடிவங்கள் தமிழிலும், ஒண்ணு, ரெண்டு, மூந்து போன்றன மலையாளத்திலும், ஒகட்டி, ரெண்டு, மூடு போன்றன தெலுங்கிலும், ஒந்து, எரடு, மூரு போன்றன கன்னட மொழியிலும் காணப்படுகின்றன.

தன்மை ஒருமை இடப் பெயராகத் தோன்றித் திராவிட மொழிகளில் அமைந்து வந்த வடிவம் ஆன் (அ) யான் (அ) யேன் என பதிக்கப்படுகிறது. இது சமஸ்கிருத அஹம் (அ) அஸ்மத் என்பதோடு ஒத்திருக்கவில்லை. அவ்வாறே முன்னிலை ஒருமை இடப்பெயரில் நீ (அ) நீன் திராவிட மொழிகளுக்குப் பொதுவாக அமைந்த சொல். இதனோடு சமஸ்கிருதத்திலுள்ள துவம்

ஒத்திருக்கவில்லை. அவன், அவள், அவர், அது, அவை ஆகிய ஏனைய இடப்பெயர்களில் திராவிட ஒலி இலக்கண இயல்பிற்கு ஏற்பத் திராவிட மொழி ஒவ்வொன்றிலும் சிறிது சிறிது வேறுபாடு விளைந்துள்ளது.

சுட்டுப் பெயர்கள் எல்லாம் சேய்மைச் சுட்டு, அண்மைச் சுட்டு, இடைநிலைச் சுட்டு என வழங்குகின்றன. இவற்றிற்கு அடிப்படையாக நிற்கும் ஒலிகள் முறையே அ(அ), ஆ, இ(அ), ஈ, உ(அ), ஊ அவ்வாறே. வினாப் பொருளில் எகாரம் (அ) ஏகாரம் பயன்படுகிறது. வினைச் சொற்கள் தன்வினை எனவும், பிறவினை எனவும் செயப்படு பொருள் குன்றிய வினை, குன்றா வினை எனவும் பிரிக்கப்படும். இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்று காலங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. இறந்த காலத்தின் இடைநிலையாக 'த்' என்பதும் நிகழ்காலத்தின் இடைநிலையாக 'கின்று' (அ) 'கிறு' என்பதும் எதிர்காலத்தின் இடைநிலையாக 'ப்' (அ) 'வ்'(அ) 'க்' என்பதும் வழங்குகின்றன. சார்வு, செல்வு, வாழ்வு என்ற தொழிற்பெயர்களின் அடியாகச் சார்வன செல்வேன், வாழ்வேன் போன்ற வினைமுற்றுச் சொற்கள் தோன்றின என்பது ஒரு சாரார் கொள்கை. செய்தென் எச்சங்களும், செய்வென் எச்சங்களும், செய்ததேல் எச்சங்களும் செய்க என்ற வாய்பாடுகளும் திராவிட மொழிகளில் பொதுவாக வழங்குவன.

## 3.இ. தமிழினின்று பிற திராவிட மொழிகள் வேறுபடக் காரணங்கள்

ஒரு மொழியார் மிகப் பலராகப் பெருகிவிட்டதால், அவர் நெடுந்தொலைவு சென்று பரவ நேரும். அப்போது தட்பவெப்பநிலை வேறுபாட்டாலும் சுற்றுச் சூழல்களாலும், பழஞ்சொல் மாற்றினாலும் தனி விருப்பத்தாலும் சொற்கள் திரியவும் புதிதாகத் தோன்றவும் பெறும். பொதுவாக, சுமார் 500 கல் தொலைவு வரை புதுச்சொற்கள் தோன்றுவதும் மொழி திரிவதும் இயல்பாகும்.

**எழுத்தொலித் திரிபு**

இது தட்பவெப்பநிலை வேறுபாட்டாலும் சோம்பலாலும் நிகழ்வது,

| தெலுங்கு | மலையாளம் | கன்னடம் | |
|---|---|---|---|
| ந–ரு | ப–ஹ | ழ–ட | தட்பவெப்பநிலை |
| ஐ–அ | ஐ–எ | ண–ன | சோம்பல் |

இனி, ஊண், தொழில், பழக்கவழக்கம், அயன்மொழிக்கலப்பு முதலியவற்றாலும் எழுத்தொலி திரியும். எழுத்தொலித் திரிபு தட்பவெப்பநிலை ஊண் முதலியவற்றால் திரிவது கிளைமொழியாகத் திரிவதற்கு காரணமாகும். சோம்பலால் திரிவது ஒலிமுறைக் கேடாம்.

1. சொல் திரிபு
2. பொருள் திரிபு.

(எ–டு) வெள்ளம் (த) ; வெள்ளைபான புதுப்பெருக்கு நீர்; வெள்ளம் (ம.) ; நீர்.

**இயற்கைத் திரிபு**

தாய்மொழியாகிய தமிழில் வீட்டைக் குறிக்கும் ஒரு பொருள் பல சொற்களில், தெலுங்கு இல் என்னுஞ் சொல்லையும் கன்னடம் மன என்னுஞ் சொல்லையும் தெரிந்து கொண்டன.

**வழக்கற்ற சொல் வழங்கல்**

(எ–டு) துன்னு = தை (ம.), தெவு = தெகு (க.)

நெய்தோர் = நெத்துரு (தெ.) வழக்கற்ற சொல் வழங்கலாவது தமிழில் இது பேச்சு வழக்கற்று எழுத்து வழக்கில் மட்டுமுள்ள சொற்கள் பிற திராவிட மொழிகளில் பேச்சு வழக்கில் வழங்குவது.

**குடியேற்றப் பாதுகாப்பு**

எ–டு: போழ் (ம.) = போழ்து. கொம்மு (தெ.), கொம்பு. குடியேற்றப் பாதுகாப்பாவது இது. தமிழில் வழங்காவிடினும் குமரிநாட்டில் வழங்கியவாகத் தெரிகின்ற சொற்களும் சொல் வடிவங்களும் பிற திராவிட மொழிகளில் பாதுகாக்கப்பட்டிருத்தல்.

**புத்தாக்கச் சொல்**

எ–டு: மேடி (ம.) = வாங்கு, வெள்ளு (தெ.) = செல்.

1) தாயொடு (தமிழொடு) தொடர்பின்மை
2) வடசொற்கலப்பு
3) வடமொழி எழுத்தையும் இலக்கணத்தையும் மேற்கொள்ளல்.
4) தமிழின் பண்படுத்தம்.

,

## 4. அ. பழந்தமிழின் இலக்கணத்திற்கும் பழைய தெலுங்கின் இலக்கணத்திற்கும் உள்ள ஒப்புமைகள்

**1) மூவிடப்பெயர்**

யான், நான்–நேனு; யாம் – மேமு; நாம் – மனமு; நீன், நீ – நீவு; நீர் – மீரு; அவன் – வாடு; அவர் – வாரு; அது – அதி (அவள், அது); அவை – அவி; தான் – தானு; தாம் – தாமு, தமரு.

**2) வினாப்பெயர்**

எவன்–எவடு; எவர்–எவரு; ஏது (> எது)–ஏதி (எவன், எது); ஏவை – ஏவி.

**3) முறைப்பெயர்**

தாத்தா–தாத்த; தந்தை–தண்ட்ரி; அண்ணன்–அன்ன; தம்பின், தம்பி–தம்முடு; மாமன்–மாம; பிள்ளை–பிட்ட, பில்ல; அவ்வை–அவ்வ; தள்ளை–தல்லி; அக்கை–அக்க; அத்தை–அத்த; பிடுகு–கொடுக்கு, அன்பன்–அப்ப.

**4) இடப்பெயர்**

நாடு–நாடு; தீவ–தீவி; வைப்பு–வைப்பு; இடம்–எடமு; தாவு–தாவு; இல்–இல்லு; குடிசை–குடிசெ; அறை–அர; தெரு–தெருவு; ஊர்–ஊரு; சந்து–சந்து; தோட்டம்–தோட்ட; கோட்டை–கோட்ட; சாலை–சால; புறக்கடை–பெறடு; பந்தல்–பந்தலி; தோப்பு–தோப்பு; கடல்–கடலி; குன்று;கொண்டெ; கணவாய்–கணம்; களஞ்சியம்–கணஜெமு; ஆறு–ஏரு; புலம்–பொலமு; களம்–கள்ளமு; செறு–சேனு; வயல்–பயலு; மண்–மன்னு.

**5) காலப்பெயர்**

காலம்–காலமு; நிலா–நெல; பகல்–பகலு; ஆண்டு–ஏடு; வேளை–வேள; நெருநல்–நின்ன; முன்னாள்–மொன்ன; இன்றைக்கு–நேட்டிக்கு; இராத்திரி–ராத்ரி; சாயுங்காலம்–சாயங்காலமு; பொழுது–ப்ரொத்து; பருவம்–பருவமு; சமையம்–சமயமு; நாள்–நாடு.

**6) சினைப்பெயர்**

தலை–தல; நுதல்–நுதுரு; கண்–கன்னு; கண்புருவம்–கனுபொம; கண்ணீர்–கன்னீரு; மூக்கு–முக்கு; பல்–பல்லு; நாக்கு–நாலுக; செவி–செவி; தாடி–தாடி; தவடை–தவட; முகம்–முகமு;

